உ
ஓம்
தத் சத்
பிர்மமே ஸத்யம்

# நன்னிலம் ஸ்ரீமத் தாண்டவராய சுவாமிகள்

இயற்றியருளிய

# கைவல்ய நவநீதம் (மூலமும்)

நாங்கூர்

## ஆனந்தாஸ்ரமத் தலைவர், வேதாந்தகேசரி

## ஸ்ரீமத் வாசுதேவானந்தா சுவாமிகள்

## இயற்றியருளிய கைவல்ய நவநீத உரையும்

## (எனது நிஜசொரூபம், பாகம் 1, 2)



மறுபதிப்பு : கணபதி பதிப்பகம்
1/349, திருப்பூர்க்குமரன் தெரு, பாடியநல்லூர், சென்னை - 600 052.

உ

ஓம்

தத்சத்

பிர்மமே ஸத்யம்

# நன்னிலம் ஸ்ரீமத் தாண்டவராய சுவாமிகள்

இயற்றியருளிய

# கைவல்ய நவநீதம் (மூலமும்)

நாங்கூர்

ஆனந்தாஸ்ரமத் தலைவர், வேதாந்தகேசரி

## ஸ்ரீமத் வாசுதேவானந்தா சுவாமிகள்

இயற்றியருளிய கைவல்ய நவநீத உரையும்

## (எனது நிஜ சொரூபம், பாகம் 1, 2)

என்னும் உரையும்



மறுபதிப்பு :

**கணபதி பதிப்பகம்**

1/349, திருப்பூர்க்குமரன் தெரு,

பாடியநல்லூர், சென்னை - 600 052.

## பொருளடக்கம்

முதற்பதிப்பு : 1983 - 1984

மறுபதிப்பு : 25.10.2016

உரிமை : ஆனந்தாஸ்ரமம், திருநாங்கூர்.

ஆசிரியர் : ஸ்ரீமத் வாசுதேவானந்தா சுவாமிகள்

நூல் பொருள்: மூலமும், விளக்க உரையும்

படிகள் : 500

பக்கங்கள் : 240

அளவு : டெம்மி 1/8

கணினி அச்சு: பிரியங்கா கிராபிக்ஸ்
பெரம்பூர்,சென்னை - 600 011.

மொழி : தமிழ்

தாள் அச்சு : பிரியங்கா கிராபிக்ஸ்
பெரம்பூர், சென்னை - 600 011.

வெளியீடு : கணபதி பதிப்பகம்
எண். 1/349, திருப்பூர்க்குமரன் தெரு,
பாடியநல்லூர், சென்னை - 52.
கைபேசி : 94440 14117

## நூல் விளக்கம்

இந்நூல்

# தவத்திருமதி. சகுந்தலா ஆறுமுகம் அவர்கட்கு

## காணிக்கை



தாய்க்குலத்தின் ஒளி விளக்கே!!

ஸ்ரீமத் வாசுதேவானந்தா சுவாமிகளுக்கு அரும்பெரும் தொண்டாற்றிய பலருள் உங்களின் மகத்தான சேவையை என்றும் மறக்க முடியாத நிலையில் சுவாமிகள் இயற்றிய எனது நிஜசொரூபம் ஒன்று மற்றும் இரண்டு பகுதிகளை (கைவல்ய நவநீத மூலமும் உரையும்) ஒரே நூலாக மறுபதிப்பு செய்து உங்களின் நினைவாக இப்பூவுலகிற்கு காணிக்கையாக்குகிறோம்.

இப்படிக்கு,
**கணபதி பதிப்பகம்**
**மற்றும்**
**சுவாமிகளின் சீடர்கள் குழாம்**

# நினைவுப் பதிவுகள்



திருநாங்கூரில் ஸ்ரீலஸ்ரீ வாசுதேவானந்தா சுவாமிகள் இறுதிக் காலம் வரை கைம்மாறு கருதாது நிஷ்காமிய கர்மமாக தொண்டு செய்து வந்துள்ளார்கள். சீடர்களாகிய எங்களுக்கு தாயினும் சாலப் பரிந்து கருணையுடன் வேதாந்த பாடங்களை எளியமுறையில் போதித்தும் வழக்கு நடைத் தமிழில் வேதாந்த விளக்கங்களும் தந்து கடிதம் மூலமாகவும் தெளிவு படுத்தி உள்ளார்கள். சுவாமிகளின் கையேட்டுப் படிவங்களை முன்பே சரிபார்த்து நூல் வடிவம் செய்து வெளியிட்டுள்ளோம். அத்தொகுப்பில் ஒன்றுதான் எனது நிஜசொரூபம் பகுதி ஒன்று மற்றும் இரண்டும் ஆகும். இதன் முதற்பதிப்பு வெளியிட பொருளுதவி செய்தவர்கள் திரு. செ.முருகேசன் அவர்கள், திரு. ஆறுமுகம் அவர்கள், திரு கணபதி அவர்கள், திரு. ஏகாம்பரம் அவர்கள் மற்றும் திரு. குஞ்சிதபாதம் அவர்களும் ஆவார். மனிதநேய மாமணி திரு. கு.தியாகராஜன் சுவாமிகளின் தன்னார்வ தொண்டு ஊழியத்திற்கு, ஈடு இணையாக நம்மில் ஒருவரை குறிப்பிட இயலாத நிலையில்தான் உள்ளோம். இது மிகையல்ல.

எனக்கு தெரிந்தவகையில் என்னுடன் இணைந்து பொருளுதவி செய்தவர்கள் இவர்கள்தான். சுவாமிகளின் எண்ணத்தின் வெளிப்பாட்டை எழுத்து வடிவும், சொல்வடிவும் கொடுத்து எழுதியவர் திரு.சீனிவாசன் அவர்கள் ஆகும்.

இப்பொழுது கைவல்ய நவநீதம் என்கிற எனது நிஜசொரூபம் பகுதி ஒன்றும் மற்றும் இரண்டும் இணைத்து, திரு. தியாகராஜன் சுவாமிகளின் தூண்டுதலாலும், முயற்சியாலும் ஒரே நூலாக வெளி வருகின்றது. முன்னர் கைவல்ய நவநீதம் முதற்பகுதியும், இரண்டாம் பகுதியும் பாடல்கள் இல்லாமல் வெளிவந்தன. ஆனால் தீர்க்கதரிசி திரு. தியாகராஜன் சுவாமிகள், பாடல்களுடன் விளக்கவுரையும் இருந்தால் படிக்கின்ற வாசக அன்பர்களுக்கு பெருந் துணையாக இருக்கும் என்று சொன்னார்கள். ஆகவே பாடலுடன் விளக்கமும் இணைத்து பதிப்பிக்க எண்ணி முறையாக இரண்டு பகுதிகளும் ஒரே நூலாக வெளிவருகிறது. ஆன்மநேய ஒருமைப் பாட்டுடைய மெய்யன்பர்கள் இந்நூலை வாங்கிப் படித்து ஜீவன் முக்தர்களாக வாழ்வாங்கு வாழ வாழ்த்துகிறேன்.

இங்ஙனம்

**வை.மாயழகு சுவாமிகள்**

(ஓ/இ) சிங்கப்பூர்

சுவாமிகளின் சீடர்

திருநாடன்பட்டி,

புதுக்கோட்டை மாவட்டம்.

# பதிப்புரை

புனிதமான மனித வாழ்வைப் பெற்ற நாம் மனிதனாக வாழ வேண்டும் என்பதும் புனிதமானவர்களுடன் நாம் சகவாசம் கொள்வதும், புனிதர்களை குருமார்களாக பெறுவதும் புனிதமானவர்களைப் பெற்று நாடு செழிக்க செய்வதும் எல்லாம் அவன் செயலே.

நாங்கள் பெற்ற புனிதமானவரே, அன்பும், பண்பும், நேசமும், பாசமும், ஈகையும், உவகையும் உடைய தவத்திரு. மாயழகு சுவாமிகள் என்று சொன்னால் அது மிகையாகாது. அவர் பெருமையை எழுத்தாலும் எழுதி முடியாது.

வேதாந்த உலகுக்கு உள்ள உவகையுடன் பணிபுரியும் மனிதர்களை இனம் காண்பதில் சுவாமிகளின் தேர்வு எப்பொழுதுமே ஏமாற்றிய தில்லை. பிறந்தது மட்டும் இந்தியாவில் தமிழ் நாடாயிருந்தாலும் இளமைக் காலம் முதல் அவருடைய வேர்வைத் துளிகள் சிங்கப்பூர் நகருக்கே என்று சொல்லும்பொழுது தமிழ்நாடு ஏன் அந்த பாக்கியத்தை பெறவில்லை என்று தோன்றுகிறது.

இருப்பினும் முன்வினைப் பயனாக நற்கர்ம வினைகளின் காரணமாக வேதாந்த குடும்பத்திற்கு தன் வாழ்வை முழுமையாக அர்ப்பணித்த ஒரு மாமனிதர் திரு. சுவாமிகள் என்று சொல்லியே ஆகவேண்டும். என்போன்ற பலர் நன்கு பரிச்சயமாகாத நிலையிலும் எங்களை ஊக்குவிக்கும் பேராற்றல் அவர்களிடத்திருந்தது. அவர்கள் செய்யாத நற்பணிகளே இல்லை. அவர் தன் குருநாதர் மீது கொண்டுள்ள அளவற்ற மதிப்பும், மரியாதையும், பக்தியும் தான் மீண்டும் மறுபதிப்பாக இந்நூல் வருவதற்கு முக்கிய உந்துதல் ஆகும். அவர் மட்டுமின்றி அவருடன் வாழ்ந்த நண்பர்கள், சிங்கப்பூர் நண்பர்கள் சுவாமிகளின் பேராற்றலை எப்படியெல்லாம் போற்றினார்கள் என்பதை அந்நண்பர்கள் குழு வெளியிட்ட நூல்கள் மூலம் அறியலாம்.

கைவல்ய நவநீதத்தை அளித்த ஸ்ரீ தாண்டவராய சுவாமிகளும் அவர்களின் குருவான ஸ்ரீ நாரணர் வழி வந்த வேதாந்திகளுள், ஸ்ரீமத் வாசுதேவானந்தா சுவாமிகள் குறிப்பிட தக்கவர் என்பது அவர்களின் இந்த உரைநூல் மூலம் அறியலாம். சுவாமிகள் நாம் வாழும் இந்நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பதில் நாம் பெருமை பெறலாம்.

அவர்களின் எளிய உரை எல்லோராலும் புகழப் பட்டிருந்தாலும் எம்மைப் போல் அறியாதவர்கள் பலர் இருப்பது அறிந்து அதன் மறுபதிப்புக்கு வித்திட்டவர் வள்ளல் திரு. மாயழகு சுவாமிகள் என்பதுதான் நிதர்சனமான உண்மை. தன் குருநாதரின் படைப்புகளை பாதுகாத்து, வரும் சந்ததிக்கு சமர்ப்பிப்பதில் அவர்களின் முயற்சி அளப்பரியது. இந்நூல் வெளிவர அனைத்து உதவிகளும் புரிந்த வேதாந்த குருமார்களுக்கும், அன்பர்களுக்கும் சுவாமிகளின் ஆசி உண்டு என்பதில் ஐயமில்லை.

எது எவ்வாறாயினும் இப்பதிப்பு வெளிவருவது எளிமையான எம்போன்றோர்க்கு உதவும் என்பதில் ஐயமில்லை. இந்நூலை உரை செய்த சுவாமிகளுக்கும் உடன் தொண்டாற்றிய மாமனிதர்களுக்கும் இன்றும் அவரைப் போற்றுகின்ற சீடர்களுக்கும் இப்பதிப்பகம் மிகவும் பணிந்து நன்றியை சமர்ப்பிக்கிறது. எல்லோரும் நலம் பெற நல்வாழ்வு வாழ இந்நூல் வழிகாட்டும் என்பதில் ஐயமில்லை. கற்று பயனடைவோமாக!

எல்லாம் அவன் செயல்

இவண்

**கணபதி பதிப்பகத்தார்**

பாடியநல்லூர், சென்னை - 52.

கைபேசி : 9444014117



ஓம் தத் சத்
பிர்மமே ஸத்யம்
அதுவே நித்யம்

# அணிந்துரை

எங்கள் குருபிரான் வாசுதேவானந்தா சுவாமிகள் திருவடிகளைப் பணிந்து இந்த முன்னுரையை V.R.A.ஆறுமுகம் எழுதுகிறேன். எனது தோற்றம் திருநாங்கூர் குச்சிபாளையம். எனது பள்ளிப் படிப்பு திருநாங்கூரில் 8வது வகுப்பு வரையில் படித்துக்கொண்டு இருந்த தருணத்தில் பக்தி மார்க்கமும் அதிகமாக இருந்தது. அந்த காலகட்டம் 1945 இருக்கலாம். அத்தருணத்தில் தான் சுவாமி வாசுதேவானந்தா அவர்கள் வடதிசையில் இருந்து தென்திசை குமரி நோக்கி கால் நடையாக திருநாங்கூர் வந்து அடைந்தார்கள். அப்போது தான் எதிர்பாராமல் அவரை ஆன்மிகத்தில் நாட்டம் கொண்ட திரு.சீனிவாச முதலியார் அவர்களை சந்தித்தார்கள். சுவாமி வாசுதேவானந்தாவிடம் உள்ள ஆன்மிக கருத்துக்கள் திரு.சீனிவாச முதலியார் அவர்களை அதிகம் ஈர்த்தது. அதன் காரணமாக சுவாமிகளுக்கு "ஆனந்தாஸ்ரமம்" என்ற பெயரை உடைய மடத்தையும் கட்டிக் கொடுத்து இங்கேயே தங்கவைத்து ஆன்மிக பாடங்களையும் கேட்டறிந்தார்கள். அந்த கால கட்டத்தில்தான் சுவாமி வாசுதேவானந்த சுவாமிகளை நான் சந்திக்கவும், ஆன்மிகப் பாடங்களை செவியுறவும் நேர்ந்தது.

நான் சுவாமி வாசுதேவானந்தாவிடம் மாணவனாக இருந்த நேரத்தில் தான் வெளிநாடு (சிங்கப்பூர்) செல்ல வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. சுவாமியின் ஆசீர்வாதம் பெற்று சிங்கப்பூர் சென்றேன். சென்ற உடன் முதல் கடிதம் எழுதினேன். சுவாமிகள் முதல் பதில் கடிதத்திலேயே,

"திரைகடல் ஓடியும் திரவியம் தேடு" என்று ஔவை பிராட்டியார் கூறி இருப்பது போல். முயற்சியை கைவிடாமல் முயற்சி செய்து பாருங்கள் ஆத்மா சர்வசாட்சியாய் இருப்பதால் நீங்கள் நினைத்த காரியம் கைகூடும் எக்காரணத்தை கொண்டும் சோர்வு அடைய வேண்டியதில்லை. நாம் சச்சிதானந்த சொரூபமான ஆத்மாவாகவே இருக்கிறோம் என்று எழுதினார்கள்.

ஔவைப் பிராட்டியின் ஒரு குறள்

"தன்னையறியும் அறிவுதனை அறியில்
பின்னைப் பிறப்பில்லை வீடு."

இதன் பொருள் : இந்த உடம்பை நான் என்று அறிந்த அறிவு எதுவோ அந்த அறிவே கடவுள் சொரூபமாகும் என்று ஐயம் திரிபு அற உணரில் அதுவே வீடு அதாவது மோட்சமாகும்.

இப்படி ஆன்மிக கருத்துகள் அடங்கிய கடிதங்களை சுவாமி எழுதினார்கள். இந்த ஆன்மிக அறிவை நாம் ஒருவன் மட்டும் இந்த இன்பத்தை பெற்றதில் பயன் இல்லை. இந்த வையகம் பெற வேண்டுமே என்று தேடினேன். அப்பொழுதுதான் சிராங்கூன் ரோட்டில் "திருவள்ளுவர்" நூல் நிலையம் வைத்திருந்த திரு.முருகேசன் அண்ணன் கிடைத்தார். பெரியோர்களை பார்த்தால் போறும், சொல்லைக் கேட்டால் போறும். பிறவிப் பெருங்கடல் நீந்தி கரையேரலாம் என்று போதித்த சுவாமிகள் கடிதங்களைத் தொகுத்து அவரைப் படிக்க வைத்தேன். சுவாமிகளை அறிமுக படுத்தினேன். சுவாமிகளும் முருகேச அண்ணனுக்கு கடிதங்களையும் இராமனாதபுரம் கணபதிக்கு கடிதங்களையும் டாக்டர். முத்து அவர்களுக்கு கடிதங்களையும் எழுதியுள்ளார்கள். திரு. சுவாமி மாயழகு அவர்களை சுவாமியிடம் அறிமுகப்படுத்தி ஆன்மிகத்தில் மூழ்கச் செய்தேன். மேலும் எனது துணைவி திருமதி. சகுந்தலா முழு அர்ப்பணிப்புடன் சுவாமிக்கு சேவை செய்துள்ளார்கள். தற்போது ஆனந்த ஆஸ்ரமத்துடன் அமைந்துள்ள பள்ளியின் தாளாளர் திரு. தணிகாசலம் அவர்கள் ஆன்மிக ஈடுபாடு கொண்டு சுவாமிகளின் குருபூசைக்கு உதவிகள் செய்து வருகிறார்கள்.

நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை

என்ற உணர்வோடு காலத்தையும் நேரத்தையும் பாராமல், தான் பெற்ற இன்பம் இந்த வையகம் பெறட்டும் என்ற நோக்கத்தில் சென்னை கணபதி பதிப்பகம் தியாகராஜ சுவாமிகள் தன்னை ஆன்மீகத்தில் ஈடுபடுத்தி பெரும் பணி ஆற்றி வருகிறார்கள். வாழ்க சுவாமிகள்.

சுவாமி வாசுதேவானந்தா அவர்கள் தமிழ்நாட்டில் தோன்றி ஆதிசங்கரர் முதல் அனைத்து பெரியோர்களின் நூல்களையும் ஆராய்ந்து அலசி எடுத்திருக்கிறார்கள். அத்துடன் திருவாரூர் சௌந்தர்ராஜ பிர்மத்தை சந்தித்தும் வீரதிர அஞ்சா நெஞ்சம் படைத்த திரு.கிணகர் சுவாமிகளை சந்தித்தும் உரையாடியுள்ளார்கள். நன்னிலம் தாண்டவராய சுவாமிகளின் கைவல்ய நவநீதம் சுவாமிகளை மிகவும் ஈர்த்தது. அதற்கு உரை இரண்டு பகுதிகளாக எழுதி வைத்தார்கள். இதன் முதற்பகுதி 1983லும் இரண்டாம் பகுதியை 1984லும் வெளியிடப்பட்டது. இப்போது 2 பகுதிகளையும் இணைத்து திரு. மாயழகு அவர்களின் முயற்சியால் வெளியிடப் படுகிறது. இப்படி இவை எல்லாவற்றிற்கும் காரணமாக இருக்கும் பெருமை தீர்க்கதரிசி கணபதி பதிப்பகம் சுவாமி தியாகராஜன் அவர்களை சார்ந்துள்ளது.

"பெறும் அவற்றுள் யாம் அறிவது இல்லை
அறிவார்ந்த மக்கட்பேறு அல்லபிற"

இக்குறளுக்கேற்ப எனது மைந்தர்கள் ஆ.அறிவழகன், ஆ.அன்பழகன் அவர்களும் குருநாதர் அருளால் ஆன்மிகத்தில் ஈடுபாடு கொண்டு, ஆன்மிகப் பணி செய்து கொண்டு வருகின்றார்கள். அவர்கள் பணி தொடர குருநாதர் அருள் புரிவாராக!!

வள்ளுவப்பெருந்தகை அகரத்தையும் வானத்தையும் கொடுத்து இறை அருளை வெளிச்சம் ஆக்கினார்.

"ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு"

என்ன அருமையான குறள். வாழ்க வள்ளுவர் !!

இங்ஙனம்
குருநாதர் அருளாசியோடு
நன்றியுடன் சமர்ப்பிக்கும்
**இரா. ஆறுமுகம்**
திருநாங்கூர், சீர்காழி,
நாகை மாவட்டம்.

ஸ்ரீமத் வாசுதேவானந்தா சுவாமிகளின்
ஆசி பெற்றவர்



## தவத்திரு. **வீ.ரெத்தினம் முதலியார் சுவாமிகள்**

(சுவாமிகளின் பிரதான நேரடி சீடர்,
நாங்கூர்.)

ஸ்ரீமத் வாசுதேவானந்த சுவாமிகளின் அணுக்க சீடராகவும்
இறுதி நாள் வரை தொண்டு புரிய வாய்ப்பு பெற்ற
தவத்திரு. வீ.ரெத்தினம் முதலியார் சுவாமிகள் அவர்களையும்
இந்நூல் மூலம் அறிமுகப்படுத்தி நன்றி செலுத்துகிறோம்.

இங்ஙனம்
**கணபதி பதிப்பகம்**
மற்றும்
**சுவாமிகளின் சீடர்கள் குழாம்**

உ
பிரஹ்மமே - ஸத்யம்
அதுவே நித்யம்

**இந்நூல் முதல் பதிப்பாக 1983 ம் ஆண்டு வெளியிடப்பட்டபொழுது எழுதப்பட்ட**

# மதிப்புரை

குருர் பிரம்மா குருர் விஷ்ணு குருர் தேவோ மகேஸ்வர :
குரு சாக்ஷாத் பரப்பிரஹ்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம :

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தைக் கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே.

ஆர்வமுள்ள ஆன்மநேய ஆர்வலர்களே !

நம் யாவரின் மதிப்பிற்கும் மரியாதைக்கும் அணிகலனாக திகழ்ந்து, நம்மையெல்லாம் பேரின்பக் கோட்டைக்கு இட்டுச் சென்று, எனது கடமைகள் யாவும் முடிந்துவிடவில்லை; அதைத் தொடர்ந்து செயலாற்ற பேரறிவு உங்களை தடுத்தாட் கொண்டுள்ளது என்று கூறாமல் கூறிச்சென்றுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா! அன்பர்களே! நமது குருபிரான் அவர்களின் எண்ணத்தை பூர்த்தி செய்ய வேண்டியது நமது தலையாய கடமை.

சுவாமி வாசுதேவானந்தா அவர்களின் பூதவுடல் மறைந்தாலும் புகழுடம்பு என்றென்றும் நமது செயல் யாவற்றிலும் உறுதுணையாக, நிகழ்ச்சிப் பொருளாக இருப்பதாக நினைத்துக் கொண்டு செயலாற்றுவோம்; அதுவே நாம் செய்கின்ற குருத்தொண்டாகும்.

சுவாமி அவர்கள் கையேட்டுப் பிரதியாக விட்டுச்சென்றவற்றை தெளிவு செய்து, நமக்கும் நாட்டுக்கும் நலன் பயக்கக் கூடியவற்றை நாம் நூலாக வெளியிடவும், சுவாமி அவர்களின் எண்ணத்தை ஈடேற்றவும், அதற்கு உறுதுணையாக சுவாமி ஸாது பிர்மானந்தா அவர்கள் முன்னின்று முனைப்பாக செயல்புரிய பேரறிவு நமக்களித்த வரப்பிரசாதம் என்பதனை உணர்ந்து, சுவாமி ஸாதுபிர்மானந்தா அவர்களுக்கும் முழு ஒத்துழைப்புக் கொடுத்து "கைவல்ய நவநீத சாரம்" என்ற நூலினையும் அச்சேற்றி உலா வருவதற்கு உறுதுணையாக நின்று கடனாற்றுவோம்.

கைவல்யம் இரு படலங்களாக உள்ளது என்பது யாவரும் அறிந்ததே. இவ்விரு படலங்களையும் தற்கால மக்களின் வாழ்க்கை முறை அமைப்பிற்கேற்ப எளிய நடையில் வலிய கருத்துக்களையும் பசுமரத்தாணிபோல் வாசிப்போர் உள்ளங்களில் இலகுவாக பதியும் முறையில் தெளிந்த நடை, தேர்ந்த நடை என்பதனையும், வாசிப்போர் ஒவ்வொருவரும் உய்த்துணரலாம். அத்தகைய உயரிய பொருள் பொதிந்த "கைவல்ய நவநீத சாரம்" எனும் நூலில் சிறப்பான முறையில் முதல் பகுதியாக வெளிவருகின்றது. இதைத் தொடர்ந்து சுமார் நான்கு பகுதிகளாக கைவல்ய சாரத்தையும் வெளியிட எண்ணியுள்ளோம். வாசக மெய்யன்பர்கள் வாங்கிப் படித்து உண்மை நிலையறிந்து, ஆத்ம ஞான சிகாமணிகளாக வாழவேண்டும் என்பதே எங்கள் உள்ளக்கிடக்கை.

அந்த வகையில் நாம் உயர்ந்த எண்ணங்களை வளர்த்துக் கொள்வோம்; உண்மை நெறிக்கு புறம்பானவற்றை உதறித் தள்ளுவோம்; உறுதியற்ற செயல்களில் முயன்று செயல் படாதிருப்போம்; மனித குலத்திற்கு நன்மைதரும் செயல் பாடுடையோராக இருப்போம்; பொறுமையோடு உறுதியான மனம் படைத்தவர்களாக இருப்போம்.

உலக மக்களின் மேன்மைக்காக பாடுபடும் ஞானிகள், நீண்ட கால இடைவெளிக்கு பின்புதான் உலகில் பிறக்கிறார்கள். அப்படிப்பட்ட ஞானிகளினால், நாம் வாழும் உலகம் நிறைவான பயனைப் பேரளவில் பெறுகிறது என்பது உலகப் பிரசித்தம்.

இதோ ஆதிசங்கரர் நல்லோரின் இணக்கத்தைப் பற்றி கூறுவதைப் படித்துப் பார்ப்போம் :

ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்;
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்,
நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம்
நிஸ்சலதத்வே ஜீவன்முக்தி.

இதன் பொருள், "நீ உண்மையான பொருளை அறிந்து நல்லோர்களுடன் சேர்ந்து பழகினால், உலகப்பற்றை அறுப்பாய்; உலகப் பற்று நீங்கினால், உன் மயக்கம் தொலையும்; மயக்கம் தொலைந்தால் சாசுவதமான பரம்பொருளை அறிவாய். அதை

அறிவதால் நீ இந்த உலகில் வாழ்ந்திருக்கும்போதே ஞானியாக, அதாவது ஜீவன் முக்தனாக ஆகிவிடுவாய். இவ்வுலகிலேயே பேரின்பத்தை அடைந்திடலாம்" என்பது இதன் கருத்து.

அன்பு அறிவு ஆண்மை
உள்ளொளி ஒளிரும் உதயக் கதிர்
செந்தண்மை பூண்டொழுகும் செந்நாப்புலவர்
ஒழுக்கத்தால் விழுப்பம் உடையோன்
அரிமா நெஞ்சம் பேரறிவின் மஞ்சம்
எண்ணத்தில் தூய்மை வாய்மையில் உண்மை
ஊகம் ஊக்கம் உணர்வுரையாளன்
உலகம் உவப்ப உரைத்திட்ட பெரியோன்
ஔவியம் அகற்றிய ஆத்ம சீலன்
அறிவொளி ஒளிரும் அந்தணன்
ஆத்ம ஞான பேரின்ப நாதன்.

இப்படி எத்தனையெத்தனையோ கூறலாம். நம் அனைவரின் உள்ளத்திலும் உள்ளொளி வீசும் பெருஞ்சுடராய் பிரகாசித்துக் கொண்டிருப்பவர்தான் நமது குருபிரான் ஸ்வாமி வாசுதேவானந்தா அவர்கள் என்றால் மிகையாகாது. ஆகவே, நண்பர்களே நீங்கள் யாவரும் இவ்வரிய நூலினைப் பெற்று, கருத்தூன்றிப் படித்து ஜீவன் முக்தர்களாக வாழ்வாங்கு வாழ வாழ்த்துகின்றோம்.

சற்குரு வாழ்க. குருவே துணை.

இப்படிக்கு,

**செ.முருகேசன்**

திருநாங்கூர்.

**வை.மாயழகு,**

திருநாடன்பட்டி,

புதுக்கோட்டை தாலுக்கா.

உ

பிர்மமே ஸத்யம்

# முகவுரை

நாம் காணும் இவ்வுலகில் தோன்றியுள்ள ஜீவராசிகளுக்குள் மானிட வர்க்கமே உயர்வாக மதிக்கத் தக்கதாம். எல்லாவற்றையும் அறியும் ஆற்றல் பெற்றுள்ளது மானிடப் பிறவியாம் என்பது எல்லோருடைய அனுபவமாம். இத்தகைய மானிடப் பிறவியில், அறிய வேண்டிய அனேக விஷயங்களிருப்பினும், அவற்றுள் அறம், பொருள், இன்பம், வீடாய நான்கில் பெரியோர்களால் போற்றப்படுவது வீடாம். வீடு, மோக்ஷம், முக்தி, பரமபதம், பேரின்பம் என்பன ஒரு பொருளையே குறிக்கும் சொற்களாம். பேரின்பத்தை அறிவிப்பதற்காக பண்டைக்கால ரிஷிகளும், முனிவர்களும் தாங்கள் தங்கள் மாணவர்களுக்காக உபயோகிக்கப்பட்டு வந்த சொற்களாதலின் அவைகளின் பொருள் ஒன்றேயாம். இத்தகைய சொற்களால் அறிவிக்கப்பட்ட பொருள் யாதாயிருக்கலாமென்று அறிய வேட்கையுடையாரை நோக்கி அது உன் உண்மைச் சொரூபமே என்று நான்கு வேதங்களும் முடிவில் கூறி விட்டன. அவ்வேத வாக்கியங்களைக் கேட்பவர்களுக்கு அனுபவமாகும்படி உன் சொரூபம், சத்து, சித்து, ஆனந்த, நித்திய, பூரணமான ஐந்து லக்ஷியங்களைச் சொரூப குணமாகப் பெற்றுள்ள ஆன்மாவாம். அதை உன் வாஸ்தவ சொரூபமாக அறிவதே வீடாம் என்று சுருதி யுக்தி அனுபவத்தோடு விளக்கிக் காட்டுவதாலும், ஒருவன் நான் யாரென விசாரிக்க முற்படுவானாயின், அவன் தத்துவ சோதனையில் நான் பிரம வடிவனான ஆத்ம சொரூபனென்று அறிவது உண்மை ஞானமாயிருப்பதாலும், அதுவே மோக்ஷமாயிருப்பதாலும், அந்த ஞான சொரூபத்திற்கு உளவாகும் லக்ஷிய, லக்ஷணங்களை விளக்கிக் கூறுவதாயிருப்பதாலும் இந்நூலுக்கு "எனது நிஜ சொரூபம்" எனவும், "கைவல்ய நவநீத சாரம்" எனவும் பெயர் சூட்டப் பெற்றது. ஒருவன் தன்னை ஜீவனாக மதிக்கும் மதிப்பை நோக்கி, "நீ ஜீவனன்று சச்சிதானந்த சொரூபன்" என்று அறிவிப்பதே வேதாகமங்களின் நோக்கமாயினும், அவ்வுண்மையை அறிய ஆற்றலற்றவர்களாக பலர் காணப்படுவதால் அவர்களுடைய மனோநிலைக்குத் தக்கவாறு உத்தமன், மத்திமன், அதமன் என அதிகாரிகளை மூவகைப்படுத்தி அவர்களுக்குத் தகுந்தவாறு சாஸ்திரங்கள் பலவிதமாக எழுதப்பட்டுள்ளன என்பது தென்மொழி, வடமொழி முதலிய சகல மொழிகளிலும் பிரசித்தமாம். மொழி வேறுபாடு

இருப்பினும் அவைகளால் போதிக்கப்படும் பொருள் ஒன்றேயாம். அத்தகைய பொருள் யாதாயிருக்குமோ என அறிய விருப்பமுடையார் யாராயிருப்பினும் அவர்களே இந்நூலுக்குரிய அதிகாரிகளாவர்.

வேதாகம சாஸ்திரங்கள் எப்பாஷையிலிருப்பினும், பாத்திர பேதத்தால் அமிருதம் பேதப்படாததுபோல், பாஷா பேதத்தால் அதன் உட்பொருளான, ஞானவடிவமான மெய்ப்பொருள் பேதப்படுவதில்லை. அது அபேதமாக யாவர் உள்ளத்தையும் விளக்கிக் கொண்டிருப்பதால் அது ஆகாசத்தைப் போன்று எங்கும் வியாபகமாகவும், நித்தியமாகவும், தானே தானாகவும், மற்றொன்றின் உதவியின்றி விளங்குவதால் அதன்கண் துக்கம் முதலியன மூன்று காலத்துமில்லை. அது ஸ்வஜாதிய, விஜாதிய, ஸ்வகத பேதமற்ற நிரதிசயானந்த வடிவமாமெனக் கூறும் வேதாகமத்தை தழுவி, அதன் கருத்தான ஆத்ம சொரூபத்தை உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்கிக் காட்டுவதால் சர்வதுக்க நிவர்த்தியோடு கூடிய பரமானந்த பிராப்தியே இந்நூலின் பயனாமென்க.

பல சாஸ்திரங்களை கசடறக் கற்றும், பிறர்க்கு உரைத்து உபதேச நெறிபுரிந்தும், பல புண்ணிய காரியங்களைச் செய்தும், பெரிய யோகாப் பியாசங்களைப் பயின்றும், அதனால் மகிழ்ச்சியடைந்தவனானாலும், அவன் தன் வாஸ்தவ சொரூபம் இரண்டற்றது, அது பரமானந்த போத சொரூபமானது, அது மோக்ஷவடிவானது என்று அறியாது போனால் அவனுக்கு பேரின்பம் கிடையாது. ஆகையால், ஆத்ம சொரூபத்தை அறிய விருப்பமுடையார் யாவர்க்கும் இந்நூல் பேருதவி செய்யுமென் பதற்கு ஐயமில்லை. ஒருவன் தன்னை ஜீவனாக அல்லது மனிதனாக மதிக்கும் மதிப்புக்கு விளக்கம் தரும் பொருள், அம்மதிப்புக்கு வேறாக அல்லது மதிப்பாகிய எண்ணங்களால் ஏற்படும் சுகதுக்கங்களுக்கு வேறாக இருந்தாலொழிய தன்னை ஜீவனாகவோ, மனிதனாகவோ மதிக்க முடியாதென்பதையும், அத்தகைய விளக்கம் தரும் பரம்பொருள் ஆனந்த வடிவமாமென்பதையும், அது உன் வடிவமாமென்பதையும் பல மேற்கோள்களுடன் ஆங்காங்கு எடுத்துக் காட்டி விளக்கி யிருப்பதால் இந்நூல் சர்வ சாஸ்திர சம்மதமாமென்க.

உபநிடதத்தின் முடிவை அனுசரித்து ஆதிசங்கரர், விவேகானந்தர் முதலியோர்களால் வெளியிடப்பட்டுள்ள அத்வைத சித்தாந்தத்தை தழுவி இந்நூல் எழுதப்பட்டுள்ளதால் அவர்களின் உள்ளக் கருத்தை சிரம மின்றி இந்நூலில் காணலாம். மதம், சமயம் முதலிய பற்றுக் கோடின்றி தன்னை நடுநிலையாக்கிக் கொண்டு இந்நூலை ஆதியோடந்தம் ஆராய்ச்சி செய்து நோக்கின் ஜீவாத்மா, பரமாத்மாக்களின் ஒருமையை

அறிந்து பேதப்பிராந்தி நீங்கி, அபேதஞானம் உண்டாகி அதனால் பகவத்கீதையின் உட்பொருளான பற்றின்மை என்ற வாளாயுதத்தை கையில் ஏந்தியவனாய் தன் வாழ்க்கையை நடத்த வேண்டுமென்பதே இந்நூலின் நோக்கமாகும். ஜீவாத்மா பரமாத் மாக்களுக்கு பேதம் காணுமளவும் ஜீவனுடைய அறியாமை நீங்காது; நீங்காது போகவே, அதன் காரணமான ஜனனமரண துக்கமும்; சத்தியம், அஹிம்சை, சகோதரத்துவம் முதலிய தூய குணங்களின் இன்மை அதிகரித்து பேதப்பிராந்தி மேன்மேலும் ஓங்கி வளர்ந்து அதனால் தன் உண்மை சொரூபத்தை அறிந்து பேரின்பம் அடைய முடியாது போகுமன்றோ. போகுமானால் துக்க நிவர்த்தியின்றி மக்கள் தவிக்க நேரிடுமென்ற கருணையே இந்நூல் எழுதுவதற்கு காரணமாகும்.

இந்நூல் அளவில் சிறியதாயிருப்பினும் வேதத்தின் சாகைகளெனப்படும் மொத்தமுள்ள 1180 உபநிஷத்துக்களின் சாரமும், மற்றுமுள்ள அறிவாராய்ச்சி நூல்களின் சாரமும் அடங்கியிருப்பதால் இது யாவர்க்கும் சுவானுபவத்தை விளக்கிக் காட்டும் நூலாகுமென்பதற்கு ஐயமில்லை. காணப்படும் இவ்வுலகம் நாமரூபமாகத் தோன்றுகின்றதேயொழிய, பிரமவடிவமாகத் தோன்றவில்லையே என்று உண்டாகும் ஐயத்திற்கு கிரமசிருஷ்டி, உகபத் சிருட்டி, அஜாதவாதம் என சிருஷ்டி வகைகளைப் போதிக்கும் போதனைக் கிரமம் மூவகையாகயிருக்கும் எனவும், அதில் அஜாதவாதமே வேதத்திற்கும், இந்நூலுக்கும் உடன்பாடாம் என்பதையும் இந்நூலில் தெளிவாய் விளக்கப்பட்டிருப்பதால் அத்வைத சித்தாந்தம் வெளிப்படையாய் நன்கு புலனாகுமென்பது எமது துணிபாம். சாஸ்திரங்கள் கடல்போல் விரிந்திருப்பினும் அவற்றை நன்கு ஆராய்ந்தவர்களாயினும் சரி, ஜீவனென்ற சொல்லுக்குப் பொருள் யாதென வினாவின் அதற்கு விடையளிக்க வகையறியாது தடுமாறுகின்றவர்களுக்கு "ஜீவனாகிய உன் வாஸ்தவ சொரூபம் பிரமம்" என வைரமாமலைக்கு ஒப்பாக இந்நூலில் விளக்கிக் காட்டியிருப்பதால் விசார சீலர்களுக்கு சொரூபானுபூதி உண்டாவதற்கு இந்நூல் இன்றியமையாததாமென்க.

சரியை, கிரியை, யோக, ஞான சாஸ்திரங்களில் வல்லவர்களாயிருப்பினும், அவர்களை நோக்கி மோக்ஷமெனப்படுவது அனுபவத்தாலாயதா? அல்லது கேள்வியாலாயதா? அல்லது மறுமைக்கண் வருவதா? என வினாவின், அவ்வினாவிற்கு விடையிறுக்க அறியாது நிற்கும் அவர்களுக்கு "உன் உண்மைச் சொரூபம் மோக்ஷ வடிவானது.

அது ஆனந்த வடிவமானது" என இந்நூல் விடையளித்து நிற்றலின், இது சற்குரு வடிவம் எனினும் அமையுமென்க. பிரஸ்தானத்திரயம் எனப்படும் உபநிஷத், பிரமசூத்திரம், கீதை முதலிய பிரபல சுருதிகள் ஜீவனாகிய ஆத்மாவையே கடவுளாகவும், அதுவே மோக்ஷ வடிவினதாகவும், அதற்கு வேறாக மோக்ஷம் கிடையாதெனவும் கூறுகின்றது. ஆத்மாவாகிய மெய்யுணர்வை விளக்கிக் கூறும் நூல்கள் சுருதிகள் எனப்படும். ஸ்மிருதிகளோவெனின் அவை வாழ்க்கைக்கு ஏற்ற சட்டதிட்டங்களைப் போதிக்கின்றன. அது பராசர ஸ்மிருதி போன்றது. அது அந்தந்த காலத்திற்கேற்றவாறு மாற்றி அமைக்க இடமுண்டு. கிருதயுகத்திற்கு மனு ஸ்மிருதியும், திரேதாயுகத்திற்கு கௌதம ஸ்மிருதியும், துவாபரயுகத்திற்கு சம்கிலித ஸ்மிருதியும், கலியுகத்திற்கு பராசர ஸ்மிருதியும் அனுசரித்து நடக்க வேண்டும் என்பதே ஸ்மிருதிகளின் நோக்கமாகும்.

இனி சுருதியோ எனின், அது மாறுதல் அடையாமல் எப்போதும் ஒருபடித்தாய் நின்று கொண்டு ஆத்மாவையே ஆனந்த வடிவமாகப் போதிக்கின்றது. பிரஸ்தானத்திரய நூல்களில் பந்த மோக்ஷங்கள் போதிக்கப் படவில்லை. அவைகள் ஆத்மாவை மோக்ஷவடிவமெனப் போதிக்கின்றன. அந்த ஆத்மாவைக் கொடுப்பவனுமில்லை; வாங்கு பவனுமில்லை. அது க்ஷேத்திரக்ஞன் (உடம்பை அறிபவன்), அதுவே ஜீவனது உண்மை சொரூபம். அது உபாதி பேதத்தால் உடம்பைத் தானாக அபிமானிக்கும்போது ஜீவனாகின்றது; அபிமானிக்காத போது பிரமமாய் விளங்குகின்றது; அவ்வபிமானமும் அந்தக்கரணங்களின்றிய விடத்து உண்டாகிறதில்லை; அவ்வந்தக்கரணமும், அபிமானமும் ஆத்மாவாகிய தன்னிடத்தில் விவர்த்தமாம். எனவே, ஆத்மாவாகிய தான் எப்போதும் மோக்ஷசொரூபனாம் என்பதே பிரஸ்தானத் திரயத்தின் கருத்தாகும். அதில் சிற்றறிவு, பேரறிவு என்ற பேதம் கூறாமல் "பிரக்ஞானம் பிரமம்" எனக் கூறுகின்றது. அதாவது மெய்யுணர்வே பிரமமெனவும், அது காரியகாரண ரகிதமெனவும், அறிவையன்றி அறிபடுபொருள் இன்றெனவும், அது சொரூபமாக ஆனந்தமெனவும், விஷயானந்தங்கள் அனைத்தும் அதன் அம்ச லேசமெனவும், ஒருவன் கண்ணாடியில் தோன்றும் தன் கற்பனா முகத்தின் வாயிலாக யதார்த்த முகத்தை அறிவதுபோல் தன் யதார்த்த சொரூபானந்தத்தை அறிவதற்கே விஷயானந்தங்கள் அனைத்தும் அமைந்திருக்கின்றன யெனவும் கூறிப்போந்துளது.

இந்த பிரஸ்தானத் திரய நூல்களுக்குப் பின் வெளியான சாஸ்திரங்கள் அளவு கடந்து விரிந்திருக்கின்றதுமன்றி, அவைகள் பெரிய மயக்கத்திற்கு ஏதுவாகவுமிருக்கின்றது. பிரஸ்தானத் திரயத்தில்

கூறாதொழிந்த, அனுபவத்திற்கு ஒவ்வாத பல விஷயங்கள் அவைகளில் மலிந்து கிடக்கின்றன. அதாவது ஜீவாத்மா, பரமாத்மா வென்றும், மெய்யுணர்வு பொய்யுணர்வென்றும், அறிவுக்கு அறிவு என்றும், உயிருக்கு உயிரென்றும், சிற்றறிவு பேரறிவு என்றும், சக்தி சிவமென்றும், ஜீவன் முக்தி, விதேக முக்தி என்றும், வரன், வரிஷ்டன் என்றும், சவிகற்பசமாதி நிர்விகற்பசமாதி என்றும், நனவில் சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்றும், அருள், பரை, ஆனந்தம் ஆனந்தாதீதம் என்றும், அருட்சோதி, பரஞ்சோதி, ஞானஸ்நானம், ஞானப்பால், அமிருதம் பருகல், ஜோதியை தெரிசித்தல், மூலாதாரத்தினின்று குண்டலினி சக்தியை எழுப்புதல், பிரம்மரந்திரத்தில் செல்லுதல், சுழிமுனையில் நாட்டம் கொள்ளுதல், மூலப்புளியை அருந்தல், கருஞ்சேரை, வெண்சேரை உட்கொள்ளுதல் இன்னும் இவைபோன்ற பலபெயர்களைக் கூறி அதன் பொருளை விளக்காமல் போனார்கள். அதில் மதிமயக்கம் கொண்டு ஜீவனுடைய உண்மை சொரூபத்தை அறியாமல் போனதோடு, பிரஸ்தானத் திரயத்தின் பொருளும் அறிய ஆற்றலற்றவர்களாய்ப் போனதும் உலகபிரசித்தமாம். இவ்வாறான மயக்கத்தை ஒழிக்கவேண்டி பிரஸ்தானத்திரயத்தின் அடிப்படை லக்ஷியமான ஜீவனுடைய வாஸ்தவ சொரூபம் தெரிவித்து, அதுவே பரிபூரண பிரமமெனவும், அதன்கண் மேற்கூறியவைகள் யாவும் கற்பனை எனவும், ஜீவத்துவம் சொல்மாத்திரமெனவும், அதற்குப் பொருள் பிரமம் எனவும் அறிவித்து, பற்றின்மையோடு தன் வாழ்க்கை நடத்துவதற்கு ஒரு நூல் அத்தியாவசியமென்ற நோக்கமே இந்நூல் எழுதுவதற்கு காரணமாகும். கடவுளும் மக்களும் வேறாகக் கருதுமளவும் அறிவாளிகளின் கனவாகிய அஹிம்சை, சத்தியம், சகோதரத்துவம், அன்பு, கருணை முதலிய தூய குணங்கள் மக்களிடம் காணவேண்டுமென்பது நனவாகாது என்ற எண்ணங்களாகிய அலைகளால் மோதப்பட்டதின் விளைவாக கடவுளுக்கும், மக்களுக்குமுள்ள தொடர்பையும் அதன் அபேதத்தையும், வேற்றுமையிலுள்ள ஒற்றுமையையும் விளக்கிக்காட்டி யாவரும் கடவுள் சொரூபிகளாதலால், எத்துணையும் பேதமுறாமல் எவ்வுயிரும் தம்முயிர் போல் அபேத நாட்டம் கொண்டு இன்புருவாய் வாழவேண்டு மென்ற நோக்கமே இந்நூல் எழுதுவதற்கு மற்றொரு காரணமாகுமெனக் கூறுவது மிகையாகாது. மனிதன் மனிதனுக்கு பல காரியத்திலும் பயன்படுவதுபோல், மனிதனுக்கு கடவுளால் யாது பிரயோஜனமென்ற ஐயமுடையானை நோக்கி, ஆத்மாவாகிய கடவுளாலேயே மனிதன் உயிர்பெற்று வாழ்ந்து கொண்டிருப்பதே பிரயோஜனமாமென இந்நூல் கூறுவதோடு, மக்களாய்த் தோன்றியவர்கள் தம்முள் பலபேதமாய்த்

தோன்றினும் உண்மையில் அபேதமாய் விளங்கும் நிலையை அறிவிக்கவேண்டி, ஸ்தூல, சூக்ஷ்ம சரீரங்களின் உபாதான காரணம் யாவருக்கும் ஒன்றாய் இருப்பதையும், அந்த உபாதான காரண காரியத்தை இயக்கும் ஆத்மா எல்லோருக்கும் சொரூப மாயிருப்பதாலும், ஒரு தினையளவும் மக்களிடத்தில் பேதம் காணாமல் சகோதரத்துவம் காணவேண்டும். இவ்வாறு காணாமைக்குக் காரணம் அறியாமையாம். இந்த அறியாமை நீக்குவான் வேண்டி யன்றோ பிரஸ்தானத்திரய நூல்களும், பெரியவர்களும் ஆத்மாவாகிய கடவுளைப் பற்றிப் போதிக்க முற்பட்டனர். அந்நோக்கத்தை எளிதில் புலனாகும்படி விளக்க வேண்டுமென்னும் எழுச்சியே இந்நூல் எழுதுவதற்கு மற்றுமொரு காரணமாகும்.

கடவுள் பல்வேறு வடிவமாகக் காக்ஷியளிப்பதாகவும், அதைக் கண்டும் கேட்டும் மகிழ்ச்சியடையும் எனது அன்பு மிக்க சகோதரர்களை நோக்கி கடவுள் சேதனமா? அசேதனமா? என வினாவின், அதற்கு விடையளிக்க இடமின்றித் தடுமாறுகின்றதை நோக்கி உள்ளம் உடையாதவர்கள் சான்றோர்களாவாரோ? புலவர் சிகாமணிகளும் சேதனமே கடவுளெனக் கூற, அவர்களுக்கு நா கூசுகின்றது. மனம் தடுமாறுகின்றது. மறைமுகமாகவும் பேசுகின்றது. ஆனால் சேதனமே கடவுள் என்பதை பிரஸ்தானத்திரயங்கள் 190 கோடி வருஷமாகக் கூறிப் போந்த பொருளை ஒருவர் மறைக்க முடியுமா? முடியுமானால் வாழையடி வாழையென சேதனாசேதன விசாரம் செய்து சேதன வடிவமான ஆத்ம சொரூபம் மோக்ஷவடிவமானது என அறிந்தும், உலகம் தன் பிரதிபலனமேயெனக் கண்டும் இன்புருவாய் வாழ்க்கை நடத்திய திடஞானிகளின் சரிதங்கள் பிரஸ்தானத்திரயத்தில் மலிந்து கிடப்பதைக் காணலாம்.

சேதனாசேதன விசாரத்தை, சுருதி யுக்தி அனுபவ வாயிலாக விளக்கிக் காட்டுவதற்கு வினாவிடையாக ஓர் நூல் இயற்றுவது பாரத நாட்டுக்கு நாம் செய்யும் முக்கிய பணிகளில் ஒன்றாகுமெனத் தோன்றியதே இந்நூல் எழுதுவதற்கு பின்னுமொரு காரணமாகும். தற்காலம் வேண்டுவது வேதாந்தமா என்ற கேள்விக்கு "ஆம்" என விடை அளிக்க இன்னும் சிலர் மயங்குகின்றனர். மூலையில் பதுங்குகின்றனர். தியானத்தில் அமர் கின்றனர். வேதாந்தமெனப் படுவது வேதத்தின் முடிவில் கூறியுள்ள ஆத்மாவின் சச்சிதானந்த நித்தியபூரணத் தன்மையை அறிவிப்பதாம். இங்ஙனம் அறியாவிட்டால் அன்பு, சகோதரத்துவம் முதலியன எங்ஙனம்

உண்டாகும்? உண்டாகாவிட்டால் அன்பே சிவமென்பதன் பொருள் யாதோ? எனவே வேதாந்தமின்றி பேரின்பத்தின் எல்லை காணமுடியாது. எல்லா இன்பங்களும் ஆத்மாவில் முடிகின்றது. ஆத்மாவைவிட அதிக இன்பமுடைய பொருள் உலகில் இல்லை. ஆகையால் ஆத்மாவின் சொரூபத்தை அறிவிப்பதே வேதாந்தமாம். இந்த வேதாந்தத்தின் நிலையறியாத காரணத்தால் அர்ஜுனன், ராமன் முதலியவர்களின் வாழ்க்கைத் தடைபட்டது. அதை அறிந்த பின் அவர்களின் வாழ்க்கை இன்பமயமாக இருந்தது என்பது உலகப் பிரசித்தம். ஆத்மாவாலே யாவும் விளங்குவதாலும், எல்லோருக்கும் ஆத்மா சொரூபமாகை யினாலும், அந்த ஆத்மாவை லக்ஷியமாகக் கொண்டு இந்நூல் எழுதப் பட்டிருப்பதாலும், இந்நூலுக்கு யாராவது குற்றம் காணுவரேல் அது அவர்களின் ஆத்ம சொரூபத்தில் குற்றம் காணுவதாகுமென்பதற்கு ஐயமில்லை. தோஷரகித ஆத்மாவில் தோஷம் காணுவது கூடாதாகையால் என்க.

வேதாகமங்களில் ஆத்மாவைப் பற்றியே பேசப்பட்டுள்ளது. அக்னிக்கு உஷ்ணம், பிரகாசம் சொரூப குணமாயிருப்பது போலும், ஜலத்திற்கு குளிர்ச்சி, மதுரம் சொரூப குணமாயிருப்பது போலும், இன்னும் இவைபோல் இயற்கை வஸ்துவிற்கு பல நிகழ்ச்சிகள் காணப் பட்டாலும், அதனதன் சொரூப குணத்திற்கு அது வேறாகக் காணாதது போல் ஆத்மாவிற்கு சச்சிதானந்தத் தன்மை சொரூப குணங்களாம். அதுவே லக்ஷியமாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுள்ளது. இந்த சச்சிதானந்தத் தன்மை எளிதில் புலனாகாமையால், அசத்து, ஜடம், துக்கம், அநித்தியம், கண்டம் ஆகிய ஐந்து லக்ஷணங்கள் எளிதில் விளங்கு வதாலும், அவைகளையும் விளக்கியபின் லக்ஷிய லக்ஷணங்கள் இரண்டும் ஒருமைப்பாடாகத் தோன்றுமானாலும், ஆத்மாவாகிய தன்னிடத்தில் அசத்து முதலியவை தோற்ற மாத்திரமேயொழிய வாஸ்தவ மன்று என்றும், சச்சிதானந்தாதிகள் தன் உண்மை சொரூபமே என்றும் இந்நூலில் ஆரம்ப முதல் இறுதிவரை விளக்கிக் காட்ட முயற்சி செய்யப் பட்டிருக்கின்றது.

**சுவாமி வாசுதேவானந்தா,**

ஆனந்தாஸ்ரமம்,

நாங்கூர்.

ஓம் தத் ஸத்

# கைவல்ய நவநீத சாரம்

(தத்துவ விளக்கப் படலம்)

ஆயிரம் முகத்தான் அகன்றது ஆயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே

என்ற விதியின்படி இந்நூலாசிரியர் பாயிரம் கூறுகின்றார்.

## அவதாரிகை

கைவல்ய நவநீதத்திற்கு பாயிரமாகக் கூறிய ஏழு கவிகளில் முதல் கவியில் கடவுள் வாழ்த்தும், இரண்டாவது கவியில் ஆத்ம சொரூப வணக்கமும், மூன்றாவது கவியில் குருவின் வணக்கமும், நான்காவது கவியில் குருவின் ஆற்றல் மிகு வல்லபத்தையும், ஐந்தாவது கவியில் இந்நூலுக்கு அதிகாரியையும் விஷயத்தையும், ஆறாவது கவியில் தொடர்பாகிய சம்பந்தத்தையும் பயனையும், ஏழாவது கவியில் படல வகையையும் கூறுகின்றார். இதில் முதலாவதாக கடவுள் வாழ்த்து கூறுகின்றார்.

பொன் நிலம் மாதர்ஆசை பொருந்தினர் பொருந்தார் உள்ளம்
தன்னில் அந்தரத்தில் சீவசாட்சி மாத்திரமாய் நிற்கும்
எந்நிலங்களினும் மிக்க எழுநிலம் அவற்றின்மேலாம்
நன்னிலம் மருவும் ஏகநாயகன் பதங்கள் போற்றி 1

1. பொன் பாத்திரம், மண் பாத்திரம் முதலியவற்றினிடத்து பேதமின்றி அபேதமாகத் தோன்றும் ஆகாச வெளியைப்போல் மண், பெண், பொன் என்கிற மூவாசையில் பற்றுடையவர்களுடைய உள்ளத்திலும் பற்று இல்லாதவர்களுடைய உள்ளத்திலும் சாட்சி மாத்திரமாகவும் அகண்ட ஏகரச சொரூபமாகவும் அல்லது வியாபக நிறைவாகவும், ஞானபூமியின் ஏழாவது பூமியான துரிய சொரூபமாகவும் விளங்கும் பிரம்ம சொரூபத்தை வணங்குவாம். இதில் வணக்கம் என்பது அபேத நிலை.

ஈன்று அளித்து அழிக்கும் செய்கைக்கு ஏதுவாம் அயனாய் மாலாய்
ஆன்ற ஈசனுமாய்த் தானே அனந்தமூர்த்தியுமாய் நிற்கும்
பூன்ற முத்தனுமாய் இன்பப்புணரி ஆதவ்னாய் நாளும்
தோன்றிய விமலபோத சொரூபத்தைப் பணிகின்றேனே 2

2. ஆத்ம சொரூப நமஸ்கார ரூப மங்களம். ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலுக்கும் காரணமாய், மும்மூர்த்தி சொரூபமாய் தானே இன்னும் அனந்த தோற்றமுமாய், பரிபூரண முக்தனுமாய், ஆனந்த சமுத்திரமுமாய், ஞான சூரியனுமாய், முக்காலத்திலும் சத்தாய், அறிவு சொரூபமாய் விளங்கும் சுத்த சைதன்யத்தை வணங்குகின்றேன்.

எவருடை அருளால் யானே எங்குமாம் பிரமம் என்பால்
கவருடைப் புவனம் எல்லாம் கற்பிதம் என்றறிந்து
சுவர் இடை வெளிபோல் யான் என் சொரூப சுபாவம் ஆனேன்
அவருடைப் பதுமபாதம் அனுதினம் பணிகின்றேனே 3

3. குருவடிவத்திற்கு நமஸ்கார ரூப மங்களம். எந்த குருவின் கருணையினால் வீட்டுக்குள் தோன்றும் ஆகாய வெளியும், வெளியில் உள்ள ஆகாய வெளியும் ஒன்று என்று அறிவது போல், தேகாதிப் பிரபஞ்சம் எல்லாம் கற்பிதம் என்றறிந்து என் நிஜ சொரூபமான பிரமமாக நிலை பெற்றேனோ அவருடைய தாமரை மலரைப் போன்ற திருவடியை சதாகாலமும் பணிகின்றேன்.

என்னுடை மனது புத்தி இந்திய சரீரம் எல்லாம்
என்னுடைய அறிவினாலே இரவிமுன் இமமே ஆக்கி
என்னுடை நீயும் நானும் ஏகம் என்று ஐக்கியம் செய்ய
என்னுடை குருவாய்த் தோன்றும் ஈசனை இறைஞ்சினேனே 4

4. குருவின் நிஜ சொரூபத்திற்கு நமஸ்கார ரூப மங்களம். என்னுடைய மனது, புத்தி, இந்திரிய, சரீரமாகிய இவையெல்லாம் என்னுடைய விசார ஞானத்தாலே சூரியனைக் கண்ட பனியேபோல் பொய்யென்றறிந்து ஜீவ சாட்சியான கூடஸ்தனும், ஈஸ்வர சாட்சியான பிரமமும் ஒன்று என்ற ஐக்கிய பாவத்தை எனக்கு உபதேசிக்க வந்த என்னுடைய குருவாய்த் தோன்றிய கிருபா சமுத்திரத்தை பணிகின்றேன்.

## அவதாரிகை

இந்நூலுக்கு அதிகாரியும், விஷயமும், சம்பந்தமும், பயனும் ஆகிய நான்கில் இந்த செய்யுளில் அதிகாரியையும் விஷயத்தையும் விளக்கிக் கூறுகின்றார்.

அந்தமும் நடுவும் இன்றி ஆதியும் இன்றி வான்போல்
சந்ததம் ஒளிரும் ஞானசற்குரு பாதம்போற்றிப்
பந்தமும் வீடும்காட்டப் பரந்தநூல் பார்க்கமாட்டா
மந்தரும் உணருமாறு வத்து தத்துவம் சொல்வேனே 5

5. ஆதியந்தம் இல்லாத ஆகாசவெளியைப் போல் சுயம்பிரகாசமாய் விளங்கும் ஞான சற்குருவினுடைய திருவடியை வணங்கி, விரிந்து பரவிக் கிடக்கின்ற வேதாந்த சாஸ்திரத்தைப் பார்த்து அதன் உட்பொருளைக் கற்றுணர சக்தி அற்ற மந்த அதிகாரியும் உணரும்படி பந்த லட்சணமும், வீட்டின் லட்சணமும் விளக்கிக் கூறுவேன். இதில் மந்தன் என்பது இந்நூலுக்கு, "அதிகாரி" அதாவது தகுதியுடையவன். இதில் வஸ்து தத்துவம் என்பது கூடஸ்த பிரம ஐக்கியமாகிய, "விஷயம்" எனக் கொள்க.

## அவதாரிகை

அதிகாரி முதலிய நான்கில் ஏனைய இரண்டும் இதில் கூறுகின்றார்.

படர்ந்த வேதாந்தம் என்னும் பாற்கடல் மொண்டு முன்னூல்
குடங்களில் நிறைத்து வைத்தார் குரவர்கள் எல்லாம் காய்ச்சிக்
கடைந்து எடுத்து அளித்தேன் இந்தக் கைவல்ய நவநீதத்தை
அடைந்தவர் விடயமண் தின்று அலைவரோ பசியிலாரே 6

6. விரிந்திருக்கின்ற வேதாந்தமாகிய பாற்கடலில் நின்று வியாசர் முதலியவர்கள் எடுத்துத் தொகுத்த பிரம்ம சூத்திரமும், அதற்கு ஆதிசங்கரர் முதலிய பூர்வ ஆச்சாரியர்கள் இயற்றி அருளிய உரைகளும் ஆகிய இவைகளை எல்லாம் ஆராய்ந்து, கடைந்து எடுத்த வெண்ணெயைப்போல் இந்த கைவல்ய நவநீதத்தை திரட்டி எடுத்து அளித்தேன். இதன் உண்மையை அறிந்தவர்கள் விஷயானந்தம் ஆகிய மண்ணை உண்டு பிறவித் துன்பத்தில் அலைய மாட்டார்கள். ஏனெனில் அவர்கள் பரம திருப்தி உடையவர்களாதலின். இதில் அளித்தேன் என்பது, "சம்பந்தம்." அதாவது நூலுக்கும் மாணவனுக்கும் உள்ள தொடர்பு. இதில் பசியிலார் என்பது, "பயன்." அதாவது சர்வ துக்க நிவர்த்தி; பரமானந்தப் பிராப்தி.

## படலவகை

முத்தனை வேங்கடேச முகுந்தனை எனை ஆட்கொண்ட
கத்தனை வணங்கிச் சொல்லும் கைவல்ய நவநீதத்தை
தத்துவ விளக்கம் என்றும் சந்தேகம் தெளிதல் என்றும்
வைத்து இருபடலமாக வகுத்து உரை செய்கின்றேனே 7

7. நாராயண தேசிகர் என்னும் நாமந்தரித்த எனது குருவை வணங்கி கைவல்ய நவநீதத்தை சொல்லுகின்றேன். தத்துவ விளக்கமென்றும் சந்தேகம் தெளிதலென்றும் இரண்டு அத்தியாயமாக வகுத்து உரை செய்கின்றேன்.

இதுகாறும் கூறிப்போந்ததின் சாரமாவது இந்நூல் இனிது முடிவு பெற ஆன்றோர் ஆசாரம் பற்றி கடவுள் வாழ்த்தும், குருவணக்கமும், குருவின் பெருமையும், குருவின் வல்லபமும், நூல் கேட்பதற்குரிய அதிகாரியும், விஷயமும், சம்பந்தமும், பயனும் ஆகிய அனுபந்த சதுஷ்டயத்தை கூறியவாறு காண்க.

*******

## நூல்

## தத்துவ விளக்கப் படலம்

### அவதாரிகை

உண்மையைக் கூறுமிடத்து இந்நூலை உணர்ந்துய்வதற்கு நான்கு வித பக்குவம் வேண்டுமெனல்.

நித்திய அநித்தியங்கள் நிண்ணயம்தெரி விவேகம்
மத்திய இகபரங்கள் வருபோகங்களில் நிராசை
சத்தியம் உறைக்க வேண்டும் சமாதி என்று ஆறுகூட்டம்
முத்தியை விரும்பும் இச்சை மொழிவர் சாதனம் இந்நான்கே 8

8. நாம் காணும் பொருள்களில் மாறுதல் அடைவது எது? மாறுதல் அடையாதது எது? என சிந்தித்து அறிவது முதல் பக்குவமாகும். இதற்கே நித்தியா நித்திய வஸ்து விவேகமெனப் பெயர். இம்மை, மறுமைகளில் தோன்றும் போக போக்கியங்களில் பற்று அற்று வாழப்பழகுதல் இரண்டாவது பக்குவமாகும். இதற்கு இகமுத்திரார்த்த

பல போக விராகம் எனப் பெயர் பெறும். பின் கூறப்போகும் ஆறுவகைக் குணங்களும் சேர்ந்து மூன்றாவது பக்குவமாகும். நான்காவது வீட்டின்பத்தில் விருப்பம் வைத்தல். இதுவே நான்கு பக்குவம் அல்லது நான்கு சாதனங்களாகும்.

சமம் தமம் விடல் சகித்தல் சமாதானம் சிரத்தை ஆறாம்
சமம் அகக்கரண தண்டம் தமம் புறக்கரண தண்டம்
அமர்தரு கருமம் பற்றாது அறுத்தலே விடல் என்றாகும்
மமர் செயும் காமமாதி வரின் அடக்குதல் சகித்தல் 9

9. மேற்கூறிய ஆறுவகைக் குணங்களுக்குரிய பெயர்கள் வருமாறு:-

சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை. இதில் சமமாவது மனத்தை விஷயங்களில் பற்றித் துன்பப்படாது பழக்குதல், தமமாவது ஐம்புலன்களை நீதி வழுவாது செலுத்துதல், விடலாவது எதிலும் பற்றின்றிப் பழக்குதல், சகித்தலாவது நாம் எதிர்பாராது இருக்கும் போது நம்மை நோக்கி வரும் இன்ப துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதல் ஆகையால் இந்த நான்கு குணங்களும் மாணவன் பின்பற்றத் தக்கதாம்.

## அவதாரிகை

முன் செய்யுளில் கூறாதொழிந்த ஏனைய இரண்டு குணங்களும் இச்செய்யுளில் கூறுகின்றார்.

சிரவணப் பொருளைத் தானே சித்தம் சிந்திக்குமாறு
சரதமாய் வைக்கும் இத்தைச் சமாதானம் என்பர் மேலோர்
பரமசற்குரு நூல் அன்பு பற்றலே சிரத்தையாகும்
வரமிகு சமாதி ஆறு வகையின் சொற்பொருள் இதாமே 10

10. சமாதானமாவது கேட்டல், சிந்தித்தல், தெளிதலில் மனதை சகஜமாகப் பழக்குதல். சிரத்தையாவது சற்குருவினிடத்திலும், ஞான சாத்திரத்திலும் மிகப்பிரியம் வைத்தல். மேற்கூறிய சமம் முதலிய ஆறுவகை குணங்களின் பொருள் இதுவேயாகும்.

சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை
ஆதலால் இந்தநான்கும் அடைந்தவர்க்கு அறிவுண்டாகும்
நூதன விவேகி உள்ளம் நுழையாது நுழையுமாகில்
பூதசென்மங்கள் கோடி புனிதனாம் புருடனாமே 11

11. பக்குவம் இன்றி ஒன்றையும் அடையவோ, அனுபவிக்கவோ முடியாது என்பது உலகப் பிரசித்தம். ஆகையால் மேற்கூறிய நான்கு பக்குவமும் உடையவர்களுக்கே மெய்யுணர்வுண்டாகும். இந்தப் பக்குவம் இல்லாதவர்களுக்கு உபதேசித்தால் விளங்குவது கஷ்டமாய்த் தோன்றும். உபதேசித்தப் பொருள் விளங்குமாயின் அவர்கள் பக்குவ முடையவர்கள் எனக் கொள்க.

இவன் அதிகாரியானோன் இந்திரியங்களாலும்
புவன தெய்வங்களாலும் பூத பௌதிகங்களாலும்
தவனம் மூன்று அடைந்து வெய்யில் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்
பவம்அறும் ஞான தீர்த்தம் படிந்திடப் பதறினானே 12

12. இத்தகைய பக்குவமுடைய மாணவன் உடலுக்கு வரும் வியாதி, பசி முதலியவைகளால் உண்டாகும் துக்கமும், சீதோஷ்ணாதிகளால் உண்டாகும் துக்கமும், திருடர்களாலும், விஷஜந்துக்களாலும் உண்டாகும் துக்கமும் ஆகிய மூவகைத் துக்கத்திற்கு ஆற்றாதவனாகி சூரிய வெப்பம் தாங்காத புழுவைப்போல் துடிதுடித்து இந்த துக்கத்திற்குக் காரணமான பிறவித் துன்பம் நீக்கக்கூடிய ஆத்மஞானத்தை அடைய விரைந்தனன்.

ஆனபின் மனைவி மக்கள் அர்த்த ஏடணைகள் மூன்றில்
கானவர் வலையில் பட்டுக் கைதப்பி ஓடும் மான்போல்
போனவன் வெறுங்கையோடே போகாத வண்ணம் சென்று
ஞான சற்குருவைக் கண்டு நன்றாக வணங்கினானே 13

13. மேற்கூறிய பக்குவமுள்ள மாணவனொருவன் மூவாசையில் கட்டுப்பட்டு அறிவிலியாகாமல் கட்டுப்படாத நல்ல அறிவோடு கூடியவனாகி வேடுவர் வலையிற்பட்டு தப்பி ஓடிய மான் திரும்பிப் பாராதது போல் மூவாசைக்கு ஏதுவானப் பொருள்களைச் சத்தியமாய்ப் பாராமல் மித்தையாகப் பரோக்ஷமாகப் பார்த்துக்கொண்ட மாணவன் மேலும் பேரன்பான, புஷ்பத்தோடு சென்று ஞான சற்குருவைக் கண்டு வணங்கி நின்றான்.

வணங்கி நின்று அழுது சொல்வான் மாயவாழ்வு எனும் சோகத்தால்
உணங்கினேன் ஐயனே என்னுள்ளமே குளிரும் வண்ணம்
பிணங்கிய கோசபாசப் பின்னலைச் சின்னமாக்கி
இணங்கிய குருவே என்னை இரட்சித்தல் வேண்டும் என்றான் 14

14. இவ்வாறு வணங்கி நின்ற மாணவன் தன் சரீரத்திற்கு வரும் ஜனன மரணத் துன்பத்திற்கு ஆற்றாதவனாகி வாடிய பைங்கூழைப்போல் நின்று விண்ணப்பித்தான். ஐயனே! எனதுள்ளம் குளிரும்படியாக ஞானோபதேசம் செய்து தேகாதி பிரபஞ்சத்தில் எனக்குண்டாயிருக்கும் சத்திய புத்தியை அபரோக்ஷமாக விலக்கி என்னைக் காத்தருள வேண்டும் என்றான்.

அன்ன தன் சிசுவை ஐயன் ஆமை மீன் பறவை போலத்
தன்னகம் கருதி நோக்கித் தடவிச் சந்நிதி இருத்தி
உன்னது பிறவி மாற்றும் உபாயம் ஒன்று உண்டு சொல்வேன்
சொன்னது கேட்பாயாகில் தொடர்பவம் தொலையும் என்றார் 15

15. அப்படி விண்ணப்பித்த மாணவனை குருவானவர் ஆமையானது தனது முட்டையை கரு உருவாக வேண்டும் என்று கருதுவது போல், அஞ்ஞானம் ஒழிந்து ஞானசொரூபியாக வேண்டும் என்று தம் உள்ளத்தில் கருதினார். மேலும் மீனானது தனது சினையைப் பார்ப்பது போல் அவனது பிறவிக்கு ஏதுவான பழைய வினைகள் எல்லாம் தீரவேண்டும் என்று கருணையோடு நோக்கினார். பறவையானது தன் சிறகினால் முட்டையைத் தழுவுவது போல் ஆத்மவிசாரம் இவனுக்கு உண்டாகுக என அபயகரம் சிரசில் வைத்து ஆசீர்வதித்தார். உனது பிறவித் துன்பம் தீர உபாயம் உண்டு. அதை நான் சொல்லுவேன். சொன்னதை நீ அமைதியுடன் கேட்பாயானால் பிறவித் துன்பம் தீரும் என்று அருளிச் செய்தார்.

தொடர்பவம் தொலையும் என்று சொன்னதைக் கேட்டபோதே
தடமடு மூழ்கினான்போல் சரீரமும் குளிர்ந்து உள்ஆறி
அடரும் அன்பு ஒழுகுமாபோல் ஆனந்த பாஷ்பம் காட்டி
மடல் மலர்ப்பாதம் மீண்டும் வணங்கி நின்று ஈது சொல்வான் 16

16. தனக்குத் தோன்றிய பிறவித் துன்பம் தீரும் என்று அருளிச் செய்த குரு மொழியைக் கேட்டவுடன் மாணவனுடைய சரீரம் கங்கா நதியில் மூழ்கியவன் போல் குளிர்ந்தது. அவனது உள்ளமும் சாந்த

மடைந்தது. தேடின பொருள் அகப்பட்டது போல் ஆனந்த பரவசத்தால் கண்களில் நீர் பெருக்கெடுத்தது. தாமரை மலர் போன்ற குருவின் திருவடியை மீண்டும் வணங்கி சொல்லத் தொடங்கினான்.

சொன்னது கேட்கமாட்டாத் தொண்டனானாலும் சுவாமி
நின்னது கருணையாலே நீர் எ(ன்)னை ஆளலாமே
உன்னது பிறவிமாற்றும் உபாயம் ஒன்று உண்டு என்றீரே
இன்னது என்று அதைநீர் காட்டி ஈடேற்றல் வேண்டும் என்றான் 17

17. குருதேவா! முன் பதினைந்தாவது செய்யுளில் சொன்னதைக் கேட்பாயாகில் எனது பிறவித் துன்பம் தீரும் என்று சொன்னீரே அங்ஙனம் கேட்காதவனானாலும் ஐயனே! குருவே! தங்களது கருணை யினால் என்னை ஆட்கொள்ளலாமே. உனது பிறவி தீரும் உபாயம் ஒன்றுண்டு என்று சொன்னீரே. அத்தகைய உபாயம் இன்னது என்று எனக்கு விளக்கிக் காட்டி என்னை ஈடேற்ற வேண்டும் என்றான்.

அடங்கிய விருத்தியான் என்று அறிந்தபின் செறிந்த மண்ணின்
குடம்பையுள் புழுமுன் ஊதும் குளவியின் கொள்கை போலத்
தொடங்கிய குருவும் ஆன்ம சொரூபமே மருவ வேண்டி
உடம்பினுள் சீவனைப் பார்த்து உபதேசம் ஓதுவாரே 18

18. இவ்வாறு கூறிய மாணவன் நற்குணமான சத்துவகுணமுடையவன் என அறிந்து குருவானவர், குளவியானது புழுவைக் கொண்டு வந்து மண்குடம்பையினுள் வைத்து அதன் முன் ஊதும் முயற்சியைப் போல், சீடன் தனது ஆத்மாவை பிரமமென அறிந்துய்ய வேண்டி அவனது உடம்பின்கண் விளங்கும் ஜீவனைப் பார்த்து உபதேசம் செய்வாராயினர்.

வாராய் என்மகனே தன்னை மறந்தவன் பிறந்து இறந்து
தீராத சுழல் காற்றுற்ற செத்தைபோல் சுற்றிச் சுற்றிப்
பேராத காலநேமிப் பிரமையில் திரிவன் போதம்
ஆராயும் தன்னைத் தான் என்று அறியும் அவ்வளவும்தானே 19

19. அன்புள்ள சிஷ்யனே! உன் நிஜ சொரூபத்தை மறந்ததனால் பிறவித் துன்பம் தோன்றுகிறது. அந்த மறதியினால் சுழற்காற்றிலகப் பட்டுக் கொண்டு தத்தளிக்கும் உலர்ந்த சருகைப்போல் பல பிறவித்

துன்பங்களில் சுற்றிச் சுற்றி அலைகின்றாய். இவ்வாறு அலைவதற்கு முடிவு யாதோவெனின் அறிவு சொரூபமாகிய ஆத்மாவை பிரமம் என்று அறியும் வரையில் தான் பிறவிக் கடலில் சுற்றுவாய்.

தன்னையும் தனக்கு ஆதாரத் தலைவனையும் கண்டானேல்
பின்னை அத்தலைவன் தானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னை நீ அறிந்தாயாகில் உனக்கு ஒருகேடும் இல்லை
என்னை நீ கேட்கையாலே ஈது உபதேசித்தேனே 20

20. அன்பனே! நான் யார்? என்பதைப் பற்றியும் தனக்கு முதல்வனாகிய ஆத்மாவானது எத்தகையது? இரண்டுக்கும் உள்ளத் தொடர்பு எதைப் போன்றது? என்பதைப் பற்றியும், நீ நன்றாக விசாரித்து அறிந்தால் பின் அந்த முதல்வனே பிரமம் என்றும், அதுவே நிறைபொருள் என்றும் அறிந்தால் பிறவித்துன்பம் தீரும். இவ்வாறு பிரமமாகிய முதல்வனே உன் நிஜ சொரூபமென்று உள்ளங்கையில் கனிபோல் அறிந்தால் உனக்கு ஒரு கேடுமில்லை. என்னை நீ கேட்டதனால் இந்த உண்மையைச் சொன்னேன்.

என்னைத்தான் சடனா உள்ளத்து எண்ணியோ சொன்னீர் ஐயா
தன்னைத்தான் அறியா மாந்தர் தரணியில் ஒருவருண்டோ
பின்னைத்தான் அவர்களெல்லாம் பிறந்திறந்து உழலுவான்ஏன்
நின்னைத்தான் நம்பினேற்கு நிண்ணயம் அருளுவீரே 21

21. குருதேவா! நான் யார் என்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்று முன் கவியில் கூறினீர்கள். நான் யார் என்பதை அறியாதவர்கள் உலகில் யாருமில்லையே. ஏனெனில் நான் இன்னார் மகன் என்பதும், நான் பிறந்து இத்தனை ஆண்டுகள் ஆயின என்பதும், நான் இன்ன ஜாதி என்பதும், எல்லோருக்கும் தெரியுமல்லவா? அப்படியிருக்க அவர்கள் எல்லாம் பிறவிக்கடலில் சுற்றுவானேன், என்னை அறியாதவன் என்று அதாவது அறிவற்றவன் என்று திருவுள்ளத்தில் எண்ணியோ அங்ஙனம் அருளிச் செய்தீர். தங்களை நம்பின அடியேனுக்கு உண்மையை அருளிச் செய்ய வேண்டும்.

இன்னது தேகம் தேகி இவன் என உணர்வான் யாவன்
அன்னவன் தன்னைத் தான் என்று அறிந்தவனாகும் என்றார்
சொன்னபின் தேகி யார் இத்தூலம் அல்லாமல் என்றான்
பின்னது கேட்ட ஐயர் பீழையும் நகையும் கொண்டார் 22

22. அன்பனே! தேகத்தின் அசத்து, ஜடம், துக்கம், அநித்தியம், கண்டம் ஆகிய ஐந்து இலக்கணத்தையும், தேகத்தில் குடியிருக்கும் தேகியின் சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம், பூரணம் ஆகிய ஐந்து இலக்கியத்தையும் விசார முகத்தில் அறிந்தவன் எவனோ? அவன் தான் தன்னைத் தான் அறிந்தவனாகும். அவன்தான் நான் யார் என்பதையும் அறிந்தவனாகும் என்று அருளிச்செய்த குருதேவரை நோக்கி, தேகத்திற்கு வேறாக தேகி ஒருவன் இருக்கின்றானா என வினவினான். இதைக்கேட்ட குருவானவர் தன் உள்ளத்தில் மகிழ்ச்சியும், வாட்டமும் எய்தினார். வாட்டத்திற்குக் காரணம் யாதோவெனின் இவன் அஞ்ஞானத்தினால் நான் உபதேசித்தப் பொருளை அறியவில்லையே என்பதும்; மகிழ்ச்சிக்குக் காரணம் சுருதி, யுக்தி அனுபவத்தால் இவனது அஞ்ஞானத்தை ஒரு முகூர்த்த நேரத்தில் எமது பிரமஞானத்தால் போக்குவோம் என்றும் திருவுள்ளத்தில் கருதினார் என்பதும் அறியத்தக்கது.

தேகம் அல்லாமல் வேறே தேகி யார் காணேன் என்றாய்
மோகமாம் கனவில் வந்து முளைத்தவன் எவன் நீ சொல்வாய்
சோகமாம் கனவு தோன்றாச் சுழுத்தி கண்டவன் ஆர் சொல்வாய்
ஆக நீ நனவில் எண்ணும் அறிவு தான் ஏது சொல்வாய் 23

23. அன்பனே! தேகத்திற்கு வேறாக தேகி ஒருவன் இருக்கிறானா என்று நீ ஐயப்பட வேண்டியதில்லை. ஏனெனில் தூக்கத்தில் தேகம் அசைவற்றுக் கிடக்கின்றபோது கனவை அறிந்ததும், சுழுத்தியில் ஒன்றும் அறியவில்லை என்று சொல்லும்படியான அஞ்ஞானத்தை அறிந்ததும், நனவில் ஒவ்வொன்றையும் பகுத்தறியும் அறிவும், அறிவற்று சடத்தன்மை வாய்ந்த உடம்பும், மேல்காட்டிய அந்த அறிவும் ஒன்றா? இரண்டா? என நன்றாக ஆராய்ந்து சொல்லுதி. உதாரணமாக திருவிழாக்களில் மூங்கில் குச்சிகளால் ஒரு யானையைச் செய்து வர்ணத்தாள்களை ஒட்டி அதனுள் ஒரு சிறுவன் புகுந்து கை, பாத, கர்ணங்களை இயக்கச் செய்தால் அவனும் அந்த யானையும் ஒன்றா? இரண்டா? சொல்லுதி.

நனவு கண்டதும் நான் கண்ட நனவுள் அந்நினைவு நீங்கிக்
கனவு கண்டதும் சுழுத்தி கண்டதும் வேறொன்றே போல்
தினம் அனுபவிப்பது ஒக்கும் தெரியவுமில்லை சற்றே
மனதினில் உதிக்கும் பின்னை மறைக்கும் அது அருளுவீரே 24

24. குருதேவா! தாங்கள் உபதேசித்தது உண்மை தான். கனவைக் கண்டதும் நான்தான், நனவை அறிந்ததும் நான்தான். சுழுத்தியை அறிந்ததும் நான்தான். இப்படி பிரதிதினமும் அனுபவித்துக் கொண்டே வருகின்றேன். ஆனால் மூன்றவஸ்தையையும் அறிந்த அறிவு நானாகவும், எனக்கு வேறாகவும் தோன்றுகின்றது. இப்படி மறைப்பாகவும் வெளிப்படையாகவும் தோன்றும் இந்த அறிவான பிரம்மத்தைப் பற்றி தாங்கள் விளக்கிக் காட்டி அருள் செய்ய வேண்டுகின்றேன்.

தூலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டுவார்போல்
ஆலத்தின் உடுக்கள் காட்டி அருந்ததி காட்டுவார்போல்
தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூபமான
மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கினாரே 25

25. இவ்வாறு விண்ணப்பித்த சீடனை நோக்கி ஆச்சாரியரானவர் மண்ணில் உள்ள ஒரு மரக்கிளையின் வாயிலாக மூன்றாம் பிறைச் சந்திரனைக் காட்டுவார் போலும், ஆகாயத்தின்கண் உள்ள பெரிய உடுக்களைக் காட்டி அதன் வாயிலாக சிறிய நட்சத்திரத்தைக் காட்டுவார் போலும், ஸ்தூலமான ஜீவேஸ்வர ஜகத்தின் தோற்றத்தை முன்புகாட்டி அதற்கு அடிப்படையான சூட்சும சொரூபமான ஆத்மாவாகிய பிரமத்தை பின்பு காட்ட, மனன சீலருள் முதன்மையான ஆச்சாரியர் ஆரம்பித்தனர்.

அத்தியாரோபம் என்றும் அபவாதம் என்றும் சொல்லும்
உத்தியால் பந்தம் வீடு என்று உரைக்கும் வேதாந்தம் எல்லாம்
மித்தையாம் ஆரோபத்தால் பந்தமாம் அபவாதத்தால்
முத்தியாம் இவ்விரண்டில் முந்தி ஆரோபம் கேளாய் 26

26. அன்பனே! கற்பனையாகத் தோன்றும் தோற்றங்களுக்கு காரணம் எது என்று ஆராயவேண்டும். கற்பனையாகத் தோன்றும் தோற்றமும், அதன் காரணமும் ஆகிய இரண்டைப் பற்றியே சகல வேதாந்த சாத்திரமும் கூறுகின்றது. இதில் கற்பனையாகத் தோன்றும் தோற்றத்தை உண்மையாக நம்புவதனால் பிறவித் துன்பம் உண்டாகும். அதன் காரணத்தை அறிவதால் மோட்சம் உண்டாகும். எனவே இவ்விரண்டில் முன்னதான கற்பனைத் தோற்றங்கள் தோன்றும் முறைமையை நீ கேட்பாயாக.

ஆரோபம் அத்தியாசம் கற்பனை ஆவவெல்லாம்
ஓரோர் வஸ்துவினில் வேறே ஓரோர் வஸ்துவினை ஓர்தல்
நாரூடு பணியாய்த் தோன்றல் நரனாகித் தறியில் தோன்றல்
நீரூடு கானல் தோன்றல் நிறம் தலம் வெளியில் தோன்றல் 27

27. கற்பனையாகத் தோன்றும் தோற்றங்கள் எவ்வாறெனின், ஒரு வஸ்துவினை மற்றோர் வஸ்துவாக உணர்தல். அது எவ்வாறு எனின், பழுதையை பாம்பு என உணர்தலும், கட்டையைக் கள்வன் என உணர்தலும், கானலை தண்ணீர் என உணர்தலும், சுத்தமான ஆகாயத்தில் நீலபீதாதி நிறங்கள் உள்ளதாக உணர்தலும் போல்வது ஆகும். இதில் பழுதையைவிட பாம்புக்கு வேறு சொரூபம் இல்லாதவாறு போல் பிரமத்தைவிட தேகாதிப் பிரபஞ்சத்திற்கு வேறு சொரூபம் இல்லை என்பதாயிற்று.

இப்படிப்போல நாம ரூபங்கள் இரண்டுமின்றி
ஒப்பமாய் இரண்டற்று ஒன்றாய் உணர்வொளி நிறைவாய் நிற்கும்
அப்பிரமத்தில் தோன்றும் ஐம்பூத விகாரம் எல்லாம்
செப்பு கற்பனையினாலே செனித்த என்று அறிந்து கொள்ளே 28

28. அன்பனே! மேல்காட்டிய பழுதையும், கட்டையும், கானலும், ஆகாயமும் எவ்வித மாறுதலுமின்றி இருப்பது போல் பெயர், உருவம் ஆகிய இரண்டும் இன்றி எங்கும் நிறைந்து ஒன்றாய் அறிவு வடிவமாய் விளங்கும் ஆத்மாவாகிய பிரமத்தில் ஐம்பூதமும், அதன் காரியமான தேகாதிப் பிரபஞ்சமும் முன்காண்பித்த கற்பனைத் தோற்றம்போல் தோன்றியது என்று அறியக் கடவாய்.

அதுதான் எப்படி என்றக்கால் அநாதியாம் சீவரெல்லாம்
பொதுவான சுழுத்திபோலப் பொருந்தும் அவ்வியத்தம் தன்னில்
இது காலதத்துவப் பேர் ஈசன் உட்பார்வையாலே
முது மூலசுபாவம் விட்டு முக்குணம் வியத்தமாமே 29

29. அன்பனே! சகல ஜனங்களுடைய உலக தேக வாசனைகள் அனைத்தும் அவரவர்களுடைய சுழுத்தி அவஸ்தையில் எங்ஙனம் அடங்கியிருந்து மீண்டும் நனவில் வெளிப்படுகின்றதோ அங்ஙனமே, ஐம்பூதக் காரியமான நாமரூபங்களும், உற்பத்தி நாசரகிதமான ஜீவர்களும், மாயாசக்தியில் அடங்கியிருந்து மீண்டும் கால தத்துவமான

ஈசுவரனுடைய பார்வையில் முன்பிருந்த காரண அவஸ்தையை விட்டு முக்குணமாக வெளிப்பட்டது. இதில் காலத்தை அதாவது நேரத்தை உயர்திணை ஆண்பால் பொருளாக்கி ஈஸ்வரன் என்றார். காலத்தை காலன் என்பதுவும் அது இந்த ஈசுவரனும் பூர்வபக்ஷமேயாம்.

உத்தம வெளுப்புச் செம்மை உரைத்திடு கறுப்புமாகும்
சத்துவ குணத்தினோடு ரசோகுணம் தமோகுணம் தான்
சுத்தமோடு அழுக்கு இருட்டாச் சொல்லும் முக்குணமும் மூன்றாய்
ஒத்துளவேனும் தம்முள் ஒருகுணம் அதிகமாமே 30

30. இவ்வாறாகத் தோன்றிய முக்குணமானது உத்தம, மத்திம, அதம பேதத்தால் மூன்றாக இருக்கும். இதில் உத்தமமான சத்துவ குணத்திற்கு சுத்தம் என்றும், வெண்மை என்றும் கூறப்படும். மத்திமமான ரஜோ குணத்திற்கு செந்நிறம் என்றும், அழுக்கு என்றும், அதமமான தமோ குணத்திற்கு கருநிறம் என்றும், இருட்டு என்றும் கூறப்படும். இப்படி இருந்த போதிலும் முக்குணத்தின் ஒரு குணம் நெருஞ்சிமுள் போல் மேலோங்கி நிற்கும்.

ஒருவழி இதுவாம் இத்தை ஒருவழி வேறாச்சொல்வர்
மருவும் அவ்வியத்தம்தானே மகதத்துவமாகும் அந்த
அருள் மகதத்துவம்தான் அகங்காரமாகும் என்றும்
கரு அகங்காரம் மூன்றாக் காட்டிய குணமாம் என்றும் 31

31. மேற்கூறிய முக்குணத்தில் சகல தோற்றங்கட்கும் இடமிருப்பதால் இந்தத் தோற்றத்தை வேதோபநிஷத்துக்களில் மூன்று விதமாகக் கூறப்பட்டுள்ளது. அதாவது கிரம சிருட்டி, உகபற்சிருட்டி அஜாதவாதமாம். இந்த மூன்றில் இந்நூலாசிரியர் கிரம சிருஷ்டிப் பிரகாரம் முக்குணோற்பத்தியை அங்கீகரித்து இருக்கிறார். இதில் முக்குணம் தோன்றிய வழி, முன் 29 ம் செய்யுளில் கூறிய வழி ஒரு வகையாகும். மற்றொரு வகையாகவும் தோன்றும் முறைமையும் வேதத்தில் கூறப்பட்டுள்ளது. அதாவது பன்மையாகவுள்ள மாயாசக்தியே சமஷ்டி புத்தி ரூபமாகவும், அந்தப் புத்தியே நான் என்னும் அகங்கார ரூபமாகவும், இந்த அகங்காரமே முக்குணமாக வெளிப்பட்டதாகவும் கூறப்பட்டுள்ளது. ஆக சிருஷ்டி கிரமம் இரண்டு விதமெனக் கொள்க. எப்படி இருந்தபோதிலும் தானில்லாதவிடத்தில் தான் தோன்றுதல் சிருஷ்டியாகும்.

இக்குணங்களிலே விண்போன்று இருக்கும் சிற்சாயை தோன்றும்
முக்குணங்களினும் தூய்தாம் முதற்குணம் மாயையாகும்
அக்குணப் பிரமச்சாயை அந்தரியாமி மாயை
எக்குணங்களும் பற்றாதோன் நிமித்த காரணனாம் ஈசன் 32

32. பற்று அற்று எங்கும் நிறைந்துள்ள ஆகாயத்தைப் போல் வியாபகமாய் உள்ள சச்சிதானந்த சொரூபமான பிரமத்தின் பிரதிபிம்பம் முன்கூறிய முக்குணத்தின் சத்துவ குணத்தில் தோன்றும். இங்ஙனம் தோன்றிய பிரதிபிம்ப சேதனமே ஈசுவரனாம். இந்த முக்குணங்களில் முதற்குணமான சுத்தசத்துவ குணத்திற்கு மாயை என்று ஒரு பெயர் வழங்கும். இந்த சத்துவ குண மாயையில் தோன்றிய சேதனத்திற்கு அந்தரியாமி எனவும் கூறுவர். இந்த சேதனமே சிருஷ்டி, திதி, சங்காராதிகளுக்கு நிமித்த காரணனாகும். ஏனைய குணங்கள் இந்த ஈசுவரனைப் பற்றாததால் அவனுக்கு அகந்தை, மமதை, ரூப அபிமானம் இல்லை. இதில் ஜீவனும், ஜகத்தும், நாமரூபமும் எவ்வாறு மாயையால் கற்பிக்கப் பட்டனவோ அவ்வாறே நிமித்த காரணத்துவமும், கல்யாண குணங்களும் மாயையால் கற்பிக்கப் பட்டனவே அன்றி உண்மை அன்றென அறிக. இதை ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகளின் கைவல்ய உரையின் 166வது பக்கம், “வித்தையினால் அதாவது விசார ஞானத்தினால் நாசமாகும் ஜீவ ஈசுவரர்களை” என்று கூறுவதினால் அறிக.

ஈசனுக்கு இது சுழுத்தி இதுவே காரண சரீரம்
கோசம் ஆனந்தமாகும் குணம் இராசதம் அவித்தை
தேசுஅறும் அவித்தை தோறும் சிற்சாயை சீவகோடி
நாசமாம் உயிர்க்கு அப்போது நாமமும் பிராஞ்ஞனாமே 33

33. இவ்வாறு தோன்றிய ஈசுவரனுக்கு இம்மாயையே சுழுத்தி அவஸ்தையாம். இதுவே காரண சரீரமும், ஆனந்தமய கோசமும் ஆகும். இனி ரஜோ குணத்துடன் சம்பந்தப்பட்ட அவித்தையில் தோன்றும் பிரமத்தின் பிரதி பிம்ப சேதனமே ஜீவகோடிகளெனப்படும். மற்ற இரண்டு சரீரத்தையும் அடையாமல் அவித்தையாகிய காரண சரீரத்தோடு இருக்கும் ஜீவர்களுக்கு பெயர் பிராக்ஞன் என்று சொல்லப்படும்.

அழுக்கொடு பற்றும் சீவர்க்கு அதுவே ஆனந்த கோசம்
சுழுத்தி காரணசரீரம் சொன்னது இம்மட்டும் மோக
முழுக்குணத்து இரண்டால் வந்த மூலஆரோபம் சொன்னோம்
வழுத்து சூக்கும ஆரோப வழியும் நீ மொழியக் கேளாய் 34

34. யான் எனது என்னும் செருக்குற்ற ஜீவர்களுக்கு மேற்கூறிய அவித்தையே ஆனந்தமய கோசமும், சுழுத்தி அவஸ்தையும், காரண சரீரமும் ஆகும். இதுவரைக்கும் கூறிப்போந்ததனால் சுத்த சத்துவ குணம், ரஜோ குணங்களால் உண்டான காரண சரீரக் கற்பனையைச் சொன்னேன். இனி சூட்சும சரீரம் உண்டான கற்பனையையும் நீ கேட்பாயாக.

ஏம மாயாவினோத ஈசனார் அருளினாலே
பூமலி உயிர்கட்கெல்லாம் போக சாதனம் உண்டாகத்
தாமத குணம் இரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்
வீமமாம் மூடல் என்றும் விவிதமாம் தோற்றம் என்றும் 35

35. மேற்கூறிய மாயாசக்தியை விளையாட்டாகவுடைய ஈசுவரன் கருணையினால் ஜீவர்கள் எல்லாம் தத்தம் பூர்வ கருமங்களை அனுபவித்துத் தீர்ந்து முக்தி அடைவதற்கேதுவான தூல, சூட்சும சரீரங்கள் உண்டாவதற்காக, முன் காண்பித்த முக்குணத்தின் தமோகுணம் இரண்டு சக்தியாகப் பிரிந்து தோன்றும். அதில் ஒன்று ஆவரணம் எனவும், மற்றொன்று விட்சேபம் எனவும் கூறப்படும். இதில் நானாவிதமாக தோற்றுவிப்பது விட்சேபம் எனவும், தன் உண்மை சொரூபமான ஆத்மாவைத் தெரியவொட்டாமல் மறைப்பது ஆவரணம் எனவும் கூறப்படும். இதில் பூர்வ கருமம் ஒப்பி இருப்பது பூர்வபட்சமாக அன்றி, சித்தாந்த பட்சம் அன்று என்க.

தோற்றமாம் சத்திதன்னில் சொல்லிய விண்ணாம் விண்ணில்
காற்றதாம் காற்றில் தீயாம் கனலில் நீர் நீரில் மண்ணாம்
போற்று இவ்வைந்தும் நொய்ய பூதங்கள் என்றுபேராம்
சாற்றும் மற்று இவற்றில் போகசாதன தனு உண்டாகும் 36

36. மேற்கூறிய தமோகுணம் இரண்டு சக்தியாகப் பிரிந்து ஒன்று விட்சேபம் என்றும், மற்றொன்று ஆவரணம் என்றும் தோன்றும் என்று கூறினோம் அல்லவா? இதில் விட்சேப சக்தியானது ஒலியம்சமான (சப்தம்) ஆகாயமாயிற்று. பின், இந்த ஆகாயமானது ஊறு அம்சத் தோடு (ஸ்பரிசம்) கூடிய காற்றாயிற்று. பின், இந்தக் காற்றானது ஒளியம்சத்தோடு (ரூபம்) கூடிய நெருப்பு உண்டாயிற்று. பின், இந்த அக்னியானது சுவையம்சத்தோடு (ரசம்) கூடிய ஜலமாயிற்று. பின், இந்த ஜலமானது நாற்ற அம்சத்தோடு (கந்தம்) கூடிய பூமியாயிற்று.

இவைகளுக்கு சூட்சும பூதங்கள் என்றும், அபஞ்சீகிருத பூதங்கள் என்றும் பெயர் சொல்லப்படும். இவற்றால் சகல ஜீவர்களுக்கும் சூட்சும சரீரமான நுண்ணுடம்பு உண்டாம்.

ஆதிமுக்குணம் இப்பூதம் அடங்கலும் தொடர்ந்து நிற்கும்
கோதில் வெண்குணத்தில் ஐந்துகூறு உணர்கருவியாகும்
ஓதிய பின்னை ஐந்தும் உளம் புத்தி இரண்டாம் ஞான
சாதனமாம் இவ்வேழும் சற்குணப் பிரிவினாலே 37

37. முன்கூறிய மாயாசக்தியின் முக்குண பஞ்ச பூதம் அடங்கலும் தொடர்ந்து நிற்கும். இந்த பஞ்ச பூதங்களில் ஒவ்வொரு பூதத்தின் ஒவ்வோர் அம்சமும் சத்துவ குணத்தில் தோன்றும். இவ்வாறு ஐந்து பூதங்களின் ஐந்தம்சமும் தோன்றியது உணர்கருவி அல்லது ஞானேந்திரியம் ஆகும். மீண்டும் பஞ்ச பூதத்தின் ஒவ்வொரு கூறு சத்துவ குணத்தில் தோன்றியதே உட்கருவியான அந்தக்கரணமாயிற்று. இவை ஐந்தினையும் இரண்டில் அடக்கி மனம், புத்தி ஆகிய இரண்டும், மேற்கூறிய ஞானேந்திரியம் ஐந்தும் ஆக ஏழும் சூட்சும சரீரத்தின் பதினேழு உறுப்புகளில் இவை ஏழு எனக்கொள்க. அதாவது ஞானேந்திரியம் ஐந்து. மனம், புத்தி இரண்டு ஆக ஏழு எனக்கொள்க.

(சத்துவ குணத்தின் சமஷ்டிப் பாகத்தில் உண்டானவை அந்தக் கரணங்கள்; சத்துவ குணத்தின் வியஷ்டிப் பாகத்தில் உண்டானவை ஞானேந்திரியங்கள்)

இராசத குணத்தில் வேறிட்டு எடுத்தகூறு ஐந்தும் ஐந்தும்
பிராண வாயுக்கள் என்றும் பெருந்தொழில் கருவி என்றும்
பராவிய பெயராம் இந்தப் பதினேழும் இலிங்கதேகம்
சுராசுரர் நரர் விலங்காய்த் தோன்றிய உயிர்கட்கெல்லாம் 38

38. இனி ரஜோகுணத்தில் தோன்றிய ஐந்து பூதத்தின் ஐந்து கூறுகள் கர்மேந்திரியமாம். அதாவது தொழிற் கருவியாம். மேலும் ஐந்து பூதத்தின் ஐந்து பாகம் ரஜோ குணத்தோடு சேர்ந்தது பிராணாதி வாயுக்கள் ஐந்தாம். முன் கூறிய ஏழும், இப்போது கூறிய பத்தும் ஆக, பதினேழும் ஜீவகோடிகள் அனைத்திற்கும் இது லிங்க சரீரமாம். அதாவது சூட்சும சரீரமாம். இதில் அந்தக்கரணம் ஐந்தையும் சேர்த்து சூட்சுமசரீரத் தத்துவம் இருபது எனக் கூறுவாருமுளர்.

(ரசோ குணத்தின் சமஷ்டிப் பாகத்தில் உண்டானவை பிராணாதி வாயுக்கள்; ரசோ குணத்தின் வியஷ்டிப் பாகத்தில் உண்டானவை கர்மேந்திரியங்கள்)

இவ்வுடல் மருவும் சீவன் இலங்கு தைசதன் என்றாவன்
இவ்வுடல் மருவும் ஈசன் இரணிய கருப்பனாவன்
இவ்வுடல் இரண்டு பேர்க்கும் இலிங்க சூக்கும சரீரம்
இவ்வுடல் கோசம் மூன்றாம் இது கனா அவத்தையாமே 39

39. ஒரு சூட்சும சரீரத்தை எனது என்று அபிமானிக்கின்ற ஜீவனுக்கு தைஜசன் என்று பெயர் பெறும். எல்லா சூட்சும சரீரத்தையும் எனது என்று அபிமானிக்கின்ற ஈசுவரனுக்கு இரண்யகர்ப்பன் எனப்பெயர் பெறும். இது இரண்டு பேருக்கும் சூட்சும சரீரமாகும். பின் கூறப்போகும் பஞ்சகோசங்களில் பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம் என்கின்ற மூன்று கோசங்களும் இந்த சூட்சும சரீரத்தில் அடங்கும். மூன்று சரீரத்திற்கும் ஏற்படும் மூன்றவஸ்தைகளில் இந்த லிங்க சரீரத்திற்கு கனவு அவஸ்தையாம்.

சூக்கும சடம் இம்மட்டும் சொல்லினோம் இப்பால் தூலம்
ஆக்கும் ஆரோபம்தானும் அடைவினில் மொழியக் கேளாய்
தாக்கும் இவ்வுயிர்க்குத் தூலதனுவும் போகமும் உண்டாகக்
காக்கும் அவ்வீசன் பஞ்சீகரணங்கள் செய்தான்தானே 40

40. அன்பனே! சூட்சும சரீரம் தோன்றிய கற்பனையை இதுகாறும் கூறினோம். இனி தூல சரீரம் தோன்றும் கற்பனையையும் நீ கேட்பாயாக. சூட்சும சரீரம் பெற்றுள்ள ஜீவர்களுக்கு தத்தம் கர்மத்திற் கீடான தத்தம் கர்மத்தையே அனுபவித்துத் தீரவேண்டி ஈசுவரன் தன்மாத்திரையான சூட்சும பஞ்ச பூதங்களை ஒன்றோடு ஒன்று கலக்கச் செய்தார். இதற்கு பஞ்சீகரணம் எனப்பெயர்.

ஐந்து பூதமும் பத்தாக்கி அவைபாதி நந்நான்கு ஆக்கி
நந்து தன்பாதி விட்டு நான்கொடு நான்கும் கூட்ட
வந்தன தூலபூதம் மகாபூதம் இவற்றினின்றும்
தந்தன நான்காம் தூலதனு அண்ட புவன போகம் 41

41. அன்பனே! ஒவ்வொரு பூதத்தையும் இரண்டிரண்டாக பத்தாக்கி, அவற்றில் ஒரு பாகமாகிய ஐந்தை தனித்தனி நிறுத்தி, ஏனைய ஐந்தில் ஒவ்வொன்றையும் நான்கு பாகமாகப் பிரித்து, பிரிவுபடாத தன் பாதியை விட்டு ஏனைய நான்கோடு நான்கையும் கூட்ட ஸ்தூல பூதங்கள் உண்டாயின. இதை பஞ்சீகிருத பூதம் என்பர். இதனால் சகல ஜீவர்களுடைய தூல சரீரமும், பலகோடி அண்டங்களும் தோன்றின. இதில் நாலொடு நாலும் சேரும்போது எது எது உண்டாயிற்று எனின், கீழே பாருங்கள். ஆகாயத்தின் தன்னம்சம் சோகம். மற்ற நாலும் ஆகாயத்தோடு சேருகின்றபோது காமம், குரோதம், மோகம், பயம் ஆகிய நான்கும் உண்டாம். வாயுவின் தன்னம்சம் விரிதல். மற்ற நாலும் வாயுவுடன் சேரும்போது ஓடுதல், இருத்தல், நடத்தல், சுருங்குதல் ஆகிய நான்கும் உண்டாம். அக்கினியின் தன்னம்சம் பசி. மற்றைய நாலும் சேரும்போது நித்திரை, தாகம், சூடு, சோம்பல் ஆகிய நான்கும் உண்டாம். ஜலத்தின் தன்னம்சம் சுக்கிலம் அல்லது சுரோணிதம். மற்றைய நாலும் சேரும்போது உமிழ்நீர், வெயர்வை, மூத்திரம், இரத்தம் ஆகிய நான்கும் உண்டாம். பூமியின் தன்னம்சம் எலும்பு. மற்றைய நாலும் சேரும்போது ரோமம், தோல், நாடி, மாமிசம் ஆகிய நான்கும் உண்டாம். இவை இருபத்தைந்தும் தூல சரீரம் எனப்படும். இதன் விரிவை விசார சந்திரோதயத்தில் காண்க.

தூலமே மருவும் சீவன் சொல்லிய விசுவனாகும்
தூலமே மருவும் ஈசன் சொலும் விராட்புருடனாகும்
தூலமே அன்னகோசம் துன்னும் சாக்கிர அவத்தை
தூலகற்பனை ஈதென்று தொகுத்தது மனத்தில் கொள்வாய் 42

42. ஒரு ஸ்தூல தேகத்தை எனது என்று அபிமானிக்கும் ஜீவனுக்குப் பெயர் விசுவன். சகல ஸ்தூல சரீரத்தையும் எனது என்று அபிமானிக்கின்ற ஈசுவரனுக்குப் பெயர் விராட்புருஷன். இருவருக்கும் இது அன்னமய கோசம். இந்த சரீரத்தில் நிகழும் அவஸ்தை நனவு. இதுகாறும் கூறிப்போந்த ஸ்தூல சரீரமும், அதன் காரணமான பிரபஞ்சமும் கற்பனையாகத் தோன்றிய விதத்தைச் சொன்னோம்.

சீரிய ஈசனார்க்கும் சீவர்க்கும் உபாதி ஒன்றேல்
ஆரிய குருவே பேதம் அறிவது எப்படி என்றக்கால்
காரிய உபாதி சீவன் காரண உபாதி ஈசன்
வீரியமிகு சமட்டி வியட்டியால் பேதமாமே 43

43. குருதேவா! ஜீவர்களுக்கும், ஈசுவரனுக்கும் சரீர உபாதி ஒன்றானால், பேதம் யாதோ என அறிய விரும்புகிறேன். அன்பனே! தன்வரைக்கும் உள்ள பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளுபவன் ஜீவன். அதனால் இந்த ஜீவனை வியஷ்டி உபாதி உடையவன் என்றும் காரிய உபாதி உடையவன் என்றும் சொல்லப்படும். இதுபோல் சகல ஜீவர்களின் பொறுப்புகளையும் ஏற்றுக் கொண்டுள்ள ஈசுவரனுக்கு சமஷ்டி உபாதிகன் என்றும், காரண உபாதிகன் என்றும் சொல்லப்படும். ஆகையால் உபாதி நோக்கத்தால் பன்மை ஒருமையாகிய பேதம் கூறப்படும்.

மரங்கள்போல் வியட்டி பேதம் வனம்எனல் சமட்டி பேதம்
சரங்கள் தாவரங்கள் பேதத் தனியுடல் வியட்டி என்பார்
பரம்பிய எல்லாம் கூட்டிப் பார்ப்பதே சமட்டி என்பார்
இரங்கிய பலசீவர்க்கும் ஈசர்க்கும் பேதம்ஈதே 44

44. அன்பனே! மரங்கள் போல் வியஷ்டி பேதம்; வனமெனல் சமஷ்டி பேதம். சராசர உயிர்களுக்குள் தனியுடல் வியஷ்டி எனவும், எல்லாம் கூட்டிப் பார்ப்பது சமஷ்டி எனவும் கூறப்படும். ஜீவர்களுக்கும், ஈசுவரனுக்கும் உள்ள பேதம் இப்படிப் பார்த்துக்கொள்க. இதில் ஒவ்வொரு மரமாக களைந்தால் தோப்பு என்பது இல்லை. அதுபோல் ஒவ்வொரு ஜீவனையும் களைந்தால், அதாவது நேதி செய்தால் ஈசுவரனென்பது இல்லை என்பது தெளிவு. இதை ஔவைப் பிராட்டியின் ஞானக்குறளால் அறியலாம்.

"அனைத்து உருவாய அறிவை அகலின்
தினைத்துணையும் இல்லை சிவம்"

கற்பனை வந்தவாறு காட்டினோம் காண்பவெல்லாம்
சொற்பனம் போலும் என்றே துணிந்தவன் ஞானியாவன்
செல்புதை மழைக்காலம் போய்த் தெளிந்த ஆகாசம்போல
அற்புத முத்திசேரும் அபவாத வழியும் கேளாய் 45

45. இதுகாறும் கற்பனையாகத் தோன்றிய சிருட்டிக் கிரமத்தைச் சொன்னோம். அதாவது பழுதையை பாம்பாகவும், கட்டையைக் கள்வனாகவும், கானலை நீராகவும் எப்படி அறிந்ததோ அப்படியே பிரம்மத்தை ஜீவேஸ்வரஜகத்தாக அறிந்தோம். இங்ஙனம் அறிவதை ஆரோபம் எனக்கூறுவர் பெரியோர்கள். ஆகையால் காணப்படுவன

அனைத்தும் சொப்பனத்தில் காணும் பொருள்கள்போல பொய்யாக எண்ணித் துணிந்தவன் ஞானியாவான். மழைக்காலத்து கறுப்பு மேக ஆவரணம் நீங்கி, தெளிந்த ஆகாயத்தைப் போல், ஆரோபமான ஜீவேஸ்வர ஜகத்து கற்பனையாக ஒழிந்து தெளிவைக் கொடுக்கும் ஆத்மஞான மார்க்கத்தையும் நீ கேட்பாயாக. இதற்கு அபவாத உபாயம் எனக் கூறுவர். அபவாதம் என்பது தெளிவடைதல். இதன் உள்ளுரை சிருட்டியைக் கற்பனையாகக் கூற ஆரம்பித்த ஆசிரியர், வேதத்தில் கூறிய கிரம சிருஷ்டி, உகபற்சிருஷ்டி, அஜாதவாதம் ஆகிய மூவகையில் மந்தாதிகாரியை முன்னிட்டு கிரமசிருஷ்டி கூறியதே ஒழிய, அதற்கு முக்கிய உடன்பாடு அஜாதவாதமேயாம். அதை அனுசரித்து இந்நூலாசிரியரும் கற்பனை வந்தவாறு காட்டினோம் என்றார். கற்பனை, ஆரோபம், அத்தியாசம் என்பன ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்கள். கற்பனைத் தோற்றத்திற்குக் காரியம் எனவும், அதற்குக் காரணம் பிரமசக்தி எனவும் அறிக. இந்த காரிய காரணம் இரண்டும் சொல் மாத்திரமும், தோற்ற மாத்திரமுமே ஒழிய அதற்குத் தனிப் பொருள் இல்லை. அதற்கு பிரமமே உண்மைப் பொருளாகும். காரியம் பொய்யென்பது வேத சம்மதமாம் என்பதற்கு மேற்கோள் பிரமகீதை; சாந்தோக்கிய உபநிஷத் "காரியம் ஒருகால் உண்டாம் ஒன்றினால் அழிவதில்லை-காரியம் தான் ஒன்றோடே நண்ணும் என்று உரைத்தல் கூடாதாம்-பாருமின் என்று வானோர்க்கு உரைத்தனன் பதும மேலோன்". இதன் பொருள், "மண்ணின் காரியமான குடம் ஒரு காலத்து தோன்றும். விசாரித்துப் பார்க்கும் போது முற்றும் மண்மயமே ஆகையால் குடமில்லாமையால் அழிவதில்லை. காரியமான குடம் முக்காலத்தும் உற்பத்தியானதில்லை. அந்தக்குடம் மண்ணைவிட்டுப் போய் வேறொன்றோடே சேருமெனல் கூடாது. தேவர்களே இதை நன்றாக ஆராய்ந்து பாருங்கள்" என்று பிரமதேவன் கூறினான். இதை நோக்குவோர்க்கு சிருட்டியும், சிருட்டி கர்த்தாவும் காரியமாதலின் சொல் மாத்திரமும், தோற்ற மாத்திரமுமாம் என்பது பசுமரத்தாணி போல் உறுதியாம். மேலும் மாயாகாரியத்தை சொப்பனக் காட்சி பொருள் போல் எண்ணித் துணிந்தவன் ஞானியாக முடியுமே ஒழிய; துணியாதவன் ஞானியாக முடியாது என்பது குறிப்பால் கண்டு கொள்க. இதில் பிரம்மத்தை விட தனிப்பொருளாக, ஜீவேஸ்வர ஜகத்தாகக் காண்பது ஆரோபயுக்தி. ஜீவேஸ்வர ஜகத்தைப் பிரம சொரூபமாகக் காண்பது அபவாத யுக்தியாம்.

அரவு அன்று கயிறு என்றாற்போல் ஆள் அன்று தறி என்றாற்போல்
குரவன் தன் உபதேசத்தால் கூறுநூல் ஒளியைக் கொண்டு
புரம் அன்று புவனம் அன்று பூதங்கள் அன்று ஞானத்
திரம் என்னும் பிரமம் என்று தெளிவதே அபவாதம்காண் 46

46. குருதேவா! ஐயத்தின் நீங்கித் தெளிவு அடைய, உபாயம் அறிய விரும்புகிறேன். அன்பனே! இது பாம்பு அன்று, பழுதை என்பது போலும், புருஷனன்று கட்டை என்றாற்போலும், ஆச்சாரியர் உபதேசத்தாலும், வேதாந்த சாஸ்திரத்தாலும் நான் சரீரமல்ல, உலகுமுமல்ல, பஞ்சபூதமுமல்ல; இவையனைத்தும் கற்பனை; நிச்சயமாக நான் பிரம்மமேயாம். அதாவது ஒரே ஆத்ம சொரூபமே என்று தெளிவு அடைவதற்கு அபவாத யுக்தி எனப்பெயராம்.

## அவதாரிகை

மேலும் கற்பனைகள் ஒழிந்து தெளிவடைவதற்கு வழி கூறுகின்றார்.

படமும் நூலும்போல் செய்த பணியும் பொன்னும்போல் பார்க்கில்
கடமும் மண்ணும்போல் ஒன்றாம் காரிய காரணங்கள்
உடல்முதல் சுபாவம் ஈறாய் ஒன்றில்ஒன்று உதித்தவாறே
அடைவினில் ஒடுக்கிக் காண்பது அபவாத உபாயமாமே 47

47. அன்பனே! எங்ஙனம் ஆடையும் நூலும், பணிகளும் பொன்னும், குடமும் மண்ணும் ஆகிய இவை மூன்றும், காரியமும் காரணமும், ஒன்றாக அமைந்திருக்கின்றதோ, அவைகள் ஒன்றினின்றும் ஒன்றைப் பிரித்து அறிய முடியாதோ, அங்ஙனமே அவித்தை முதல் தூல தேக பரியந்தம் தோன்றிய தோற்றங்களை தத்தம் காரணத்துக்குள் ஒடுக்கிப் பார்த்தால் அனைத்தும் காரண வடிவமாக தெளிவது போல் முற்றும் பிரமமாக தெளிவது அபவாத உபாயமாம். இங்ஙனம் தெளிவதுவே முக்தியாம். அபவாத உபாயத்தைப் பற்றி திருக்குறள் மெய்யுணர்வு அதிகாரத்தின் ஐந்தாவது குறளுக்குப் பரிமேலழகர் உரையில் "இவையனைத்தும் நிலம் முதல் உயிர் ஈறாகிய தத்துவங்களின் தொகுதியென உணர்ந்து, அவற்றை நிலம் முதலாக தத்தம் காரணங்களுக்குள் ஒடுக்கிக் கொண்டு சென்றால் காரண காரியங்கள் இரண்டுமின்றி முடிவாய் நிற்பதனை உணர்தல் மெய்யுணர்வாம்" என்றார்.

தூடண தமத்தில் வந்த தோற்றமாம் சத்தி செய்யும்
ஏடணை விகாரம் சொன்னீர் இரண்டு சத்திகள் என்றீரே
மூடலாம் சத்தி செய்யும் மோகமும் சொல்லும் ஐயா
கேடறக் குருவே என்னக் கிருபையோடு அருள்செய்வாரே 48

48. குருதேவா! தாமசகுணம் இரண்டு சக்தியாகப் பிரிந்து, அதில் ஒன்று விட்சேப சக்தியாக மாறி மூவாசையாம் துன்பத்தைக் கொடுக்கும் என்று சொன்னீர்கள். மற்றொன்றான ஆவரண சக்தியானது ஜீவர்களை எப்படி மறைக்கின்றது என்பதைப் பற்றியும், அந்த மறைப்பினால் என்ன விளைவுகள் ஏற்படுகின்றது என்பதைப் பற்றியும் அருள் செய்ய வேண்டும் என்று பிரார்த்திக்கின்றேன்.

தான்நிகர் தனக்காம் ஈசன்தனையும் தங்களைத் தாம்கண்ட
ஞானிகள் தமையும்அன்றி நாஸ்தி நபாதி என்னும்
ஊனிடை உயிர்கள் உள்ளத்து உணர்விழி குருடாம் வண்ணம்
வான் நிலம் திசைகள் மூடும் மழைநிசி இருள்போல் மூடும் 49

49. அன்பனே! இந்த ஆவரண சக்தியானது யாரை மறைக்கும் யாரை மறைக்காது என்பதைப் பற்றிக் கூறுகின்றேன். சுத்த சத்துவகுண அம்சத்தால் இயற்கை உணர்வினனான ஈசுவரனையும், சற்குருவை அடைந்து வேதாந்த விசாரம் செய்து தன் நிஜ சொரூபம் பிரம்மம் என்றறிந்த ஞானிகளையும் மறைக்கமாட்டாது. இவர்கள் நீங்கலாக மற்றும் உள்ள மெய்ப்பொருள் ஒன்று இல்லை என்று சொல்லுகின்ற நாஸ்திகனையும், அங்ஙனம் பிரமம் இருந்தால் இவ்வுடம்பு போல் காணப்படானா? என்று சொல்லுகின்ற நபாதியேயும் அன்றி ஏனைய உயிர்களையும் இவ்வாவரணம் மறைக்கும். இதற்கு உவமானம் யாதோவெனின் ஐப்பசி மாதத்தின் அமாவாசை இரவில் காரிருள் எங்ஙனம் மறைக்குமோ, அங்ஙனமே மறைக்கும் எனக் கொள்க. இதன் உள்ளுரை இவ்வாவரணம் மறைக்கவில்லையெனின் சிருட்டிக்கு முன் சகலமும் சத்தாகவே இருந்தது என்ற வேதவாக்கியப்படி சிருட்டிக்குப் பின்னும் இடைநின்ற காலத்தும் சத்தாகவேதான் இருக்க வேண்டும். அங்ஙனம் ஆயின் தன்னை சச்சிதானந்தம் என்று ஏன் அறியவில்லை. இவ்வாவரண மறைப்பாலன்றி மற்று யாது காரணம் கூறுதி.

பூன்றமாம் பிரமத்துக்கும் புறத்துள விகாரங்கட்கும்
ஆன்ற கூடத்தனுக்கும் அகத்துள விகாரங்கட்கும்
தோன்றிய பேதம் சற்றும் தோன்றாமல் மறைத்துமூடும்
ஊன்றிய பவவியாதி உண்டாக்கும் உபாதி ஈதே 50

50. அன்பனே! இவ்வாவரணம் எவ்வாறு மறைக்கும் என்பதைக் கேட்பாயாக. பரிபூரணமாகிய பிரமத்தின் நித்தியத் தன்மையும், ஆகாசாதி ஐம்பூதத்தின் அனித்தியத் தன்மையும், சர்வ சாட்சியாகிய

ஆத்மாவின் அறிவு விளக்கத் தன்மையும், தேகமே நான் எனக் கொள்ளும் அகங்காராதிகளின் ஜடத்தன்மையும் ஆகிய இவைகளின் ஒன்றுக்கு ஒன்று உள்ள பேதம் தெரியக்கூடிய அறிவைக் குருடாகும் வண்ணம் மூடி மறைக்கும். ஜீவர்களுக்கு பிறவித் துன்பத்தைக் கொடுக்கும் பெரிய நோய் இவ்வாவரண சக்தியேயாம்.

ஆதாரம் மறைந்து போனால் ஆரோபம் எங்கே தோன்றும்
ஆதாரம் மறையாதாகில் ஆரோபம் இலையே என்றால்
ஆதாரம் சமம் விசேடமாம் என இரண்டு கூறாம்
ஆதாரம் சமமாம் எங்கும் ஆரோபம் விசேடமாமே 51

51. குருதேவா! பழுதை இல்லையென்றால் பாம்பு தோன்றக் காரணமில்லை. அதுபோல் பிரமம் இல்லையானால் தேகாதிப் பிரபஞ்சம் தோன்றாதல்லவா? அன்பனே, பழுதையும், பாம்பும் ஏக காலத்தில் தோன்றமாட்டாது. பழுதை தோன்றும்போது பாம்பு தோன்றாது. பாம்பு தோன்றும் போது பழுதை தோன்றாது. அதுபோல் எல்லாம் பிரமமாகத் தோன்றும் போது பிரபஞ்சம் தோன்றாது. பிரபஞ்சம் தோன்றும் போது பிரமம் தோன்றாது. இதற்கு சமம், விசேஷமெனப் பெயர்களாம். இவ்விரண்டில் ஒன்றுதான் விசேஷமாக விளங்கும்.

சகமதில் இது என் சுட்டாம் சமானந்தான் மறைந்திடாது
மிகஇது கயிறாம் என்னும் விசேடம்தான் மறைந்து போகும்
அகம்எனும் சமானம் தன்னை அஞ்ஞானம் மறைத்திடாது
பகர் விசேடமதாம் சீவன் பரன் எனும் அதனை மூடும் 52

52. அன்பனே! உலகத்தில் சமம், விசேஷம், கற்பித விசேஷம் என மூன்றுவிதமாகப் பெரியவர்கள் சொல்லுவார்கள். இதில் சமம் என்பது நிறைபொருளான பிரம்மத்தையும், விசேஷம் என்பது அந்த பிரம்மத்தின் சச்சிதானந்தத்தையும், கற்பித விசேஷம் என்பது தேகாதிப் பிரபஞ்சத்தையும் குறிக்கும். இதில் எல்லோருக்கும் பிரமம் சொரூபமாக இருந்த போதிலும், தேகாதிப் பிரபஞ்சமான கற்பித விசேஷமே தோன்றுகின்றது. பிரம்ம சொரூபமான ஜீவனுடைய விசேஷ பாகமான பரனெனக் கூறும் சச்சிதானந்தமே நான் என அறியவொட்டாது இவ்வாவரணம் மறைக்கும்.

கேவலநிலை தோன்றாமல் கெடுத்தது பஞ்சகோசம்
சீவனும் சகத்துமாகிச் செனித்த விட்சேபம் அன்றோ
ஆவரணம் தானே பாழ் அனர்த்தம் என்று உரைத்ததேதோ
மேவரும் குருவே என்று வினாவிடின் மகனே கேளாய் 53

53. குருதேவா! பிரம்மாத்ம ஐக்கிய ஞானத்தை அறிய வொட்டாமல் ஜனன மரணத் துன்பத்தைக் கொடுப்பது இந்த விட்சேப சக்தியல்லவா? அங்ஙனமிருக்க, விட்சேப சக்தியின் காரியமான பஞ்ச பூதமும், அதன் காரியமான ஸ்தூல சூட்சும சரீரமும், பஞ்சகோசமும், ஜீவனும் ஆகிய இவை யனைத்தும் விட்சேப சக்தியின் காரியமாயிருக்க, ஆவரண சக்திதான் பிறவித் துன்பமான வியாதியைக் கொடுக்கும் என்று தாங்கள் முன் ஐம்பதாவது செய்யுளில் கூறியதின் காரணம் தெரியவில்லையே. அதை அருள்வீராக.

தோற்றமாம் சத்திதானும் துன்பமாம் பவமானாலும்
ஆற்றலான் முத்தி சேர்வார்க்கு அனுகூலம் ஆகும் காண் நீ
ஊற்றமாம் பகற்காலம்போல் உபகாரம் நிசியால் உண்டோ
மாற்றம் என்னுரைப்பேன் மைந்தா மறைப்பது மிகப்பொல்லாதே 54

54. அன்பனே! பகல் காலம் போல் உபகாரம் இராக்காலத்தில் இல்லை அல்லவா? இராக்காலம் போல் ஆவரண சக்தியையும், பகல் காலம் போல் விட்சேப சக்தியையும் கொள்க. விட்சேப சக்தியில் தோன்றிய குரு சாஸ்திராதிகள், கேட்டல், சிந்தித்தல், தெளிதல் முதலியன செய்து உத்தமர்கள் ஆயினோர்களுக்கு முக்தி அடைய அனுகூலமாயிருப்பதை நீ கண்டுகொள்க. மேற்கூறிய ஆவரண சக்தி அப்படிக் கில்லாமல் கொடிய பிறவித் துன்பத்தைக் கொடுக்கும்.

சுழுத்தியில் பிரளயத்தில் தோற்றமாம் சகங்கள் மாண்டும்
அழுத்திய பவம்போய் முத்தி அடைந்தபேர் ஒருவருண்டோ
முழுத்த விட்சேபமெல்லாம் முத்தியில் கூட்டுகிற்கும்
கொழுத்த ஆவரணம் முத்திகூடாமல் கெடுத்த கேடே 55

55. குருதேவா! விட்சேப சக்தியின் காரியமான தேகாதிப் பிரபஞ்சங்கள் சற்றும் தோன்றாமல் இருப்பது முக்தியென்று சில பேர்கள் சொல்லுகிறார்கள். அது உண்மைதானாவென்று அருள் செய்ய வேண்டுகிறேன். அன்பனே! பிரதிதினம் யாவரும் அனுபவிக்கின்ற சுழுத்தி அவஸ்தையிலும், கற்பாந்த பிரளய காலத்திலும் சகல தேகாதிப் பிரபஞ்சங்களும் தத்தம் காரணத்துக்குள் லயம் அடைந்திருந்தும் பிறவித் துன்பம் நீங்கி முக்தியை அடைந்தவர்கள் ஒருவராவது உண்டோ? இல்லை. ஆகையால் விட்சேப சக்தியில் தோன்றிய அன்னபானாதிகளை உண்டு; கேட்டல், சிந்தித்தல், தெளிதலாதிகளைச் செய்தால் இப்போதே, இந்தக்கணத்திலேயே முக்தி அடைவாய். எனவே, முக்திக்குத் தடையாகவுள்ளது இந்த ஆவரண மூடலாகும்.

சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்றமான
சத்தியும் பொய்யே என்றால் சத்தி சாதனமா வந்த
முத்தியும் பொய்யாம் என்னில் மோக நித்திரை விலங்கால்
நித்திரை தெளியுமாபோல் நிருவாண நிலை மெய்யாமே 56

56. குருதேவா! பழுதையில் பாம்புபோலும், இப்பியில் வெள்ளி போலும், பொய்த்தோற்றமாய்த் தோன்றிய விட்சேப சக்தியின் காரியமான குரு சாஸ்திராதிகளும், அன்னபானாதிகளும் பொய்யாதலால் அதன் வாயிலாக உண்டான முக்தியும் பொய்யாகுமல்லவா? அன்பனே! ஒருவன் காணும் கனவில் பல துக்கத்தை அனுபவித்துக் கொண்டு இருக்கும் நேரத்தில் ஒரு புலியானது அவனுடைய கனவில் தோன்றினால், உடனே கனவு நீங்கி நனவு வரும். அப்பொழுது கனவில் தோன்றிய புலி பொய்யாயினும் அதனால் கனவில் உண்டான துக்கமும் பயமும் தீரும். அதுபோல் குரு சாஸ்திராதிகள் மாயையின் காரியமாய்ப் பொய்யானாலும் அதனால் உண்டாகும் ஆத்ம ஞானம் உண்மையாகும்.

இம்பரில் நஞ்சை நஞ்சால் இரும்பினை இரும்பால் எய்யும்
அம்பினை அம்பால் பற்றும் அழுக்கினை அழுக்கால் மாய்ப்பர்
வம்பியல் மாயைதன்னை மாயையால் மாய்ப்பர் பின்னைத்
தம்பமாம் அதுவுங்கூடச் சவம்சுடு தடிபோல் போமே 57

57. அன்பனே! உலகத்தில் விஷத்தை அதன் பிரதிகூலமான விஷத்தாலும், இரும்பை இரும்பாலும், ஆடையில் பற்றிய அழுக்கினை உவர்மண் முதலிய அழுக்காலும் கெடுப்பதை நாம் பார்க்கின்றோம் அல்லவா? அதுபோல் விட்சேப சக்தியின் காரியமான குருசாஸ்திராதிகளால் ஆவரணத்தைக் கெடுக்க வேண்டும். அதன் பின்னர் அந்த விட்சேப சக்தியின் காரியமான விருத்தியும் பிணம் சுடும் தடிபோல், பிரம்ம விசாரத்தால், நேதி நேதியால் போய்விடும்.

இந்த மாயையினால் சீவர்க்கு ஏழுஅவத்தைகள் உண்டாகும்
அந்த ஏழுஅவத்தை தம்மை அடைவினில் மொழியக்கேளாய்
முந்த அஞ்ஞானம் மூடல் முளைத்தல் காணாத ஞானம்
சந்ததம் கண்டஞானம் தழல்கெடல் குளிர்மையாதல் 58

58. அன்பனே! ஜீவர்கள் முக்தியை அடைந்துய்வதற்காக இந்த மாயையினால் ஏழவஸ்தைகள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளை நீ துருவி ஆராய்ந்து பார்த்தால் நீயும் அந்த முக்தியை அடைவாய்.

ஏழவஸ்தைகளின் பெயர்களாவன :

1. அஞ்ஞானம் (அறியாமை)
2. ஆவரணம் (மறைப்பு)
3. விட்சேபம் (பேதபுத்தி
4. பரோட்சம் (கேள்விஞானம்)
5. அபரோட்சம் (அறிந்த ஞானம்)
6. துக்கநிவர்த்தி
7. எல்லையற்ற ஆனந்தம்

ஆக ஏழுமாம்.

பிரமமாம் தனைமறந்த பேதைமையே அஞ்ஞானம்
பரன்இலை காணோம் என்று பகர்தல் ஆவரண மூடல்
நரன் ஒருகருத்தால் சீவன் நான் என முளைத்தல் தோற்றம்
குரவன் வாக்கியத்தால் தன்னைக்குறிக்கொளல் பரோட்சஞானம் 59

59. அன்பனே! இந்த ஏழில் நான்கு இதில் கூறுகின்றேன். கேட்பாயாக. கண்ட பூஷண நியாயம் போல், பிரம்ம சொரூபமாய் இருக்கும் தன்னை ஒரு ஜீவனாக எண்ணியதே அஞ்ஞானம். தான் அறிவு சொரூபனாக இருந்தும், அது தனக்கு விளங்கவில்லை என்பது

ஆவரணம். ஜீவன் தன்னை கர்த்தா-போக்தாவாக கருதிக் கொள்ளுதல் விட்சேபமாம். குருவாக்கியத்தால் அறிவு சொரூபமமான பிரம்மம் இருக்கிறது என்று கேள்வி ஞானத்தால் அறிவது பரோட்சம்.

தத்துவ விசாரம் செய்து சகல சந்தேகமும்போய்
அத்துவிதம் தானாதல் அபரோட்ச ஞானமாகும்
கத்தனாம் சீவபோதம் கழிவதே துக்கம் போதல்
முத்தனாய் எல்லாம் செய்து முடிந்தது ஆனந்தமாமே 60

60. ஏனைய மூன்றும் இதில் கூறுகின்றார். அன்பனே இருபத்தெட்டு தத்துவமும் விசாரித்து நேதி செய்தபின் எஞ்சியுள்ள அறிவே பிர்மம். பிர்மமே அறிவு என்ற அத்வைத ஞானம் அபரோட்சமாகும். பணிகள் அனைத்தும் ஒரே தங்கம்தான் என்று அறிவதுபோல், சர்வ ஆத்மாக்களும் ஒரே அறிவு சொரூபம் என்று அறிவதுவும் அபரோட்ச ஞானமாம். தன்னை கர்த்தா-போக்தாவாகக் கருதிய ஜீவபோதம் நீங்குவதே துக்க நிவர்த்தியாம். பேரறிவு வடிவமே தன் நிஜ சொரூபம் என்று அறிவது தடையற்ற அதாவது எல்லையற்ற ஆனந்தமாம். ஆக ஏழும் இவையெனக் கொள்க.

## இதன் உள்ளுரை

அபரோட்ச ஞானம் என்று கூறும்போது நாம ரூபங்களைப்போல் பிரம்மத்தை முன்னிலைச் சுட்டுப் பொருளாக்கி அறியவேண்டும் என்ற உரை கூறி காலத்தை வாளாபோக்கினர் பலர். இதை ஞானவாசிட்டம் வீரசேகரர் உரையின் 1651-ம் பக்கத்தில் "கேயூராதிகள் கனகம் என்னும் ஏக புத்தியுடையவன் நிர்விகற்பன்" என்றும், சிவானந்த சுவாமியின் கட்டளை வியாக்கியான உரையின் 227-வது பக்கம், "பணிகள் எல்லாம் தங்கமே என்று அறிவது அபரோட்ச ஞானமாம்" என்றும், "சிற்சொரூபம் தானே ஜெக சொரூபமானவெல்லாம்" என்ற சொரூப சாரத்தாலும், தனது நிஜ சொரூபம் பிர்மம் என்றும், அதுவே அனைத்துமாம் என்றும் அறிவது அபரோட்ச ஞானமாம்.

இதுநினக்கு அறியும் வண்ணம் இப்படி ஒருதிட்டாந்தம்
புதுமையாம் கதைகேள் பத்துப்புருடர் ஓர்ஆற்றை நீந்தி
உதக தீரத்தில் ஏறி ஒருவன் ஒன்பதுபேர் எண்ணி
அதனொடு தசமன் தான் என்று அறியாமல் மயங்கி நின்றான் 61

61. அன்பனே! இந்த ஏழவஸ்தையை விளக்கும் உதாரணத்தையும் நீ கண்டு கொள்க. இதை ஒரு கதையின் மூலமாக விளக்குகின்றேன். பத்து புருஷர்கள் ஒரு ஆற்றைக் கடந்து கரையில் ஏறி எல்லோரும் கரை சேர்ந்து விட்டார்களா என்று அறிவதற்காக; அதில் ஒருவன் ஒவ்வொருவனையும் எண்ணிப் பார்த்தான். மற்ற ஒன்பது பேரையும் பார்த்தவன், பத்தாமவன் தான் என்று அறியாமல் மயங்கி நின்றான்.

அறியாதமயல் அஞ்ஞானம் அவன்இலை காணோம் என்றல்
பிறியா ஆவரணமாகும் பீழைகொண்டு அழல் விட்சேபம்
நெறியாளன் தசமன் உண்டு நிற்கின்றான் என்ற சொல்லைக்
குறியாக எண்ணி நோக்கிக் கொள்வது பரோட்ச ஞானம் 62

62. அன்பனே! மேற்கூறிய ஏழவஸ்தையையும் உபமானம் வாயிலாக விளக்குகின்றேன். இதில் நான்கு உவமையைக் கூறுகின்றார். பத்தாமவன் தான் என்று அறியாமல் மயங்கி நின்றது அஞ்ஞானத்திற்கு உவமையாகும். பத்தாமவன் இல்லை; அவன் ஆற்று வெள்ளத்தோடே போய் விட்டான் என்பது ஆவரணத்திற்கு உவமையாகும். பத்தாமவன் நதியோடே போய்விட்டான் என்று புலம்புவது விட்சேபத்திற்கு உவமையாகும். (ஆப்தன்) வழிபோக்கன் வாக்கியத்தால் பத்தாமவன் இருக்கிறான் என்று நிச்சயித்துக் கொள்ளுதல் பரோட்ச ஞானத்திற்கு உவமையாகும்.

புண்ணிய பதிகன் பின்னும் புருடர் ஒன்பதின்மர் தம்மை
எண்ணும் நீ தசமன் ஆவை என்னவே தன்னைக் காணல்
கண்ணினில் கண்ட ஞானம் கரைதல் போவது நோய்போதல்
திண்ணிய மனதில் ஐயம் தெளிதல் ஆனந்தமாமே 63

63. இதில் ஏனைய மூன்றும் கூறுகின்றார். புண்ணியவானான ஆப்தன் ஒருவன் அவனைப் பார்த்து ஒன்பது பேரையும் எண்ணுக என்றான். அவனும் அவ்வாறு எண்ணினான். முடிவில் எண்ணியவனைப் பார்த்து நீயே பத்தாமவன் ஆவாய் என்று உணர்த்தினான். அவனும் தான் பத்தாமவன் என்று நிச்சயமாக அறிந்து கொண்டான். இதுவே அபரோட்ச ஞானத்திற்கு உவமையாகும். இதனால் பத்தாமவன் ஆற்று வெள்ளத்தில் இறந்தனன் என்ற துக்கம் நீங்குவது ஆறாவதான துக்க நிவர்த்திக்கு உவமையாகும். பத்தாமவன் தான் என்று நிச்சயித்த

சந்தோஷத்தைப் போல் ஐயம் திரிபு அற தன் நிஜ சொரூபம் பேரறிவு வடிவமாய்க் கண்டு தெளிவது ஏழாவதான எல்லையற்ற ஆனந்தத்திற்கு உவமையாகும். இதுவே தடையற்ற ஆனந்தமாம்.

தசபுமான் தனைக் கண்டாற்போல் சற்குரு மூர்த்தியே என்
நிசவடிவினை யான்காண நீர்காட்டல் வேண்டும் என்றான்
சுசிபெறும் இலக்கியார்த்தம் தொம்பதம் தற்பதங்கட்கு
அசிபதம் ஐக்கியம் செய்யும் அது செயும் உண்மை கேளாய் 64

64. குருதேவா! பத்தாமவன் தன்னைப் பத்தாமவன் என்று அறிந்தது போல என் நிஜ சொரூபத்தை நான் அறிய விளக்கிக் காண்பிக்க வேண்டுகிறேன். அன்பனே! சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தில், ஆறாவது அத்தியாயத்தில், சுவேதகேதுவுக்கு அவனது பிதாவான உத்தாலகர் உபதேசித்தருளிய தத்துவமசி என்ற மகாவாக்கியத்தை பின்பு உனக்கு உபதேசிக்கின்றேன். அது தற்பதம், த்வம்பதம், அஸிபதம் என மூன்றாயிருக்கும். அதன் வாயிலாக ஆத்மாவே பிரமம் என்ற ஐக்கிய ஞானத்தை அறிவிக்கின்றேன்.

விண் ஒன்றை மகாவிண் என்றும் மேகவிண் என்றும் பாரின்
மண் ஒன்று கடவிண் என்றும் மருவிய சலவிண் என்றும்
எண்ணும் கற்பனைபோல் ஒன்றே எங்குமாம் பிரமம் ஈசன்
நண்ணும் கூடத்தன் சீவன் நான்கு சைதன்யமாமே 65

65. அன்பனே! மேற்கொண்டு 82-வது செய்யுள் வரை நான் உனக்கு மகா வாக்கியத்தை விளக்கிக் கூறுகின்றேன். ஒரே ஆகாய மானது நான்கு விதமாகச் சொல்லப் படுகின்றது. அதாவது, எங்கும் நிறைந்துள்ள ஆகாயத்தை மகாகாயம் எனவும், மேகஜலத்தில் பிரதிபிம்பித்த ஆகாயத்தை மேகஜலப் பிரதிபிம்ப ஆகாயம் எனவும், ஒரு குடத்தில் தோன்றும் ஆகாயத்தை கடாகாயம் எனவும், அந்த குடத்தில் ஜலம் நிரம்பிய பின் அதில் தோன்றும் ஆகாய பிரதிபிம்பத்தை கடஜல பிரதிபிம்ப ஆகாயம் எனவும் நான்காக எண்ணும் கற்பனை போல்; சைதன்ய சொரூபமான பிரமம் ஒன்றே. அது எங்கும் நிறைந்திருத்தலால் பிரமம் என்றும், ஐந்தொழில் புரிவதால் ஈசுவரனென்றும், ஜீவசாட்சியாய் இருத்தலால் கூடஸ்தனென்றும், சரீரத்தை நான் என்று அபிமானித்தலால் ஜீவனென்றும் நான்காகப் பிரித்துக் கூறினும், ஆகாயத்தை நான்காகக் கூறுவது எங்ஙனம் கற்பனையோ அங்ஙனமே சேதன சொரூபத்தை நான்காகக் கூறுவதும் கற்பனையாகும்.

பூச்சிய ஈசன் சீவன் புகல்பதம் இரண்டினுக்கும்
வாச்சியம் லட்சியம்தான் மலமிலாப் பிரமம் ஆன்மா
காய்ச்சிய பாலில் நெய்போல் கலந்து ஒன்றாம் கடைந்து எடுக்கும்
ஆச்சியம் என்ன உன்னை அறிந்து நீ பிறிந்து கொள்ளே 66

66. அன்பனே! முன் 64-வது செய்யுளில் கூறிய மூன்று பதத்தின் தாற்பரியத்தைக்கேட்பாயாக. ஒவ்வோர் பதத்திற்கும் வாச்சியம் லெக்ஷியம் என விளக்கம் கூறுவர் அறிஞர்கள். உதாரணமாக நாமக் காரன் குந்தக்காரன் என்பதில் நாமமும், குந்தமும் வாச்சியார்த்தமாம் அவைகளை ஏற்றுக்கொண்டு இருப்பவர்கள் லட்சியார்த்தமாம். இதுபோல் தத் பதத்திற்கு வாச்சியார்த்தம் சமஷ்டி உபாதியுடைய ஈசுவரன். லட்சியார்த்தம் வியாபக சேதனமான பிரமமாம். இனி இரண்டாவது பதமான த்வம் பதத்தின் வாச்சியார்த்தமும் கூறுகின்றேன். மூன்று சரீரத்தையும் நான், எனது என்று அபிமானிக்கும் ஜீவனும், சரீரமும் வாச்சியார்த்தமாம். ஜீவசாட்சியான கூடஸ்தன் லட்சியார்த் தமான ஆத்மாவாகும். பாலும், நெய்யும் ஒன்றாயிருந்தாலும் காய்ச்சிக் கடைந்து வெண்ணையை எடுப்பது போல் விவேக விசாரத்தால் உன்னை லட்சியார்த்த சொரூபமான கூடஸ்தனே பிரமம் என்று அறிந்து நீ வாச்சியார்த்தத்தில் இருந்து பிரிந்து கொள்ளக் கடவாய்.

பிறிவது எப்படி என்றக்கால் பிணமாகும் உடல்நான் என்னும்
அறிவினைக் கொல்லல் வேண்டும் ஐம்பூத விகாரமன்றோ
வெறியதோர் துருத்தி மூக்கில் விடுவதுபோல் உன் மூக்கால்
எறிபிராணனும் நீ அல்லை இராசதகுண விகாரம் 67

67. அன்பனே! பிரிந்துகொள்வது எவ்வாறு என வினவின் கேட்பாயாக. இந்த ஸ்தூல தேகத்தை ஆத்மாவெனக் கருதும் பிராந்தியைக் களைதல் வேண்டும். ஏனெனில் அது ஐம்பூதங்களின் காரியமன்றோ! அன்றி அது ஜடமும் ஆகும். அதுவும் அன்றி அன்னமய கோசமும் ஆகும். நீ அவைகளுக்கு வேறான சித்து சொரூபனல்லவா? இனி மூக்கால் விடும் பிராண வாயுவும் நீ என்ற சொல்லுக்கு உண்மைப் பொருள் அல்ல. அதுவும் சடம் அன்றி அபஞ்சீ கிருதக் கலப்படையாத பூதங்களின் ரஜோகுண காரியமாம். ஆகையால் பிராணவாயுவும் நீ அல்ல என்று உணர்க அன்பனே!

கரணமாம் மனது புத்தி கருத்தாவாம் அவைஆன்மாவோ
தரமுள இரண்டு கோசம் சத்துவகுண விகாரம்
வரமறு கனவு ஆனந்தமயனையும் நான்என்னாதே
விரவிய தம அஞ்ஞான விருத்தியின் விகாரமாமே 68

68. ஒன்றை நினைப்பதற்குக் கருவியான மனமும், தன்னை கர்த்தா போக்தாவாகக் கருதும் புத்தியும், ஆத்மாவாகிய நீ அல்ல. இவையிரண்டும் அபஞ்சீகிருத பூத காரியமான மனோமய கோசமும், விஞ்ஞானமய கோசமுமாம். ஆகையால் இதுவும் ஆத்மாவாகிய நீ அல்ல. இனி மிஞ்சிய சுழுத்தியவஸ்தையான ஆனந்தமய கோசமும் நான் என்று நினையாதே. ஏனெனின் அது அஞ்ஞான விருத்தியின் காரியம் ஆதலின், பஞ்சகோசமும் ஆத்மாவாகிய நீ அல்ல.

சத்தொடு சித்து ஆனந்தம் சமம் திரம் சாட்சி ஏகம்
நித்தியம் வியாபி ஆன்மா நீ அதுவாய் அறிந்து
பொத்தொடு சடம் துக்காதி பொருந்து பேதங்களான
குத்திர பஞ்சகோசக் குகைவிட்டு வெளியிலாவாய் 69

69. குருதேவா! இவைகள் நானல்லவென்றால் நான் என்பது யார்? அன்பனே! சத்தாகவும், சித்தாகவும், ஆனந்தமாகவும், நித்தியமாகவும், பூரணமாகவும், சங்கற்ப விகற்பம் அற்றதாகவும், மாறுதல் அடையாததாகவும், மூன்று தேகத்துக்கும் சாட்சியாகவும், சர்வாத்மாவாகவும், அழிவற்றதாகவும், எங்கும் நிறைந்ததாகவும் உள்ள ஆத்மாவே நீயாம் என்று அறிந்து, அசத்து, ஜட, துக்க சுபாவமான பஞ்சகோச வடிவமான சரீரத்தை ஆத்மாவென்னும் பிராந்தியை விட்டுவிடக் கடவாய்.

பஞ்சகோசமும் விட்டு அப்பால் பார்க்கின்ற போதுபாழே
விஞ்சியது அதுவல்லாமல் வேறொன்றும் தெரியக் காணேன்
அஞ்சன இருளையோ நான் அகம் என அனுபவிப்பேன்
வஞ்சமில் குருவே என்ற மகன்மதி தெளியச் சொல்வார் 70

70. குருதேவா! பஞ்சகோசமும் ஆத்மா அல்லவென்று நேதி செய்தபின் மிச்சம் ஒன்றும் காணேன். இங்ஙனம் ஒன்றும் காணேன் என்ற சூன்யத்தைத் தானோ என் நிஜ சொரூபமென்று வேதம்

கூறுகின்றது? கபடமற்ற குருவே என்று வினவிய சீடன் புத்தி தெளிவடையும்படி மேலும் உபதேசிக்க ஆரம்பித்தார்.

முன் புகல் தசமன் புத்தி மோகத்தால் எண்ணி எண்ணி
ஒன்பதுபேரைக் கண்ட ஒருவனாம் தனைக்காணாத
பின்பு அவனிடையில் கண்ட பெரியபாழ் அவனோ பாராய்
அன்புள மகனே காண்பது அடங்கலும் காண்பான் நீயே 71

71. அன்பனே! முன்பு தசமன் திருஷ்டாந்தத்தில் பத்தாமவன் ஒன்பது பேரை எண்ணிப் பார்த்தபின் பத்தாமவன் நான்தான் என்று நிச்சயமாக அறிந்தானல்லவா? அதுபோல் ஒன்றும் காணவில்லை என்ற சூன்யத்தை அறிந்தவன், அந்த சூன்யத்துக்கு வேறானவன் ஆகும். அன்புள்ள சீடனே! காணப்பட்ட சகல திரிசியங்களுக்கும் (அறிபடு பொருளுக்கும்) விளக்கம் தரும் அறிவு வடிவமான சிற்சொரூபனாகிய ஆத்மாவே நீயாம்.

தூல சூக்கும அஞ்ஞானம் தோன்றும் மூன்று அவத்தைதாமும்
காலம் ஓர்மூன்றும் சன்மக்கடல் எழும் கல்லோலங்கள்
போலவே வந்து வந்து போன எத்தனை என்பேன் நான்
ஆல்அமர் கடவுள் ஆணை அவைக்கெலாம் சாட்சி நீயே 72

72. அன்பனே! ஸ்தூல, சூட்சும, காரணம் ஆகிய மூன்று தேகங்களும்; அந்தந்த தேகங்களுக்கு உளவாகும் நனவு, கனவு, உறக்கமாகிய அவஸ்தைகளும்; சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் ஆகிய மூன்று காலங்களும் ஆகிய இவைகள் ஜனனமாகிய சமுத்திரத்தின் அலைகைள் போலவே வந்துவந்து போன பிறவிகள் எண்ணற்றவைகளாகும். ஆகையினால் கல்லாலின் கீழ் சனகாதி முனிவர்களுக்கு குருமூர்த்தமாய் எழுந்தருளிய தட்சிணா மூர்த்தியின் மேல் ஆணையாக இவைகள் அனைத்திற்கும் சாட்சி சொரூபமான ஆத்மா நீயேயாம்.

எல்லாம் கண்டு அறியும் என்னை ஏதுகொண்டு அறிவேன் என்று
சொல்லாதே சுயமாம் சோதிச் சுடருக்குச் சுடர் வேறு உண்டோ
பல்லார்முன் தசமன் தன்னைப் பார்ப்பதும் தனைக்கொண்டேதான்
அல்லாது பதினொன்றானும் அவனிடத்து உண்டோ பாராய் 73

73. சகல பதார்த்தத்தையும் அறியும் அறிவை எதிரிட்டு அறிவதற்கு வேறு ஒரு அறிவு வேண்டுமே என்று நீ சந்தேகப்படாதே! உற்பத்தி நாசமின்றி இயற்கையாக அதாவது அநாதியாக; அதுவும் வாஸ்தவ அநாதியாக உள்ள இந்த அறிவை அறிவதற்கு வேறு அறிவு இல்லை. எது போல எனின் முன் பத்தாமவன் தன்னை பத்தாமவன் என்று தன்னைத் தானே அறிந்தானன்றி பதினொன்றாமவனும் அவனிடத்தில் உண்டா? இல்லையல்லாவா? இதை நீ யூகித்து அறியக்கடவாய்.

அறிவுக்கும் அறிவு செய்யும் அறிவு வேறு உண்டு என்று எண்ணும்
அறிவற்ற குதர்க்க மூடர்க்கு அனவத்தை பலமாய்த் தீரும்
அறிபடும் பொருள் நீ அல்லை அறிபடாப் பொருள் நீ அல்லை
அறிபொருள் ஆகும் உன்னை அனுபவித்து அறிவாய் நீயே 74

74. அறிவை விளக்க மற்றோர் அறிவு உண்டென்று நினைப்பவர்கள் மூடர்கள். அதிலும் குதர்க்க மூடர்கள். அவர்களுக்கு முடிவற்ற தோஷமுண்டாகும். ஆகையால், உன்னால் அறியப்படும் பொருள்களும் நீ அல்ல; உன்னால் அறியப்படாது ஒழியும் பொருள்கள் இருந்தால் அதுவும் நீயல்ல; பின் நீ யார் எனில், சுத்த அறிவே நீயாம். இதற்கு உள்ளுரை, பிரக்ஞானம் பிரமம். அதாவது பேரறிவே பிரமம் என்ற வேதவாக்கியத்தை காற்றில் பறக்க விட்டு விட்டு, கடவுள் என்பது அறிவுக்கு அறிவு எனக்கூறி தானான அறிவை எட்ட அறியாது குழம்பி இடர்பட்டார் பலர். பாவம் அறிவுக்கு அறிவு என்று கூறுவது வேதத்திற்கும், ஆன்றோர் வாக்கியங்கட்கும் விரோதமாகும். ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகள் தேவாரம், திருக்கேதாரம் பண் 1016-ல்,

"அறிவானிலும் அறிவான் அல" என்றும், திருமந்திரம் அறிவுதயம் என்ற தலைப்பின் கீழ் நாலாவது பாட்டில், "அறிவுக்கு அறிவு அல்லது ஆதாரமும் இல்லை" என்றும் மேற்படி திருமந்திரம்,

"எல்லாம் அறியும் அறிவு அதனை விட்டு
எல்லாம் அறிந்தும் இலாபம் இங்கில்லை
எல்லாம் அறியும் அறிவினை நான் என்னில்
எல்லாம் அறிந்த இறை எனலாமே" என்றும்;

ஔவையார் குறள் :-

"அனைத்து உருவாய அறிவை அகலின்
தினைத் துணையும் இல்லை சிவம்" என்றும்

சுப்ரமணிய பாரதியார் பாடல் :-

"எதனோடும் நின்றோங்கும் அறிவொன்றே
தெய்வம் என்று ஓதியறியீரோ" என்றும்

பாகவத புராணம் :-

"வாக்கினைக் கடந்து ஓங்கி மற்றெங்கணும்
நீக்க மின்றி நிறைந்த அறிவினை - ஊக்கமுற்று
உணர்தற்கு இடனாகலின்
ஆக்கையுங் குருவாயது அரசனே"என்றும்

பிரம்ம கீதை தைத்திரிய உபநிஷத்து :-

"மையல் ஒன்றற இவ்வறிவினை அறியின்
மானிடன் முத்தனாம் அன்றி
துய்ய கர்மத்தால் மைந்தரால் மற்றோர்
பொருளினால் உற்பவம் துடையான்" என்றும்

கூறிப்போந்துள்ள சற்பிரமாணப்படி இந்நூலாசிரியரும் அறிவொன்றே நித்தியமெனவும் அதுவே உன் நிஜசொரூபம் எனவும் கூறினார்.

மதுரமாம் கட்டி சுட்ட மாப்பணியாரம் எல்லாம்
மதுரம் ஆக்கிய அதற்கு மதுரந்தான் சுபாவம் அன்றோ?
அது இது எனும் சடங்கள் அறிவாக அறிவைத் தந்தே
அது இது இரண்டும் ஆகா அகம் பொருள் அறிவாய் நீயே. 75

75. அன்பனே! ஆத்மா அனுபவ வடிவமாதலின் அதை அறிபடு பொருளாக்கி அனுபவிக்க முடியாது. எதுபோலவெனின் மதுர சுபாவமான வெல்லக் கட்டியைச் சேர்த்து சுட்ட மாப்பணியாரம் எல்லாம் மதுரமேயன்றோ! அதுபோல் அது இது என்னும் ஜடவஸ்துக்களை விளக்கிக் கொண்டிருக்கும் அறிவு சொரூபன் நீயேயாம். வெல்லத்திற்கு மதுரம் கொடுப்பது வேறொன்றில்லாதது போல் அனுபவ வடிவமான ஆத்மா அனுபவத்திற்கு (எதிரிட்டு) விஷயமாகாமையால், அதற்கு அனுபவம் தேவையில்லை.

**இதன் உள்ளுரை**

"ஆத்மாவை முன்னிலைச் சுட்டுப் பொருளாய் அனுபவிக்க வேண்டும் என்று முற்பட்டார்கள் பலர். முன்னிலைச் சுட்டுப் பொருள் அசத்து என்று இவர்கள் அறியார்கள் போலும். இதைப் பஞ்சதசி முதற் புத்தகம் 201-ஆம் பக்கத்தில் "ஆத்மா தானே அனுபவமென்னும் நித்திய ஞான வடிவமாயிருத்தலால் அதற்கு அனுபவிக்கப்படும் தன்மையில்லை" என்று கூறியுள்ளதையும், இவ்வாறே, "தோன்றுவதெல்லாம் அசத்து" என்ற தேவிகாலோத்திரமும், "உணர்வுரு அசத்து"என்ற சிவஞான போத சூத்திரமும் ஓதி உணர்வாயாக!

இந்த நீ துவம் பதத்தின் இலட்சியப் பொருளாம் என்றும்
பந்தமில் பிரமமே தத் பதம்தனின் இலட்சியார்த்தம்
அந்தமாம் சீவன் ஈசன் அவர்களே வாச்சியார்த்தம்
சந்ததம் பேதம் ஆவார் தமக்கு அயிக்கியம் கூடாதே 76

76. அன்பனே! முன் 63-ல் கூறிய முப்பதத்தின் உட்பொருளைக் கேட்பாயாக. மூன்று சரீரத்திற்கும், ஐந்து கோசத்திற்கும், மூன்றவஸ்தைக்கும், நான் என்ற சொல்லுக்கும் சாட்சியாய் விளங்கும் அறிவே, த்வம்பதத்தின் இலட்சியப் பொருளாகும். மாயைக்கு அதிஷ்டானமான பிரமமே தத்பதத்தின் இலட்சியப் பொருளாகும். ஜீவனென்பதும், ஈசுவரனென்பதும் இரண்டு பதத்திற்கும் வாச்சியப் பொருளாகும். இந்த ஜீவ, ஈசுவரனாகிய இரண்டிற்கும் ஏகத்துவமான ஐக்கியம் கூடாது. இதில் அந்தமாம் ஜீவன், ஈசன் என்றதில், ஈசுவரனுக்கு அந்தம் உண்டோ எனின் இதற்கு ஸ்ரீபொன்னம்பல சுவாமிகள் உரையில் "பிரம்ம வித்தையினால் இருவரும் நாசமாகும்" என்று கூறியிருப்பதால் அறிக.

பேதமானதுவும் கேளாய் பேராலும் இடங்களாலும்
ஓதரும் உபாதியாலும் உடலாலும் உணர்வினாலும்
பாதலம் விசும்பு போலப் பலதூரம் அகன்று நிற்பர்
ஆதலால் இவர்க்கு எந்நாளும் அயிக்கியம் என்பது கூடாதே 77

77. அன்பனே! பேதம் எவ்வாறாமெனில் ஜீவன், ஈசன் என்ற பெயராலும்; பிண்டம், அண்டம் என்ற இடங்களாலும்; காரிய, காரண உபாதியாலும்; வியஷ்டி, சமஷ்டி சரீரத்தாலும்; கிஞ்சிக்ஞன், சர்வக்ஞன் என்ற உணர்வாலும்; இவர்கள் பாதாள உலகமும், விண்ணுலகமும் போல பல தூரம் அகன்று நிற்பார்கள். ஆகையால் இவர்களுக்கு எந்தக் காலமும் அபேதம் உண்டாக மாட்டாது. இதில் காரிய உபாதியே வியஷ்டி உபாதி எனவும், காரண உபாதியே சமஷ்டி உபாதி எனவும் கொள்க. இதில் தேகம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகிய ஏழும், ஜீவனுக்கு காரிய உபாதிகளாம். சர்வேஸ்வரத்துவம், சர்வக்ஞத்துவம், சர்வேந்தரியாமித்வம், சர்வ காரணத்வம், சர்வ ஸ்திதித்வம், சர்வ சம்ஹாரத்வம், சர்வ சிருஷ்டித்வம் ஆகிய ஏழும் ஈசுவரனுக்கு காரண உபாதிகளாம்.

வடநூல் வல்லவர்கள் சொல்லும் வாசகப் பொருள் சேராமல்
இடராகின் பொருளாம் வண்ணம் இலக்கணை உரையால் கொள்வார்
திடமான அதுவும் மூன்றாச் செப்புவார் விட்டது என்றும்
விடலிலாதது என்றும் விட்டுவிடாதது என்றும் பேராமே 78

78. குருதேவா! ஜீவேஸ்வரர்களுக்குள்ள பேதம் அறிவதற்கு இலக்கண விதி எவ்வாறாம்? அன்பனே! வடநூலார் கூறும் ஜீவன், ஈஸ்வரன் என்ற வாக்கியத்தில் அர்த்த பேதம் தோன்றுமேயானால் அதை நீக்கி அந்த சொற்களுக்குப் பொருள் தோன்றுமாறு மூன்று இலக்கண விதிகளைக் கூறுகின்றேன். அவையாவன :- விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டுவிடாத இலக்கணை எனப்பெயராம். இதில் உவமானமாகக் காட்டுவது இலக்கணமும், உபமேயமாகக் காட்டுவது இலக்கியமும் ஆகும். இது பின்வரும் கவியால் விளங்கும் என்றறிக. இலக்கணம் எனினும், இலட்சணம் எனினும் ஒக்கும். இலக்கியமெனினும், இலட்சியமெனினும் ஒக்கும்.

கங்கையில் கோஷம் என்றும் கறுப்புச் சேப்பு ஓடுதென்றும்
தங்கிய சோயம் தேவதத்தன் என்றும் சொல்வார்கள்
இங்கு உதாரணங்களாக்கி இந்த மூன்று உரைகளாலே
துங்கநூல் விரோதமான சொல்லெலாம் பொருளாம் தானே 79

79. அன்பனே! தத்வமசி மகா வாக்கியத்தின் பொருளை விளக்குவதற்காக விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டுவிடாத இலக்கணை ஆகிய மூன்றுக்கும் உதாரணப்பெயர் கூறுகின்றேன். கங்கையில் கோஷமென்றும், கறுப்பு சிகப்பு ஓடுதென்றும், சோயம் தேவதத்தன் என்றும் சொல்வார்கள். இந்த மூன்று உதாரணங் களினாலேயே, வேதத்தில் கூறப்பட்டுள்ள வாச்சிய, லட்சியங்களுக்கு ஏகத்வம் பொருந்தும், பொருந்தாதென்ற விரோத பாகங்கள் நீங்கி தெளிவு ஏற்படும். இங்கே கங்கையில் கோஷம் அல்லது கிராமம் என்பதை விட்ட இலக்கணைக்கும், கறுப்பு சிகப்பு ஓடுது என்பதை விடாத இலக்கணைக்கும், சோயம் தேவதத்தன் என்பதை விட்டுவிடாத இலக்கணைக்கும் உதாரணமாகக் கொள்க.

## இதன் உள்ளுரை

கங்கையில் கோஷம் என்று கூறும்போது கங்கையில் கோஷம் எனப்படும் சத்தம் கங்கையில் இராது; கரையில் நிற்பவர்களிடம் தான் இருக்கும் அல்லது கங்கையில் கிராமம் என்கிறபோது, கங்கையில் கிராமம் இராது; கரையில்தான் இருக்கும் என்று கங்கையை விட்டு, கரையைக் கொள்வது போல், த்வம்பத வாச்சியார்த்தமான மூன்று சரீரம், மூன்றவஸ்தை, மூவகை அபிமான ஜீவத்தன்மை ஆகியவைகளை விட்டு, அவைகளை விளக்கிக் கொண்டிருந்த அறிவே கூடஸ்தன்; அதுவே தன் நிஜ சொரூபம் என அறிவது விட்ட இலக்கணையாம். விடாத இலக்கணையாவது, கறுப்பு நிறமுள்ள பசுவும், சிகப்பு நிறமுள்ள குதிரையும் ஓடுகின்றன என்று கூறும்போது, கறுப்பு நிறத்தையும், சிகப்பு நிறத்தையும் விடாமல் அதைத்தாங்கி நின்ற பசுவையும், குதிரையையும் அறிவது போல் சமஷ்டி, ஸ்தூல, சூட்சும, காரண சரீரங்களும், சமஷ்டி அவஸ்தைகளும், சமஷ்டி அபிமான நாமங்களும் விடாமல், அதை விளக்கிக் கொண்டிருந்த வியாபக அறிவும், மேற்கூறிய கூடஸ்த அறிவும், ஒரே அறிவுதான் என்றும், அதுவே தனது நிஜவடிவாம் என்றும் அறிவது விடாத இலக்கணையாம்.

### அவதாரிகை

விட்டுவிடாத இலக்கணைக்கு உதாரணம் கூறுகின்றார்.

பன்னிய சோயம் என்னும் பதங்களின் வாச்சியார்த்தம்
அன்னிய தேயம் காலம் அவன் இவன் என்பவெல்லாம்
சொன்ன இவ்விரோதம் விட்டுத் தொடர் இலக்கியம் விடாமல்
உன்னிடில் தேவதத்தன் ஒருவனை வெளியாக் காட்டும் 80

80. அன்பனே! முன்கூறிய சோயம் என்னும் பதத்திற்கு உதாரணம் கூறுகின்றேன். காசியில் அரசனாக இருந்த ஒருவன், பிற்காலத்தில் சிதம்பரத்தில் பிச்சை ஏற்பவனாக இருக்கின்றான். இவனை காசியில் அரசனாக இருந்த காலத்து பார்த்த மற்றொருவன் சிதம்பரத்திலும் பார்த்தான். அப்பொழுது அவன்தான் இவன் என்றார். இந்த சொல்லில் உள்ள விரோத பாகமான அந்த தேசமும், அந்த காலமும்; இந்த தேசமும், இந்த காலமும் விட்டு பார்த்தால் அவன் ஒருவனேயாம் என்பது திண்ணம் அல்லவா? உவமானமெனினும் திருஷ்டாந்தமெனினும் ஒக்கும்.

தத்துவம் எனும் பதங்கள் பிரமமாய்ச் சாட்சியான
வத்துவை விடாமல் பேத வாச்சியார்த்தத்தை விட்டு
நித்தமும் அது நீயாகும் நீ அதுவாகும் என்னும்
அத்தமும் அகண்டம் என்றே அசிபத ஐக்கியம் காட்டும் 81

81. அன்பனே! முன் கவியில் கூறிய திருஷ்டாந்தத்திற்கு, தாஷ்டாந்தம் இக்கவியில் கூறுகின்றேன் கேட்பாயாக. வேதங்களுக்கு முக்கிய உடன்பாடாகிய மூன்று இலட்சணைகளின் வாச்சியார்த்தமாகிய பாகத்தை விட்டுவிடுதல் பாகத்தியாக இலட்சணையாம். முன் திருஷ்டாந்தத்தில் அவனே இவன் என்று அறிந்ததுபோல், தத்பத, த்வம் பதங்களின் வாச்சியார்த்தமான சமஷ்டி, வியஷ்டி உபாதிகளை நேதி செய்து பார்த்தால் ஜீவசாட்சியான கூடஸ்தனும், ஈசுவர சாட்சியாகிய பிரமமும், ஏகம் அதாவது இரண்டும் ஒரே நிறைபொருள். இப்படி நிறைந்த பொருளான பிரமமே நீயாகும். மேற்கோள் ரிபுகீதை : "தற்பத லட்சியமான பிரமரூபம், துவம்பத லட்சியமான நீயேயாவாய். அற்பமும் இதில் ஐயம் இல்லை, அகண்ட பரசிவம் தன்னாணை அறைந்தது உண்மை" என்பதனால் அறிக மேலும் த்வம்பத விசாரணையில் தேர்ந்த அறிவு நீக்கமற எங்கும் நிறைந்த பொருள் ஆகும் என்பதை முன் 74-வது கவியின் சாரத்தில் காட்டிய மேற்கோளே சாலச்சிறந்தது. அதில் சிறிதளவு இங்கே காண்பிப்போம்.

"அனைத்துருவாய அறிவை" என்ற ஔவைக்குறளும், "எங்கணும் நீக்கமின்றி நிறைந்த அறிவினை" என்ற பாகவத புராணமும், "பறையர் தம்முள்ளும், பண்டிதர் தம்முள்ளும் அறிவன் ஏகன்" என்ற சிவஞான வள்ளலார் சாஸ்திரமும், "உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து" என்ற நம்மாழ்வார் வாக்கியமும், "மெய்யறிவுருவாம் தெய்வமே" என்ற ராமலிங்க அடிகள் வாக்கியமும், "அறிவான தெய்வமே" என்ற தாயுமானவர் வாக்கியமும் ஆகிய ஆன்றோர் மகா வாக்கியங்களால் அறிக.

கடநீரில் மேகநீரில் கண்ட வான் இரண்டும் பொய்யே
குடவானும் பெரியவானும் கூடி ஒன்றாம் எப்போதும்
இடமான பிரமம் சாட்சி இரண்டும் எப்போதும் ஏகம்
திடமாகச் சுவானுபூதி சிவோகம் என்று இருந்திடாயே 82

82. அன்பனே! மேகஜலப் பிரதிபிம்ப ஆகாயமும், குடத்திற்குள் நிரம்பிய ஜலத்தில் தோன்றும் பிரதிபிம்ப ஆகாயமும் ஆகிய இவை இரண்டும் பொய்யேயாம். குடத்திற்குள் எப்பொழுதும் உள்ள ஆகாயமும், எங்கும் நிறைந்த ஆகாயமும் எக்காலமும் அபேதமேயாம். அதுபோல் ஜீவசாட்சியான கூடஸ்தனும், ஈசுவர சாட்சியான பிரமமும் எப்பொழுதும் அபேதமேயாம். ஆகையால் இந்த உண்மையை அறிந்து பிரம்ம சொரூபமான சிவம் நானே என்று திட நிச்சயமாக இருப்பாயாக.

தஞ்சமாம் குருவும் சொன்ன தத்துவ வழிதப்பாமல்
பஞ்சகோசமும் கடந்து பாழையும் தள்ளி உள்ளில்
கொஞ்சமாம் இருப்பும் விட்டுக் கூடத்தன் பிரமம் என்னும்
நெஞ்சமும் நழுவி ஒன்றாய் நின்ற பூரணத்தைக் கண்டான் 83

83. குருவானவர் இதுகாறும் கூறிய உபதேச மொழிகளைக் கேட்ட சிஷ்யன், தனக்கு உறுதுணையாகிய ஆச்சாரியர் அருளிச்செய்த தத்துவ வழி தவறாமல், அன்னமய கோசம் முதல் ஆனந்தமய கோசம் ஈறாக தோன்றிய தத்துவக் கூட்டங்கள் தானல்லவென்று நேதி செய்தபின், ஒன்றும் காணேன் என்ற பாழையுந்தள்ளி, தான் வேறு, பிரமம் வேறு என்ற ஐயமும் நீங்கி, நிறைபொருளான அறிவு சொரூபமே தன் நிஜசொரூபம் என அறிந்தான். இதில் கண்டான் என்று வரும் இடங்களில் நிச்சயித்தான் எனப்பொருள் கொள்க. அங்ஙனம் இன்றி ஆத்மாவை முன்னிலைச் சுட்டுப் பொருளாகக் கண்டது அல்லது அறிபடு பொருளாகக் கண்டது எனக்கொள்வது பிராந்தியேயாம்.

அனுபவானந்த வெள்ளத்து அழுந்தியே அகண்டமாகித்
தனு கரணங்களாதிச் சகலமும் இறந்து சித்தாய்
மனது பூரணமாய்த் தேகமான சற்குருவும் காண
நனவினில் சுழுத்தியாகி நன்மகன் சுபாவமானான் 84

84. குருதேவர் உபதேசித்தப் பிரகாரம் சிஷ்யன் ஆத்மாவாகிய தான் அறிவானந்த சொரூபம் என்று அறிந்து ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கினான். தனுகரணாதிகள் சகலமும் நேதிசெய்து சேடித்து நின்ற அறிவே தானானான். இந்த அறிவே நிறைபொருள். இப்படி நிறை பொருளாக விளங்குவதே நனவில் சுழுத்தியாம். சொச்சொரூப ஸ்திதியான இந்த நனவில் சுழுத்தியில் நல்ல சிஷ்யனான இவன் இருந்தான்.

### இதன் உள்ளுரை

நனவில் சுழுத்தி என்பது மனமற்ற ஓர் மயக்க நிலையன்று. பிரம நிச்சயத்துடன் தத்தம் விவகாரங்களை செய்தல் நனவில் சுழுத்தியாம். இதை ஞானவாசிட்டம் வீர சுப்பையா சுவாமிகளின் உரையின் 1727-ம் பக்கம் "நனவில் சுழுத்தி நிலைமேவி, ஜாக்கிரத்தில் தானே நிர்விகார சித்தனாகி, கர்மங்களைச் செய்வாய்" என்று கூறியிருப்பதால், அசங்கத் தன்மையான பற்றற்ற நிலையில் இருந்து கொண்டு சகல கர்மங்களையும் செய்வது நனவில் சுழுத்தி என்பதாயிற்று. இதற்கு மாறாக மனதற்ற நிலையை நனவில் சுழுத்தியாகக் கொள்ளுவது பிராந்தியேயாம்."

அளிமகன் நெடும்போது இவ்வாறு ஆனபின் மனது மெள்ள
வெளியில் வந்திட உணர்ந்தான் விமல தேசிகனைக் கண்டான்
துளிவிழி சொரியப் பாதம் தொழுது வீழ்ந்து எழுந்து சூழ்ந்தான்
குளிர்முகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான் 85

85. அன்புள்ள சிஷ்யன் மேற்கூறிய பிரகாரம் நாமரூப பிரபஞ்சத்தை மறந்து, பேரறிவு சொரூபமாக நெடுநேரம் இருந்தான். பின் மெதுவாக நாமரூப பிரபஞ்சத்தை நினைக்க ஆரம்பித்தான். அப்பொழுது தன் நிஜ சொரூபமே நாமரூபமான சரீரத்தைத் தாங்கி குருவடிவமாக வீற்றிருப்பதைக் கண்டான். தன்னை ஜட வடிவமாக அறிந்ததனால் முன் ஏற்பட்ட ஜனன மரணத் துன்பமும், குருவின் கருணையினால் தான் அகண்ட அறிவு சொரூபன் என்று அறிந்ததனால் ஏற்பட்ட ஆனந்தமும் நினைத்து கண்களில் ஆனந்தக் கண்ணீர் சொரிய குருவின் பாதத்தில் விழுந்து அஷ்டாங்க நமஸ்காரம் செய்து கீழ்வருமாறு விண்ணப்பித்தான்.

ஐயனே எனதுள்ளே நின்று அனந்த சென்மங்கள் ஆண்ட
மெய்யனே உபதேசிக்க வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கும் உதவிக்கோர் உதவி நாயேன்
செய்யுமாறு ஒன்றும் காணேன் திருவடி போற்றி போற்றி 86

86. குருதேவா! சைதன்ய சொரூபனான தாங்கள் சென்றுபோன ஒவ்வொரு ஜென்மத்திலும், எனது ஆத்ம சொரூபமாக இருந்து ஆட்கொண்டதுமன்றி, இப்போது எனது நிஷ்காம புண்ணியத்தின் பயனாக குருமூர்த்தியாக எழுந்தருளி, தத்துவமசி மகாவாக்கியத்தை உபதேசித்து, எனது அஞ்ஞானத்தைப் போக்கி ஜீவன் முக்தனாக செய்தருளிய உதவிக்கு கைம்மாறு ஒன்றும் காணேன். திருவடி வாழ்க! இதில் கைம்மாறு காணேன் என்பான் ஏனெனின், குருவைச் சரணாகதி அடைந்த காலத்தே உடல், பொருள், ஆவி மூன்றும் குருவுக்கு சொந்தமாய் கொடுத்தமையால், இப்பொழுது கைம்மாறு செய்ய ஒன்றும் இல்லையென்பது பொருள்.

சிட்டன் இவ்வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்
கிட்ட வாவென இருத்திக் கிருபையோடு அருளிச் செய்வார்
துட்டமாம் தடைகள் மூன்றும் தொடராமல் சொரூப ஞான
நிட்டனாய் இருக்கின் ஈதே நீ செய்யும் உதவியாமே 87

87. நல்ல சிஷ்யன் இவ்வாறு கூறியதைக் கேட்டு சந்தோஷ மடைந்த குருவானவர் அவனை அருகில் அமரச்செய்து கருணை யினால் அருளிச் செய்வாராயினர். அன்பனே! நீ உன் நிஜ சொரூபம் பேரறிவு என அறிந்தாய். ஆனாலும் மூன்று விதமான தடைகள் உன்னைத் தொடராமல், சங்கற்ப விகற்பங்களுக்குச் சாட்சியான ஆத்ம சொரூபனாய் இருப்பாயாகில் அதுதான் நீ எனக்குச் செய்யும் பிரதியுப காரமான கைம்மாறாகும்.

நீ நான் என்ற இரண்டு இ(ல்)லாமல் நிறைந்த பூரணமாய் எங்கும்
நானாகத் தெளிந்த ஞானம் நழுவுமோ குருவே என்றான்
தானாகும் பிரம ரூபம் சற்குரு நூலால் தோன்றும்
ஆனாலும் தடைகள் உண்டேல் அனுபவம் உறைத்திடாதே. 88

88. குருதேவா! இருபத்தெட்டு தத்துவமும் ஜடமென்றும், இருபத்தொன்பதாவது நிறைபொருளான தத்துவம் மெய்யறிவு என்றும், அந்த மெய்யறிவே பிர்மம் என்றும், அது தன்மை, முன்னிலை, படர்க்கையாதி மூன்றுக்கும் ஆதாரமாயும், ஆதேயமாயும் பரிபூரணமாயும் உள்ள பிர்மமே நான் என உள்ளங்கைக் கனிபோல் தெளிவாய் அறிந்த ஞானம் மேற்கூறியத் தடைகளால் போகுமோ? குருவே என்று விண்ணப்பித்தான். அன்பனே! உன் நிஜ ரூப பிர்ம ஞானம் சற்குரு உபதேசத்தாலும், வேதாந்தப் பாடத்தாலும் தோன்றும்; ஆனாலும் தடைகள் உண்டாகுமானால் அந்த அனுபவம் திடப்படாது. ஏனெனில் நீயென்றும், நானென்றும் ஆகிய இரண்டும் ஒரே அறிவு என்று அறிவதல்லவா ஞானம்.

தடை எவை எனில் அஞ்ஞான சந்தேக விபரீதங்கள்
படர்செயும் இந்த மூன்றும் பலசன்மப் பழக்கத்தாலே
உடனுடன் வரும் வந்தக்கால் உயர்ஞானம் கெடும் இவற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாலே 89

89. அன்பனே! ஞானத்திற்கு விரோதமான தடைகளுக்குப் பெயர் கேட்பாயாக. அவை அஞ்ஞானம் எனவும், சந்தேகம் எனவும், விபரீதம் எனவும் கூறுவர். துன்பத்தைக் கொடுக்கும் இந்த மூன்றும் பல ஜன்மங்களில் பழகிவந்த பழக்கத்தால் கூடவே தொடர்ந்து வரும். வருமானால் அந்த ஞானம் திடப்படாமல் போய்விடும். ஆகையால் நிச்சய புத்தியுடன் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆகிய மூன்றினாலும் மேற்கூறிய மூன்றையும் கெடுக்க வேண்டும். இதன் விளக்கம் அடுத்த மூன்றாவது (91) கவியில் பார்க்கலாம்.

அக்கினிக் கட்டுப்பட்டால் அற்பமும் சுடமாட்டாது
மக்கின ஞானத்தாலே வந்த பந்தமும் வேவாது
சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாலே
விக்கின மடம் சந்தேகம் விபரீதம் போக்குவாயே 90

90. அன்பனே! மணி மந்திர மருந்துகளால் அக்கினியானது கட்டுப்பட்டால் அதன் சூடு தணிந்து காட்டும். அப்போது அந்த நெருப்பானது ஜீவராசிகளையும், உன்னையும் சுடுவதில்லை. அதுபோல் முன்கூறிய மூன்று தடைகளோடும் கூடிய ஞானத்தால்

அநாதியாக உன்னைத் தொடர்ந்துள்ள கர்த்தத்துவாதி பந்தம் நசியாது. ஆகையால் நேசத்தோடும் கேட்பதனால் அஞ்ஞானத்தையும், சிந்தித்தலால் சந்தேகத்தையும், தெளிதலால் விபரீதத்தையும் போக்குவாய் அதாவது ஒழிப்பாயாக!

பிரம பாவனையை மூடிப் பேதம் காட்டுவது அஞ்ஞானம்
குரவன் வாக்கியம் நம்பாமல் குழம்புவதாம் சந்தேகம்
திரமறு சகம்மெய் என்றும் தேகம் நான் என்றும் உள்ளே
விரவிய மோகம்தானே விபரீதம் என்பர் மேலோர் 91

91. அன்பனே! முன்கூறிய தடைகள் மூன்றுக்கும் விளக்கம் கேட்பாயாக. நீ பேரறிவு சொரூபனாய் இருந்தும், நான் பேரறிவு சொரூபன் என்ற பாவனையை மூடி மறைத்து நான் பேரறிவு சொரூபன் அல்லன் என்ற நினைப்பை ஊட்டுவது அஞ்ஞானமாம். நீ பேரறிவு சொரூபன் என்று குரு அருளிச்செய்த வாக்கியத்தை நம்பாமல், நான் ஒரு ஜீவன் என்ற குழப்பத்தை அடைவது சந்தேகமாம். நிலையற்ற உலகை சத்தியமெனவும், ஜடமான தேகமே நான் எனவும், உள்ளத்தில் ஏற்பட்ட மயக்கமே விபரீதமாகும்.

தத்துவ அனுபோகம்தான் சாதித்தல் கேட்டல் என்பார்
ஒத்துள பொருள் ஊகத்தால் உசாவல் சிந்தித்தல் என்பார்
சித்தம் ஏகாந்தமான தெரிசனம் தெளிதல் என்பார்
நித்தம் இப்படி செய்தக்கால் நிருவாணம் பெறுவாய் நீயே 92

92. அன்பனே! அஞ்ஞான, சந்தேக, விபரீதங்களை போக்குவதற்குரிய கேட்டல், சிந்தித்தல், தெளிதலாகிய மூன்றுக்கும் பொருள் கூறுகின்றேன் கேட்பாயாக. இந்த ஆத்மா சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம், பூரணம் ஆகிய ஐந்தும் சொரூப குணமாகப் பெற்றுள்ளது என்று குருமுகமாகக் கேட்பது கேட்டல் என்பார். கேட்டபடி சிஷ்யன் ஆத்ம சொரூபமாகிய தன்னிடத்தில் சச்சிதானந்தாதி ஐந்தும் பொருந்தியிருக்கின்றனவா? அல்லது அவை தனித்தனியாக இருக்கின்றனவா? என்று துருவித்துருவி ஆராய்ந்து நோக்குவதை சிந்தித்தல் என்பார். அக்னிக்கு உஷ்ணம் சொரூப குணமாய் இருப்பது போல், மேற்கூறிய ஐந்தும் ஆத்மாவின் சொரூப குணமாகையால் அதுவே என் வாஸ்தவ சொரூபம் என்று நிச்சயமாக அறிவதைத் தெளிதல் என்பார். பிரதிதினமும் இவ்வாறு செய்துவந்தால் நீ ஜீவன் முக்தியை அடைவாய்.

## இதன் உள்ளுரை

கேட்டல் என்பது குருமுகமாகக் கேட்கும் உபதேசம் ஆகும். அத்தகைய உபதேசம் எதைப்பற்றியதாக இருக்க வேண்டுமெனின்? வேதாந்த சூடாமணி பத்தொன்பதாவது கவியில் "நினைவரிய ஒரு பிரமம் நீயே என்று உள்ள நிலை உணர்த்துதல் குரவன் உபதேசமாகும்" என்றும், மேற்படி நூலில் இருபத்தொன்பதாவது கவியில் "நீ கடவுள் சொரூப நிசம் சச்சிதானந்த நித்திய பூரணமாக நீ நினைந்து கொள்ளே" என்றும் கூறியிருப்பதால் அறிக. இதற்கு மாறாகவுள்ள உபதேசமெல்லாம் முன்கூறிய விபரீதத்தில் அடங்குமென்க. இதை சிவஞான வள்ளலார் சாஸ்திரம் 289-ஆம் பக்கம் "சப்தகோடி மகாமந்திரம் சித்த விப்பிரம காரணம்" என்று கூறியிருப்பதே போதுமான சான்றாகும்.

எத்தனை நாள் ஞாதாவும் ஞானமும் இருக்கும் உன்பால்
அத்தனை நாளும் வேண்டும் அப்பால் ஓர்செயலும் வேண்டாம்
நித்தமும் வெளிபோல் பற்றா ஞேயம் மாத்திரமாய்ச் சீவன்
முத்தர் ஆனவர் விதேகமுத்தி பெற்று இருப்பார் என்றும் 93

93. குருதேவா! கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆகிய மூன்றும் எவ்வளவு காலம் வரை அனுஷ்டிக்க (பழக) வேண்டும்? அன்பனே! உன்னிடத்தில் காணும் அறிவு வேறு, அறிபடு பொருள் வேறு என்ற பேதபுத்தியும், கர்த்தத்துவாதி புத்தியும் எவ்வளவு காலம் வரையிலும் உனக்குத் தோன்றுகின்றதோ அவ்வளவு காலம் வரையிலும் மேற்கூறிய கேட்டல் முதலிய மூன்றும் வேண்டும். அதன் பின்னர் அவை வேண்டுவதில்லை. எதிலும் பற்றாத ஆகாயத்தைப்போல், எத்தொழிலைச் செய்யினும் அதில் பற்றாத அசங்க சின்மாத்திர சொரூபிகளான ஜீவன் முக்தர்கள் பிராரத்துவ கர்ம முடிவில் விதேக முக்தியை அடைந்து சதாகாலமும் அதுவாய் இருப்பார்கள்.

ஞானம்ஆர் சீவன்முத்தர் நால்வகையாவர் கேளாய்
வான்நிகர் பிரமவித்து வரன் வரியான் வரிட்டன்
ஆனவர் நாமம் ஆகும் அவர்களில் பிரமவித்தின்
தானமும் மற்றை மூவர் தாரதம்மியமும் சொல்வேன் 94

94. அன்பனே! ஆத்ம ஞானம் நிறைந்த ஜீவன் முக்தர்கள் நான்கு வகையினராக இருப்பார்கள். அதன் விபரத்தை நீ கேட்பாயாக. ஆகாயத்தைப் போன்று எக்கருமத்திலும் பற்றாத பிரமவித்து, வரன், வரியான், வரிட்டன் இந்த நான்கும் அவர்களுடைய பெயர்களாம். இவர்களில் பிரம்ம வித்துகளினுடைய அனுபவமும், மற்றைய மூவருடைய தாரதம்மியத்தையும் இனிக்கூறுவேன்.

தீரராய்ப் பிரமவித்தாய்த் தெளிந்தவர் தெளியும் முன்னம்
வாரமாய் இருந்த தங்கள் வருணம் ஆச்சிரமம் சொன்ன
பார காரியமானாலும் பலர்க்கு உபகாரமாக
நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன்முத்தர் 95

95. அன்பனே! மனோதைரியமுடையவர்களாகவும், கேட்டலாதி மூன்றில் தெளிவுடையவர்களாகவும் ஆகிய இந்த ஜீவன் முக்தர்கள், அங்ஙனம் தெளிவு அடைவதற்கு முன்னர் தாங்கள் பழகி வந்த சற்கருமங்கள் பெரிதாக இருந்த போதிலும், பலபேர்க்கு உபகாரமாக செவ்வனே செய்வார்கள். அங்ஙனம் செய்தாலும் வேதங்களால் முடிவாகச் சொல்லப்பட்ட பேரறிவு சொரூபமே நான் என்ற நிச்சயத்தை விட மாட்டார்கள்.

காமமாதிகள் வந்தாலும் கணத்தில்போம் மனத்தில் பற்றார்
தாமரையிலைத் தண்ணீர்போல் சகத்தொடும் கூடிவாழ்வார்
பாமரர்எனக் காண்பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்
ஊமரும்ஆவார் உள்ளத்து உவகையாம் சீவன்முத்தர் 96

96. அன்பனே! பிராரத்துவ கர்ம சேடத்தால் இந்த பிரம்மவித்துகளுக்கு காமமாதி இச்சைகள் வந்தாலும் கணத்தில் போகும். அதாவது வானத்தில் பறக்கும் பட்சியின் நிழல் ஓரிடத்தில் தங்காததுபோல் மேற்கூறிய இச்சைகளும் கணத்தில் தன்னைவிட்டு போய்விடும். அஞ்ஞானிகள் மனதில் விடாப்பற்று பற்றுவது போல் பற்றமாட்டாது. தாமரை இலையில் படும் நீர், அந்த இலையின் மேல் நின்றாலும் அதில் ஒட்டாதது போல், இந்த ஜீவன் முக்தர்கள் உலக விவகாரத்தோடு கூடியிருந்தாலும் அதில் பற்று உடையவர்கள் ஆக மாட்டார்கள். உலகத்தில் ஞானமில்லாத கர்மகாண்டியைப் போலும், பக்திகாண்டியைப் போலும், தம்மைக் காட்டிக் கொள்வார்கள். அன்றியும்

பிரம்மவித்தை பூரணமாக தனக்கிருந்தும் தன்னை ஒரு பண்டிதன் எனக்காட்டாமல் பாமரன் எனவும் காட்டிக் கொள்வார்கள். அதிகம் பேசிப் பயனில்லை என்று அறிந்து மனோமௌனமாக சொரூப ஸ்திதியில் இருப்பார்கள். எப்பொழுதும் உள்ளத்தில் நித்திய திருப்தி உடையவர் களாகவும் இருப்பார்கள்.

பேதகன்மத்தால் வந்த பிராரத்தம் நானாவாகும்
ஆதலால் விவகாரங்கள் அவரவர்க்கு ஆவவாகும்
மாதவம் செயினும் செய்வார் வாணிபம் செயினும் செய்வார்
பூதலம் புரப்பார் ஐயம் புகுந்து உண்பார் சீவன் முத்தர் 97

97. அன்பனே! ஜீவன் முக்தர்களின் உலக வாழ்க்கைத் தரம் இன்னும் கூறுகின்றேன் கேட்பாய். இவர்கள் தங்களை பிரம சொரூபம் என்று தெளிவு அடைவதற்கு முன் செய்த கர்மங்கள் பல பேதமாய் இருப்பதால், அதன் விளைவான பிராரத்த கர்ம பல போகமும் பேதமாய் இருக்கும். அதனால் விவகாரங்களும் ஒருவருக்கிருந்தது போல் மற்றொருவருக்கு இருக்க மாட்டாது. ஒருவர் பெரிய தவத்தைச் செய்தாலும் செய்வர். அல்லது வியாபாரம் முதலிய தொழிலைச் செய்தாலும் செய்வார்கள். அல்லது அருச்சுனனைப்போல் அரசனாக இருந்து உலகை ஆண்டு வருவார்கள். அல்லது பிச்சை எடுத்தாயினும் தம் பசி தணித்துக் கொள்வர் இந்த ஜீவன் முக்தர்கள்.

சென்றது கருதார் நாளைச் சேர்வதும் நினையார் கண்முன்
நின்றது புசிப்பார் வெய்யில் நிலவுஆய் விண்விழுது வீழ்ந்து
பொன்றின சவம் வாழ்ந்தாலும் புதுமையா ஒன்றும் பாரார்
நன்று தீது என்னார் சாட்சி நடுவான சீவன்முத்தர் 98

98. அன்பனே! மேலும் இந்த ஜீவன் முக்தர்கள் தேகாதிப் பிரபஞ்சம் பொய் என்ற புத்தியினால், சென்ற காலத்தில் நடந்துபோன காரியங்களைப் பற்றியும் நினைக்க மாட்டார்கள். வருங்காலத்தைப் பற்றியும் நினைக்க மாட்டார்கள். நிகழ்காலத்தில் கண்முன் வந்து சேர்ந்த போகங்களைப் புசிப்பார்கள். மேலும் சூரியப் பிரகாசம் சந்திரப் பிரகாசமாகவும், சந்திரப் பிரகாசம் சூரியப் பிரகாசமாகவும் மாறிவிட்டாலும், மரித்துப்போன பிரேதம் உயிர்பெற்று எழுந்தாலும் ஆச்சரியப்பட மாட்டார்கள். ஒன்றை நல்லது என்றும், மற்றொன்றை தீது என்றும் நினைக்க மாட்டார்கள். 95 முதல் 98 வரையில் பிரம்மவித்தின் நிலைமையைச் சொன்னோம். இனி மற்றைய மூவரின் நிலைமையையும் கேட்பாய்.

பின்னை மூவரில் இரண்டு பேர்களும் சமாதி யோகம்
தன்னை உற்றிருப்பார் தேக சஞ்சார நிமித்தம் தானாய்
உன்னுவோன் வரன் வேற்றோரால் உணர்பவன் வரியானாகும்
அன்னியர் தம்மால் தன்னால் அறியாதோன் வரிட்டனாமே 99

99. அன்பனே! முன் கூறிய பிரம்மவித்து நீங்கலாக ஏனைய மூவரில் வரன், வரியானாகிய இரண்டு பேர்களும், ஆத்ம வடிவ சொரூபமாக நிலைத்து இருப்பார்கள். இதற்கு சமாதி என்று பெயர். சரீரம் ஜீவிப்பதற்காக தன் முயற்சியால் உணவு முதலியவைகளைத் தேடுபவன் வரன் எனப்படுவான். சிஷ்யர்கள், பக்தர்கள் முதலியோரால் கொடுத்துண்பவன் வரியான் எனப்படுவான். அன்னியர் தம்மால் தன்னால் அறியாதோன் வரிட்டனாமே. அதாவது வரிட்டனுடைய சரீர நிர்வாகத்தைப் பற்றி அன்னியரும் சிந்திப்பதில்லை. தானும் சிந்திப்பதில்லை. ஆனால் பிராரத்துவ கர்மத்திற்கு ஈடாக அவனது சரீர நிர்வாகம் நடந்து கொண்டேயிருக்கும்.

## இதன் உள்ளுரை

வரிட்டனுடைய உணவு முதலிய விவகாரங்கள் பிறராலும், தன்னாலும் நடைபெறுவதில்லை என்று சிலர் கூறுகின்றார்கள். அது பொருந்தாது. ஏனெனில் தத்துவ விளக்கப்படலம் 95 முதல் 98 கவி வரையில் பொதுவாக நான்கு பேரையும் ஜீவன் முக்தனென்றே கூறி வந்துள்ளது. இதில் வரிட்டனும் ஜீவன் முக்தி வரிசையில் சேர்ந்தவனாகும். ஆகையால் அவனுக்கு அந்தக்கரணம் உண்டு. உண்ணல் முதலிய தொழில்கள் அந்தக்கரணத்தின் செயலாகும். இதை அடுத்தக் கவியின் ஈற்றடியில் வரனும், வரியானும், வரிட்டனும் சுகமாக வாழ்வார்கள் என்று கூறியிருப்பதால் காணலாம். சுகமாக வாழ்வதற்கு அந்தக்கரணம் இல்லாமல் முடியாதென்பதை அருத்தாபத்தியாலுணர்க. மேலும் அடுத்த கவியில் இவ்வாறு இவர்கள் அனேகர் ஆனாலும் முக்தி சரியாகும் என்று கூறியிருப்பதால் நான்கு பேர்க்கும் சொரூப நிச்சயமான முக்தி ஒரே மாதிரிதான் என்பதில் ஐயமில்லை. சொரூப நிச்சயம் இல்லாவிட்டால் அவன் முக்தன் அல்ல. என்பதை தத்துவ விளக்கப் படலம் 55-வது கவியில் "சுழுத்தியில் பிரளயத்தில் தோற்றமாம் ஜகங்கள் மாண்டும் அழுத்திய பவம் போய் முக்தி அடைந்தவர் ஒருவருண்டோ?" என்று கேட்டிருப்பதால் அந்தக்கரணம் இல்லாவிட்டால் முக்தி இல்லை என்பதாயிற்று. எனவே வரிட்டனுக்கு அந்தக்கரணம் உண்டு. ஆனால் வரிட்டன் தேகாதி உலக

விவகாரத்தைக் குறைத்துக் கொண்டதனால் அவனை உயர்வாகக் கூறுகின்றதே ஒழிய ஞானத்தினால் அல்ல. மேலும் இந்த வரிட்டனைப் பார்க்கிலும் உலக விவகாரத்தோடு இருக்கும் பிரம்மவித்தே உயர்ந்தவன் என்று கூறியிருப்பதையும் பாருங்கள். சந்தேகம் தெளிதல் படலம் 154-வது கவியில் சொன்ன "நடுப்பூமியில் வந்த ஞானிகளே பிரம்ம வித்தாம் தூய முக்தர்" என்று கூறியிருப்பதால் தூய முக்தன் என்ற அடைமொழி மற்றைய மூவருக்கும் இல்லை. ஏனெனில் இவனால் (வரிட்டனால்) வேதாந்த பாடம் முதலிய உலக விவகாரம் இல்லை. வரிட்டன் நிலை இவ்வாறாயின் அன்னியர் தம்மால், தன்னால் அறியாதோன் வரிட்டனாமே என்று கூறியிருப்பது ஏனெனில் பிரம்மமாகிய நிறைபொருளான தன்சொரூபம் இத்தகையது என்று தன்னாலும் அளவிட்டு பிறராலும் அறிய முடியாது என்பதே அதற்குப் பொருளாகும். இதை பிரம்ம கீதை பிரஹதாரண்யக உபநிஷத்தில் "ஒழிவிலாப் பரமயோகியர் அநுபவம் உள்ளவாறு உரைத்திட எனக்கோர், வழி பெறேன் நெடுமால் மகேசன் மாமுனிவர் வானவர் உரைத்திட மாட்டார், விழிமிகும் சிவனால் விஞ்சையாம் சிவையால் விளம்பவும் படாதது விளம்பும், மொழியெலாம் வந்து மோனபாவத்தே முடியும் அந்நிலமதே முடிவு" என்று கூறியிருப்பதால் அறியலாம். சிற்றின்பத்திற்கே எல்லை காணமுடியா தென்றால் சொரூபானந்தத்திற்கு எல்லை காண முடியுமா? ஆகையால் வரிட்டன் நிலை நமக்கு வரவில்லையே என்று கவலைப் படாமல் பிரம்ம வித்தாம் தூய முக்தனாக இருந்து உலக உபகார விவகாரங்களை செய்வாயாக.

அரிதாகும் இவர்கள் இவ்வாறு அனேகரானாலும் முத்தி
சரியாகும் பாடுபட்ட சமாதிக்குப் பலன் ஏதென்றால்
பெரிதான திட்ட துக்கம் பிரமவித்து அனுபவிப்பன்
வரியானும் வரனும் மற்றை வரிட்டனும் சுகமாய் வாழ்வார் 100

100. அன்பனே! கிடைப்பதற்கரிதான இந்த ஜீவன் முக்தர்கள் பிராரத்துவ கர்மவலியால் பல பேதமான விவகாரங்களை உடையவர் களாக இருந்தாலும் சுருதி யுக்தி, அனுபவத்தால் அவர்கள் பெற்ற ஆத்ம ஞானத்தில் தாரதம்மியம் இல்லை. இவர்கள் பாடுபட்டு சம்பாதித்த சமாதிப் பழக்கத்தினால் அல்லது சிரவண மனன நிதித்தியாசனத்தினால் (தெளிவு) பலன் யாது? என நீ வினவின் கேட்பாய். பிரம்ம வித்தானவன் உலக உபகார விவகாரத்தில் ஈடுபட்டு இருப்பதால் அவன் பிரத்தியட் சத்தில் பல துக்கங்களை அனுபவிப்பான். மற்றைய வரனும், வரியானும், வரிட்டனும் ஜீவன் முக்தி சுகத்தினை உடையவர்களாய் வாழ்வார்கள்.

பிரமஞானிகளும் கர்மப் பேதையர் போலே வாழ்ந்தால்
திரமுறும் அஞ்ஞானம் போய்ச் செனியாத வழிஏது என்றால்
பரவும் ஆகாசம் ஒன்றில் பற்றாது மற்றை நாலும்
விரவினதோடும் கூடும் விதம் இருவோரும் ஆவார் 101

101. குருதேவா! பிறவிக்கு ஏதுவான பிரதிப் பிரயோஜனத்தை விரும்பி கர்மங்களைச் செய்யும் அறிவிலிகளைப் போல், பிரம ஞானிகளும் பிராரத்துவ விளைவான கர்மங்களை செய்து கொண்டே வந்தால் அல்லது போகங்களை அனுபவித்துக் கொண்டே வந்தால் இந்த ஞானிகளுக்கு மாத்திரம் அஞ்ஞானம் நீங்கி மீண்டும் பிறவித் துன்பம் வராமல் இருப்பதற்கு காரணம் யாதோ அறியேன். அன்பனே! ஆகாயமானது மற்ற நான்கு பூதங்களோடும் பற்றாமல் நிற்பதுபோல், ஞானிகள் தங்களை ஆத்ம சொரூபம் என்றும், அசங்கன் என்றும் அறிந்தபின் அவர்களுடைய அந்தக்கரணங்களால் செய்யும் கர்மங்களின் பலனில் விருப்பமில்லாமையால் அவர்களுக்கு மீண்டும் பிறவி வருவதில்லை. ஆகாயம் நீங்கலாக மற்ற நாலு பூதங்களும் தம்முள் கலந்த பூதத்தோடு தாமும் கலக்கும். அதுபோல் ஆத்மா அசங்கன் என்று அறியாத அஞ்ஞானிகள், செய்யும் கர்மங்களின் பலனில் பற்றுடையவர்கள். ஆதலால் அவர்களுக்குப் பிறவித் துன்பம் வரும். இதுதான் ஞானி, அஞ்ஞானிகள் ஆகிய இருவருக்கும் உள்ள வேறுபாடு ஆகும் என அறிக.

சீவன் முத்தரைச் சேவித்தோர் சிவன் அயன் நெடுமாலான
மூவரும் மகிழ நோன்பு முழுவதும் செய்து சன்ம
பாவனம் ஆனார் என்று பழமறை முழங்கும் இப்பால்
மேவரும் சீவன் முத்தர் விதேக முத்தியும் நீ கேளாய் 102

102. குருதேவா! இத்தகைய ஜீவன் முக்தர்களுக்கு உரித்தான பணிவிடைகள் செய்கின்ற அதிகாரி புருஷர்களுக்கும், பக்தர்களுக்கும் உரிய பயன் யாதோ அறியேன். அன்பனே! மும்மூர்த்திகளும் பிரசன்னமாகி வேண்டிய வரங்கள் கொடுப்பதற்கு எவ்வளவு தபம், தியானம், பூஜை, விரதங்கள் செய்ய வேண்டுமோ, அவ்வளவும் இவர்கள்-குருசேவை செய்யும் மாணவர்கள்-செய்து முடித்தவர்கள் ஆவார்கள். அதுவுமின்றி ஈசுவர சேவையினால் மறுமையில் தான் பயன் கிடைக்கும். குருசேவையினால் இம்மை, மறுமை ஆகிய

இருவகைப் பலன்களும் உண்டு. அதன் பயனாக ஆத்ம ஞானமும், அதன் பயனாக மோட்சமும் கூடும் என்றும், இதனால் இவர்கள் ஜனனம் பரிசுத்தமானவர்கள் ஆவார்கள் என்றும் பழைய வேதங்கள் பிரதிபாதிக்கும். இனி இந்த ஜீவன் முக்தர்கள் அடையும் விதேக முக்தியைப் பற்றியும் நீ கேட்பாயாக.

பஞ்சினை ஊழித்தீப்போல் பலசன்ம விவித வித்தாம்
சஞ்சிதம் எல்லாம் ஞானத்தழல் சுட்டு வெண்ணீறு ஆக்கும்
கிஞ்சித் ஆகாமியம்தான் கிட்டாமல் விட்டுப் போகும்
விஞ்சின பிராரத்தத்தின் வினை அனுபவித்துத் தீரும் 103

103. குருதேவா! பிறவித் துன்பத்தைக் கொடுக்கக் கூடிய சஞ்சித, ஆகாமிய, பிராரத்துவமாகிய மூவகை கருமங்களும் இந்த ஜீவன் முக்தர்களைப் பற்றாது - ஒழித்துபோகும் விதம் எவ்வாறாமென அறிய விரும்புகிறேன். அன்பனே! பல்லாயிரம் பொதிப்பஞ்சினை ஒரு தீப்பொறி பஸ்மமாக்கி விடுவது போல், ஆத்மஞானத்தால் சஞ்சிதவினை பஸ்மமாகிப் போகும். தாமரையிலை நீர்போல் தனது பற்றின்மையினால் ஆகாமிய கர்மமும் விட்டுப்போகும். எஞ்சி நிற்பதான பிராரத்துவ கர்மத்தின் பயன் அனுபவித்துத் தீரும்.

பொறுமையால் பிராரத்தத்தைப் புசிக்கும் நாள்செய்த கர்மம்
மறுமையில் தொடர்ந்திடாமல் மாண்டுபோம் வழிஏது என்றால்
சிறியவர் இகழ்ந்து ஞானி செய்த பாவத்தைக் கொள்வார்
அறிவுளோர் அறிந்து பூசித்து அறம்எலாம் கைக்கொள்வாரே 104

104. குருதேவா! இந்த ஜீவன் முக்தர்கள் பிராரத்துவ கர்மத்தின் பயனை அனுபவிக்கும்போது, நிகழ்காலத்தில் செய்கின்ற ஆகாமிய கர்மத்தின் பயன் மறுபிறவிக்கு ஏதுவாகாமல் ஒழிந்து போகும் வழி யாதோ அறியேன். அன்பனே! ஞானிகளின் பெருமை அறியாமல் அறிவிற் சிறியவர்கள் தூஷித்து அந்த ஞானிகள் நிகழ்காலத்தில் செய்கின்ற ஆகாமிய பாவமும், அறிவிற் பெரியவர்கள் இவர்கள் பிரமஞானிகள் என்று அறிந்து பாதபூஜை முதலிய பணிவிடைகள் செய்து அவர்கள் நிகழ்காலத்தில் செய்யும் ஆகாமிய புண்ணியமும் பெற்றுக் கொள்வார்கள். இக்காரணத்தால் ஆகாமிய புண்ணிய பாவங்கள் ஞானிகளைப் பற்றாதொழிந்து போகும்.

அரியமெய்ஞ் ஞானத்தீயால் அவித்தையாம் உடல் நீறுஆகும்
பெரியதூலமும் காலத்தால் பிணமாகி விழும் அந்நேரம்
உரியசூக்கும சரீரம் உலைஇரும்பு உண்ட நீர்போல்
துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தில் இறந்துபோமே 105

105. அன்பனே! முன்கூறிய மூவகைக் கருமங்களும் ஜீவன் முக்தர்களைப் பற்றாது ஒழிந்து போனதுபோல், மூன்று சரீரமும் நிகழ் காலத்தில் ஒழிந்துபோய் மீண்டும் பிறவிக்கு வாராத விதேக முக்தியையும் நீ கேட்பாயாக. அடைவதற்கரிதான பிரமஞானமான அக்கினியினால், அஞ்ஞானம் அல்லது அவித்தையான காரண சரீரம் பஸ்மமாகிவிடும். தூலசரீரமும் அதற்குரிய காலத்தில் பிணமாகப் போகும். அப்போது நெருப்பில் காய்ந்த இரும்புண்ட நீர்போல் சூட்சும சரீரம் நிறைபொருளான பிரம்மத்தில் லயமாய்விடும். இதில் ஞானிகள் பிராணன் வெளியில் செல்லாது என்னும் சுருதியினால் இவ்வாறு கூறினார் என்று அறிக. இரும்புண்ட நீர் மீண்டும் ஜனிக்காமைக்கு உவமானமெனக்கொள்க.

கடம் எனும் உபாதி போனால் ககனம் ஒன்றானாற்போல
உடல் எனும் உபாதி போன உத்தரம் சீவன்முத்தர்
அடி முடி நடுவுமின்றி அகம் புறம் இன்றி நின்ற
படி திகழ் விதேகமுத்திப் பதம் அடைந்திருப்பர் என்றும் 106

106. அன்பனே! இங்ஙனம் மூன்று சரீர உபாதி போனபின் இந்த ஜீவன் முக்தர்கள் விதேக முக்தி அடைவதற்கு உபமானம் யாதோவெனின், ஒரு குடம் உடைந்த பின் அதிலுள்ள ஆகாயம் எங்கும் நிறைந்த ஆகாயத்தோடு சேர்ந்துவிடும். அதுபோல் மூன்று சரீரமான உபாதிகள் தத்தம் காரணத்துக்குள் லயமானபின் கீழ், மேல், நடுப்பக்கம் என்ற வேறுபாடு இல்லாமலும்; ஆதி, அந்தம், மத்திய பாகம் என்ற பாகுபாடு இல்லாமலும்; அகத்திலும், புறத்திலும் என்ற பேதம் இல்லாமலும் விளங்கும் பிரம்ம சொரூபமாய் நிலைபெறுவதே விதேக முக்தியாம். இங்ஙனமாய் விதேக முக்தியைப் பெற்று அதுவாக எக்காலத்திலும் இருப்பார்கள்.

## இதன் உள்ளுரை

ஜீவன் முக்தி, விதேகமுக்தி என இரண்டாகப் பேசினாலும் பொருள் ஒன்றேயாம். சில நூலாசிரியர்கள் ஜீவன் முக்தியையே விதேக முக்தியென்று கூறியிருக்கிறார்ள். இந்நூலாசிரியர் சரீரத்தோடு இருக்கும் காலம் ஜீவன்முக்தி என்றும், தேகநாசம் விதேகமுக்தி என்றும் கூறுகிறார். அனுபவத்தில் இரண்டுக்கும் பேதம் கூறவில்லை. இந்த இருவித முக்தியும் உலகத்தவர்களால் விவரிக்கப் படுகின்றதே ஒழிய, ஞானியின் சொரூப ஸ்திதியில் இல்லை. அதாவது திடபோதத்தில் தேகத்தோடு இருக்கும்போதே இந்த ஜீவன் முக்தர்களை விதேக முக்தர்கள் என்று கூறலாம். எங்ஙனமெனின் ஆத்மபுராணம் "கண்புல னுள்ளவனாயினும் ஞானி கண்புலனற்றவனே செவிப்புலன் உள்ளவனாயினும் செவிப்புலனற்றவனே" என்றும், ரிபுகீதை: "பரப்பிரமம் தானேயாகி சும்மா இருந்திடுவோன் விதேகமுக்தன்" என்றும் கூறியிருக்கின்றது. இதில் சும்மாயிரு என்று தேகமில்லாதவனை நோக்கிக் கூறுவார்களா? மேலும் தத்வானு சந்தானம் 280-வது பக்கம் "எக்காலத்தில் ஆத்மஞானம் உண்டாகிறதோ அக்காலத்திலேயே அவ்விதேக முக்தி உண்டாகின்றது" என்று கூறியிருப்பதால், எப்பொழுது ஒருவனுக்கு ஆத்ம ஞானம் ஐயந்திரிபற உண்டாகின்றதோ அப்பொழுதே அவன் விதேக முக்தனாவன். ஆயினும் ஞானி, அஞ்ஞானி இருவர்க்கும் மரணம் சமமாய் இருப்பதால் அஞ்ஞானிகளைப் பார்க்கிலும், ஞானிகளுடைய மரணத்தில் உயர்வு தோன்ற வேண்டும் என்பதற்காக இந்நூலாசிரியர் ஜீவன் முக்தனுடைய தேக நாசத்தை விதேக முக்தி என்று ஸ்துதியார்த்த வாதமாகக் கூறினார். இதை ஞானவாசிட்டம் "ஞானமடைந்த போதில் அவன் நல் வீடுற்றோன் வீடாவது மடமை அந்தகாரம் கெடலன்றோ" என்று கூறியிருப்பதால் ஞானமடைந்த பொழுதே அவன் வீடடைந்து விட்டான் என்பது தேற்றம்.

சொல்லிய மகனே எங்கும் சூழ்வெளி இருக்க மண்ணைக்
கெல்லிய பின்பு தோன்றும் கிணற்றின் ஆகாசம் போலே
ஒல்லையாம் பிரமம் நூலால் உற்றது போலே தோன்றும்
எல்லையில் நாம் எப்போதும் ஏகம் என்று இருந்து வாழ்வாய் 107

107. குருதேவா! இந்த ஜீவன் முக்தர்கள் விதேக முக்திப்பதம் அடைந்திருப்பர் என்று அருளிச் செய்தீரே! அங்ஙனமாயின் அடைந்தது என்று கூறும்போது முன்னில்லாதிருந்த ஒன்றை அடைந்தது. அதாவது செயற்கையாக ஒன்றை அடைந்தது என்று பொருள்படுமல்லவா? படுமாயின் "புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும்" என்று பட்டினத்து சுவாமிகளும், "கூடுதலுடன் பிரிதலற்று" என்று தாயுமான சுவாமிகளும் கூறிப்போந்துள்ள அனுபவங்களுக்குப் பொருந்தவில்லையே. அன்பனே! நீயே முன் தத்துவ விளக்கப் படலத்தின் 88-வது செய்யுளில் "நீ நான் என்று இரண்டில்லாமல் நிறைந்த பூரணமாய் எங்கும் நானாக தெளிந்த ஞானம்" என்று நீ உனது அனுபவம் சொன்னதை இங்கும் கொள்க. அத்தகைய உனது நிஜ சொரூபம் ஒரு காலத்தில் அடையப் படுவது அன்று, அடையாததுமன்று. கழுத்தில் இருந்த ஆபரணம் காணாது பின் கண்டதாகக் கூறும் கண்ட பூஷண நியாயம் போல் அது சுபாவ சித்தமாக எப்பொழுதும் அடையப்பட்டுள்ளது. அது எதுபோல வெனின் ஆகாய வெளியானது எங்கும் நிறைந்திருக்க மண்ணைக் கெல்லிக் கிணறாக்கியபின் அதில் தோன்றும் ஆகாயத்தை கூபாகாய மென்று விவகரிக்கப் படுவதுபோல் இயற்கையாகவே நம் சொரூப சுபாவ சித்தமாயுள்ள பேரறிவான பிரமசொரூபம் குருஉபதேசத்தாலும், வேதாந்த சாஸ்திர பாடத்தாலும் புதியதாக அடையப்பட்டது போல் தோன்றும். அங்ஙனம் தோன்றினும், அது தோற்ற அளவே ஒழிய எல்லையற்ற பரம்பொருளாகிய நாம் எப்பொழுதும் அகண்ட ஏகரச சொரூபன் என்று இருந்து வாழ்வாய். இதில் அடையப் படுபவனும், அடையப்படு பொருளும் வேறு வேறு என்ற துவிதபாவம் இன்றி இருப்பாய் என்பது பொருள்.

கானல்நீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர் கனா ஊர்
வான மை கயிற்றில் பாம்பு மலடி சேய் முயலின் கோடு
பீனமாம் தறி புமானில் பிரபஞ்சம் எல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே உன்னை நம்ஆணை மறந்திடாதே 108

108. ஞான புத்திரா! கானல் உள்ளவிடத்தில் ஜலம் தோன்றுவது போலும், இப்பியில் வெள்ளி தோன்றுவது போலும், ஜன்னிவாதசுரம் ஏறியவனுக்கு பல பட்டணங்கள் தோன்றுவது போலும், கனவில் தோன்றும் ஊர்கள் போலும், ஆகாயத்தில் நீலபீதாதி நிறங்கள் தோன்றுவது போலும், பழுதையில் பாம்பு தோன்றுவது போலும், மலடி மகன் போலும், முயலின் கொம்பு போலும், கட்டையில் கள்வன் போலும்

தோன்றிய தேகாதிப் பிரபஞ்சங்கள் எல்லாம் பொய். அநிர்வசனீயமாம். பேரறிவு வடிவப் பிரமம் ஒன்றுதான் மெய். மகனே! அறிவு சொரூபனான உன்னை நம்மேல் ஆணையாக மறந்திடாதே.

## இதன் உள்ளுரை

இந்த ஒன்பது திருஷ்டாந்தப்படி தேகாதிப் பிரபஞ்சம் பொய் என்பது வேத சம்மதமாம். ஆனால் பொய் என்பது இல்-பொருளைக் குறிக்குமா? அல்லது உள்-பொருளைக் குறிக்குமா? எனில் அது இரண்டையும் குறிக்காது? பின் எதைக் குறிக்குமெனின், இரண்டிற்கும் வேறான அநிர்வசனீயத்தையே அது குறிக்கும். உதாரணமாக ஞானவாசிட்டத்தில் வரும் காதிக்கும், லவணராஜனுக்கும் உண்டான இழிகுலப் பிராந்தியில் தோன்றிய புலையத்தன்மை இல்-பொருளா? அல்லது உள்-பொருளா? இரண்டுமன்று. இல்-பொருளாயின் தோன்றாமல் இருக்க வேண்டும். உள்-பொருளாயின் தெளிந்த பின்னரும் தோன்ற வேண்டும். அன்றியும், சிவஞானசித்தி 8-ஆம் சூத்திரத்தில் "மன்னவன் தன் மகன் வேடரிடத்தே தங்கி வளர்ந்து அவனையறியாது மயங்கி நிற்ப" என்றும், பாரதத்தில் வரும் கர்ணன் தன்னை தேர்ப்பாகன் ஜாதியில் பிறந்து வளர்ந்தவனாகக் கருதியதும் ஆகிய இந்த இழிகுலப் பிராந்தி உள்-பொருளா? அல்லது இல்-பொருளா? இரண்டுமன்று. இவை இரண்டுக்கும் வேறான அநிர் வசனீயத் தோற்றமாம். தனக்கென சொரூபம் ஒன்றின்றி தோற்ற மாத்திரமாக உடையது எதுவோ, அது அநிர்வசனீயத்திற்கு இலக்கண மாம். மேற்கூறிய ஒன்பது திருஷ்டாந்தத்திலும் தோன்றிய தோற்றமான கட்டையிற் கள்வன் முதலியன உள் - பொருளா அல்லது இல்-பொருளா? இரண்டுமன்று. எனவே, காரியம் காரணமாகவே விளங்கும் என்பது வேதாந்தத்தின் கோட்பாடு. குடத்திற்கு மண் போல், சகல தோற்றங்களுக்கும் பிரமம் உபாதான காரணமாம். இதையறியாது சிலர் வேதாந்தத்தில் உலகைப் பொய்யென்று கூறியிருக்கின்றது என்று குற்றம் சாட்டுகிறார்கள். அது வேதாந்த சம்பிரதாயம் அறியாதோர் கூற்றாம். பழுதையில் தோன்றிய பாம்பு தெளிவில் (தெளிந்த பின்னர்) பழுதையாக முடிவது போல் பிரமத்தில் தோன்றிய தேகாதிப் பிரபஞ்சம், தெளிவில் பிரமமாகவே விளங்கும் என்பதாம். இந்த ஒன்பது திருஷ்டாந்தத்திலும் சொப்பன திருஷ்டாந்தமே வேதாந்தத்திற்கு முக்கிய உடன்பாடாம். ஏனெனில் நனவில் காணும் பிரபஞ்சம் புலன்கள் வாயிலாக அனுபவத்தோடு கூடியது. அது எங்ஙனம் அநிர்வசனீய மாகும் எனின், கனவில் தோன்றும் பிரபஞ்சம் புலன்களுக்கு அனுபவமாய்

இருப்பதால் அதை உள்-பொருளாய்க் கூற முடியுமா? கனவில் காண்பதுவும், கேட்பதுவும், அனுபவிப்பதுவும் அப்பொழுது வாஸ்தவம் போல் தோன்றினும், விழித்தபின் அநிர்வசனீயமாய்ப் போவது போல், நனவில் காண்பதுவும், கேட்பதுவும், அனுபவிப்பதுவும் சாட்சியான தன் சொரூபத்தில் விழிப்புடையவனுக்கு அநிர்வசனீயமாய்த் தோன்றும். இது பற்றி இந்நூலாசிரியரும், தத்துவ விளக்கப்படலம் 45-வது செய்யுளில் "காண்பவையெல்லாம் சொப்பனம் போல எண்ணித் துணிந்தவன் ஞானியாவான்" என்று கூறுவதால் அறிக. சொப்பனத்தில் அனுபவித்த சுக துக்கங்கள், விழித்தபின் சொப்பன சாட்சியான நம்மிடத்தில் உண்டா? இல்லையல்லவா? அந்த சாட்சி நம்மைவிட வேறாகுமா? ஓர்மின். மேற்கூறிய ஒன்பது திருஷ்டாந்தமும், கனவுக் காட்சிப் பொருளும், வாஸ்தவ அபேத, கற்பித பேத, தாதாத்மிய சம்பந்தமுடையது. அதுபோல் ஜீவேஸ்வர ஜகத்தும் அறிவினை நோக்குமிடத்தில் வாஸ்தவ அபேத, கற்பித பேத, தாதாத்மிய சம்பந்தம் உடையது. இக்காரணம் பற்றி இந்நூலாசிரியரும், "அறிவொன்றே மெய்ப்பொருள்" என்றும், "அது உன்னைவிட வேறும் இல்லை" என்றும் தம்மேல் ஆணையிட்டுக் கூறியிருப்பதைக் காண்க. கைவல்யத்தில் மொத்தம் மூன்று ஆணைகள் வருகின்றன. அதில் துவம் பத லட்சியமான அறிவு நீ என்பதற்கு தத்துவ விளக்கப்படலம் 72-வது கவியில் "ஆலமர் கடவுள் ஆணை அவைக்கெல்லாம் சாட்சி நீயே" என்றும், துவம் பதத்தில் கண்ட அறிவே தத்பத லட்சியமான நிறைபொருள் அதுவே நீயாம் என்பதற்கு, "நம்மாணை உன்னை மறந்திடாதே" என்றும் கூறினார். அடுத்த மூன்றாவது ஆணை அசிபதத்தை விளக்கும்போது சந்தேகத் தெளிதல் படலத்தில் வருவதைக் காண்க. அறிவே மெய்ப்பொருள் என்று இந்நூலாசிரியர் கூறியது போல் பிறரும் கூறியிருப்பதைப் பாருங்கள். "மனங்குளிர கேள்வி விருந்தருந்தி மெய்யறிவாம் வீட்டிலென்றும்" என்று இராமலிங்க அடிகளும், "ஆக்கை நீயல்ல அறிவு நீ என்று மறை வாக்கியங்கள் நான்கும் வகுத்துரைக்க நோக்காமல்" என்று சிவஞான வள்ளலாரும், "அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே" என்று அருணகிரி நாதரும், "அறிவை அறிவதுவே ஆகும் பொருள் என்று உறுதிசொன்ன உண்மையினை ஓரும் நாள் எந்நாளோ?" என்று தாயுமான சுவாமியும், "அறிவு உன்னுருவம் என்று உந்தீபற" என்று சாந்தலிங்க சுவாமிகளும், "உணர்வே பிரமமென்று ஊதடா காளம்" என்று தத்துவராய சுவாமிகளும், "அறிவொன்றே கெட்டி,

அயலனைத்தும் போலே அறிவை நேதி செய்யலாமோ" என்று ஈசூர் சச்சிதானந்த சுவாமிகளும், "அனைத்துருவும் அல்லாத அறிவுருவை அகத்துள் வைப்பாம்" என்று சசிவர்ணபோத ஆசிரியரும், "அறிவைத் தவிர வேறொன்றுமில்லை" என்று திருக்கு-திருசிய விவேகத்தில் திருவண்ணாமலை ரமண மகரிஷியும், "நான் அறிவு சொரூபன் என்றவொரு கனத்த நினைவே மோட்சமாகும் ராமா" என்று ஞான வாசிட்டம் கடைசி கவியில் வசிட்டமாமுனிவரும், "எல்லா சரீரத்திலும் இருக்கும் க்ஷேத்திரக்ஞன் ஆகிய அறிவு நான்" என்று 13-ஆம் அத்தியாயத்தில் கீதாசாரியனும், "ஆனந்த ஆதேய பிரதானஸ்ய: அதாவது சொரூபத்தைத் தவிர வேறொன்றுமில்லை" என்று பிரம்ம சூத்திரத்தில் வியாசரும், "எனக்கு நாக்குண்டோ என்று ஒருவன் கேட்பானானால் அவ்வாறு கேட்பதே நாக்குதான் என்று அறிவது போல், நான் என்று ஒருவன் சொன்னால் சொன்னது அறிவுதான். அதுதான் பிரமம் என்று அறியலாமல்லவா?" என்று பஞ்சதசியில் வித்யாரண்ய சுவாமிகளும், "இந்த அறிவு மாயாரகிதமாக உள்ளபோது சிவம் என்றும், மாயாசகிதமாக உள்ளபோது ஜீவன் என்றும் வேதம் கூறும்" என்று சிவஞானபோத உரையில் கோ. வடிவேல் செட்டியாரும், "தேகாதிப் பிரபஞ்சம் முற்றும் தோற்ற மாத்திரமேயாம். உள்ளது அறிவொன்றே" என்று வடிவேல் செட்டியாரின் குருவான சை. ரெத்தினம் செட்டியார் எழுதிய தத்துவ வாதத்திலும், "ஆத்மாவிற்கு வேறாகக் கடவுள் இருந்தால் அது ஜடமேயாகும்; ஆகையால் ஆத்மாவான அறிவே பிரமம்" என்று விசாரசாகரத்தில் நிச்சலதாசரும், "இந்த அறிவைத் தவிர வேறொன்றுமில்லை" என்று கந்த புராணத்தில் சூரபத்மனுக்கு உபதேசித்த சுக்கிராச்சாரியாரும், "நிச்சயமாக விசாரித்துப் பார்த்தால் ஆத்மாவாகிய இராமனைத் தவிர வேறொன்றுமில்லை" என்று இராமாயணத்தில் வான்மீகி முனிவரும், "வேதமுடிவில் கூறும் அறிவு வடிவமான ராமனைவிட வேறொன்றுமில்லை." என்று இராமாயண சுந்தர காண்டத்தின் காப்புச் செய்யுளில் கம்பரும், "அறிவான கடவுளை விட வேறொன்றுமில்லை" என்று பாரதத்தின் சாந்தி பருவத்தில் பீஷ்மாச்சாரியரும், "நம்மை அறிவே வடிவாய் நாம் கண்டோம் அன்றி செம்மை உலகத் திரள் காணோம்" என்றும், "சாயையென விளங்கும் குடும்பத்தினை சுமந்தாலும் ஜகசாட்சியான அறிவு சொரூபம் தானே நாம்" என்று சொரூபசாரத்தில் சொரூபானந்தரும், "ஆனந்தத்தை விட அறிவானந்தத்திடம் வேறு யான்

கண்டிலன்" என்று கைவல்யத்தில் ஞானகுரு யோகியும், "அறிவின்றி மூன்று அவஸ்தையும், நீயும் நானும் இல்லை. ஆகையால் இந்த அறிவே நீயாம்" என்று அனுபவானந்த தீபிகையில் நாதமுனி சுவாமிகளும், "பேரறிவாய சைதன்யம் ஒன்றே" என்று சைவசித்தாந்த சாஸ்திரம் 50-வது பக்கத்தில் சிவஞான சுவாமிகளும், "அறிவுமயமாகிய உயிர் ஒன்றுமே அன்றி உடம்பு முதலாகிய உலகத்துப் பொருள்கள் எல்லாம் உயிரற்ற பொருளாம்" என்று நன்னூல் 450-வது சூத்ர உரையில் பவணந்தி முனிவரும், "அறிவை நோக்கிடில் அதற்கு தாய் தந்தை இல்லை" என்று துறவில் சூதமாமுனிவரும், "அறிவாயிரீர் மயக்கம் ஆகாது" என்று ஒழிவிலொடுக்கத்தில் கண்ணுடைய வள்ளலாரும், "ஒரு கோடி சாஸ்திரங்களின் பொருள் சொல்லுகின்றேன்; இந்த ஜீவன் பேரறிவு வடிவமான பிரமமாம்" என்று பாலபோதம் 213-வது பக்கத்தில் பிரமானந்த சுவாமிகளும், "நான் பேரறிவு வடிவமான பிரமமே ஒழிய அசத்து வடிவமான தேகமல்ல" என்று அபரோக்ஷானுபூதி 24-வது சுலோகத்திலும், "ஜீவனாகிய தான் பேரறிவு வடிவத்தை அடையப்பட்ட தாய் இருந்தாலும், அறியாமையினால் அறியப்படாததைப் போல இருக்கிறது" என்று ஆத்மபோதம் 44-வது சுலோகத்தில் ஆதிசங்கரரும், "ஊனாகி உயிராகி" என்று மணிவாசகப் பெருமானும், "ஊனாய் உயிராய்" என்று தேவாரத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகளும், "நீ ஒரு காலத்தும் பிரமமாவது இல்லை; நீ இயற்கையில் பேரறிவு வடிவமான பிரமமாகவே இருக்கின்றாய்" என்று அமெரிக்காவில் விவேகானந்த சுவாமிகளும், பிறரும் கூறிப்போந்துள்ள மகாவாக்கியப் பிரகாரம் இந்நூலாசிரியரும் ஞான சொரூபமான, அதாவது அறிவு வடிவமான உன்னை "நம்மாணை மறந்திடாதே" என்றும் கூறினார். ஆணையிட்டுக் கூறுதல் உறுதிப்படுத்துவதற்கென்க.

இவ்வாறு வேதமும் கூறியுள்ளது. பிரமகீதை சாந்தோக்கிய உபநிஷத்து,

"பத்தராயுள்ளீர் கேண்மின் பகர்ந்த வேதத்தின் அர்த்தம்,
இத்தகைத்தாகும் வேறொன்றில்லையாம் இதனில் உங்கள்
சித்தம் நம்புதல் உண்டாகச் செப்பினோம் ஆணை மூன்றோடு
அத்தனார் பாதம் தொட்டே என்றனன் அலரின் மேலோன்."

ரிபுகீதை,

அறிவுருவாய் அமையுற்ற ஆன்மா தானே
அழியாமல் இருப்பதனால் சத்துமாகும்
அறிவுருவாய் அமையுற்ற ஆன்மா தானே
அனைத்தையுமே விளக்குவதால் சித்துமாகும்
அறிவுருவாய் அமையுற்ற ஆன்மா தானே
அகிலர்க்கும் பிரியமதால் சுகமுமாகும்
அறிவுருவாய் அமையுற்ற ஆன்மா தானே
அந்தமிலாது இருப்பதனால் அநந்தமாகும்.

இந்த இரண்டு செய்யுளின் பொருள் வெளிப்படை. இந்த தத்துவ விளக்கப் படலத்தின் 108-வது செய்யுளில் திரண்ட பொருள் யாதோவெனின் சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தின் 6-வது அத்தியாயத்தில் சுவேதகேதுவுக்கு தமது பிதாவாகிய உத்தாலக முனிவர் தத்துவமஸி என்று உபதேசித்தார். அதாவது பேரறிவாகிய பிரமமே நீயாயிருக்கின்றாய் என்று நிகழ்காலத்தைக் காட்டி உபதேசித் தருளினார். சிஷ்யனும் அவ்வாறே பேரறிவு சொரூபமே தனது நிஜ சொரூபம் என்று அறிந்தார்.

தத்துவ விளக்கப் படலத்தின் சாரம் முற்றுப் பெற்றது.



உ

பிர்மமே ஸத்யம்
அதுவே நித்யம்

## இது 1983ம் ஆண்டு வெளியிடப்பட்ட இந்நூலின் (சந்தேகம் தெளிதல் படலம்) முதற்பதிப்பில் உள்ள

# நன்றியுரை

ஆதிகாலம் முதற்கொண்டு தென்புலத்தாராகிய தத்துவ ஞானிகள் திருநாங்கூரை இருப்பிடமாகக் கொண்டு வசித்து வந்துள்ளார்கள் என்பது வரலாறு கண்ட உண்மை. அம்பலத்தாடியார் மடம், பூம்பொழில் நம்பியார் சமாதி, பிரதிவாதி பயங்கரம், ஆயிரத்தில் ஒருவர், மகரிஷி மாதங்கேஸ்வரர் என்ற சின்னங்களால் இது புலனாகின்றது. மகான்கள் தோன்றிய திருநாங்கூரில் எங்கள் குருபிரானாகிய சுவாமி வாசுதேவானந்தா அவர்களும் தங்கி இருந்தார். மகான்கள் தொடர்பு வழியுள்ளதால்தான் நானும், இங்கு தங்கினேன் என்று சுவாமிகள் சொல்லுவார்கள்.

மறைந்த எனது தகப்பனார் சுவாமிகளோடு தொடர்பு கொண்டு பழகிய காலத்தில், ஒருநாள் சுவாமிகளிடம், இங்கு ஓர் ஆஸ்ரமம் கட்டப்பட்டு, அதில் தாங்கள் வடக்கு நோக்கி அமர்ந்து வேதாந்த பாடங்களை சிஷ்யர்களுக்கு போதிப்பதாக சொப்பனம் கண்டேன் என்று கூறினார்களாம். இதை சுவாமிகளின் வாயிலாக கேட்டதுண்டு. அதன் படி ஆஸ்ரமம் கட்டி சிஷ்யர்களுக்கு பாடம் நடந்து வருகிறது. எனது தகப்பனார் கண்ட கனவு நனவானது. தாம் அடைந்த ஆத்ம ஞானத்தை சிஷ்யர்களை உண்டாக்கி அவர்கள் அறியாமையை போக்கி ஆனந்த வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது சுவாமிகளின் வற்றொணாத இதயத் துடிப்பாக மிளிர்ந்தது. சுவாமிகளுக்கு இருப்பிடமாக ஆனந்தாஸ்ரமத்தை அமைத்துக் கொடுத்து அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களையும் செய்து கொடுத்தவரான காலஞ்சென்ற திரு.G.சீனிவாச அண்ணார் அவர்களுக்கும், அவர்களுக்குப் பின் சுவாமியை ஆதரித்துவந்த அவர்கள் குடும்பத்தார்களுக்கும், எங்கள் மனமார்ந்த நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். குருபிரான் அவர்களை எனக்கு முப்பது ஆண்டுகளுக்கு மேல் தெரியும் என்றாலும், அவரிடம் எதைத் தெரிந்துக் கொள்ள வேண்டுமோ அதை தெரிந்து கொள்ளாமல், பெரியோர்களிடம் ஆசிபெற்றால் வாழ்க்கை நன்றாக அமையும் என்று மட்டுமே அப்போது நான் எண்ணியிருந்தேன். மேலும் அதிகப்படியான

காலத்தை வெளி நாட்டிலேயே கழிக்க வேண்டியிருந்ததால், சுவாமிகளிடம் நெருங்கிப் பழகுவதற்கு வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை. சில ஆண்டுகளுக்குமுன், அண்ணார் V.R.ஆறுமுகம் அவர்கள், நான் சிங்கப்பூரில் நடத்திவரும் திருவள்ளுவர் நூல் நிலையத்திற்கு வருவார்கள். அப்பொழுதுதான் அவர் என்னிடம் சுவாமிகளைப் பற்றியும், அவர் எழுதி அனுப்பிய ஆத்மஞான கருத்துக்களைப் பற்றியும் எடுத்துக்கூறி, சுவாமிகள் எழுதி அனுப்பிய கடிதங்களை போட்டோசெட் காபி எடுத்துக் கொடுத்து படிக்கும்படிச் செய்தார்கள். அந்த நேரத்தில் என் நிலை நடுக்கடலில் பேரிடிக்கும், பெருமழைக்கும், பேரலைக்கும், புயற்காற்றுக்கும் இடையில், திக்கு திசை தெரியாது சிக்குண்ட கப்பலைப் போன்று இருந்தது. நான், இந்த உயிருக்கும் உடல் தேவைதானா? என்று சஞ்சலமடைந்திருந்த சமயம் அது. இந்நிலையில் எனக்கு குருபிரான் கடிதங்கள் கையில் கிடைத்தது. நடுக்கடலில் தத்தளிப்பவனுக்கு ஒரு கட்டுமரம் கிடைத்ததுபோல் இருந்தது. ஒரு சில கடிதங்களிலேயே எனது மனமும், சிந்தனையும், ஆர்வமும், ஆன்மீகத்தைக் குறித்து ஆராயப் புகுந்தது. சுவாமிகளுடன் நேரிடையான கடிதத் தொடர்புகளை வைத்துக் கொண்டு எனது ஐயங்களைத் தெளிவாக்கிக் கொண்டேன். என்னைச் சார்ந்திருந்த தம்பி மாயழகு, அண்ணன் ஏகாம்பரம், கணபதி, குஞ்சிதபாதம் மற்றும் பிற நண்பர்களையும் சுவாமிகளின் கடிதங்களைப் படிக்கச் செய்தேன். அவர்களும் ஆன்மீக கருத்துக்களை ஆராய்ந்து சுவாமிகளுடன் தொடர்பு கொண்டார்கள். சுவாமிகள் எழுதிய இரண்டாவது கடிதமே என் சிந்தனையை தூண்ட திறவுகோலாக இருந்தது. ஒருவரிடம் இரவலாக மண்வெட்டியை வாங்கி வந்தால் உடனே வேலையை செய்து முடிக்கவேண்டும். இல்லாவிட்டால் மறுகணமோ, மறுநாளோ கொடுத்தவன் வாங்கிக்கொண்டு போய் விடுவான். அதைப்போன்று, நாமும் இந்த ஜடமாகிய உடம்பை இரவல் வாங்கி வந்துள்ளோம். இயற்கை சக்தி இதை அழிக்குமுன், பிறவிப்பயனை அடையவேண்டும் என்பதே என் சிந்தனையைத் தூண்டி விழிப்படையச் செய்தது. மேலும் சுவாமிகளின் காரிய-காரண விளக்கங்களும், சித்து-ஜட விளக்கங்களும் பசுமரத்தாணிபோல் என் மனதில் பதிந்தன. அந்த விளக்கங்கள் எல்லாம் குருபிரான் எங்களுக்கு எழுதிய "சொரூபாத்வைதம் என்னும் ஆத்மஞான நிரூபகம்" என்னும் நூலில் காணலாம். சுவாமிகளின் மறைவிற்கு முன்பாகவே இந்தக்

கடிதங்களை எல்லாம் ஒன்று திரட்டி நூலாக்கிக் கொடுத்த பெருமை மறைந்த மாமேதை சாதுபிர்மானந்தா அவர்களையே சாரும். அடுத்து சுவாமிகள் கையேட்டுப் பிரதியாக வைத்திருந்த கைவல்ய நவநீதசாரம் முதல் பாகத்தையும் விரைவாகவே அச்சேற்றி நூலாக்கித் தந்த பெருமையும் அவர்களையே சாரும். அன்னாரின் நினைவு எங்கள் இதயத்தில் என்றென்றும் நிலைத்திருக்கும். கைவல்ய நவநீத சாரம் இரண்டாவது பாகத்தையும் அவருடைய பொருளுதவியாலேயே அச்சிட்டுத் தரும்படி சுவாமி அபேதானந்தா என்கிற டாக்டர். T.முத்து R.I.M.P., அவர்களைக் கேட்டுக் கொண்டதற்கு இணங்க அவர்களும் செவ்வனே செய்து கொடுப்பதாக உறுதி அளித்தவகையில், அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன். யான் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெறுக என்பதற்கு இணங்க இந்நூலைப் பெற்று எல்லோரும் பிறவிப்பயனடைய வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன். சுவாமி சற்குருநாதனை நான் அடைந்த நேரத்திலிருந்தே துன்பம் எனக்கில்லை என்பதை அறிந்தேன்; எங்கும் இன்பமே என்பதை உணர்ந்தேன்; பிறவியில்லை என்பதறிந்தேன்; நான் பிரமம் என்று உணர்ந்தேன். நான் கண்ட எனது நிஜ சொரூபத்தை, காண்பானின்றி கண்டு தெளிந்ததை, என்னுடனிருக்கும் ஆத்மீக ஒருமைப்பாடுடைய நண்பர்களும் கண்டு தெளிந்தார்கள். ஏனைய மெய்யன்பர்களும் பயனடைய வேண்டி அவர்கள் இதயக் கமலங்களில் இந்நூலினைச் சமர்ப்பிக்கின்றேன்.

இங்ஙனம்
**செ.முருகேசன்**
(கேம்ப்) சிங்கப்பூர்

வெ.ரா.ஆறுமுகம்
வை.மாயழகு
எம்.கணபதி
க.கா.ஏகாம்பரம்
வெ.குஞ்சிதபாதம்

உ
பிரம்மமே ஸத்யம்

இது 1983ம் ஆண்டு வெளியிடப்பட்ட இந்நூலின் முதற்பதிப்புள் உள்ள

# முன்னுரை

"தருமம் குன்றி அதர்மம் தலையெடுக்கும் சமயம் பிரம்ம சாகர அலை, மகனே! பிரித்து அதை நீக்குமடா," என்று ஸ்ரீகுருகிணகர் சுவாமிகள் அருளிய வாக்கியப்படி, தருமம் நிலைத்தோங்க அவதரித்தவர் ஸ்ரீலஸ்ரீ வாசுதேவானந்தா சுவாமிகள்.

சுவாமி வாசுதேவானந்தா அவர்கள், ஆதிசங்கரர் அவதரித்த கேரள நாட்டில் பிறந்தவர். சிறிய வயதிலேயே கடவுளைக் காண வேண்டும் என்று கயிலயங்கிரியாம் இமயமலைக்குச் சென்று, மடங்களிலும், குகைகளிலும் இருக்கும் சந்நியாசிகளைச் சந்தித்தும், யோகம், தவம் பல செய்தும் சந்தேகம் தெளியாமல், ரிஷிகேசம் வந்து பல ஆண்டு காலம் இருந்து அங்கு வரும் சந்நியாசிகளையும், வேதாந்திகளையும் சம்வாதம் செய்தும் சமாதானம் கிடைக்காமல், இமயமலையில் இருந்து தமிழ்நாடு வேதாரண்யம் வரை சமுத்திரக்கரை ஓரமாகவே கால் நடையாக நடந்து வந்தார். இம்மாதிரி இருமுறை இமயமலையிலிருந்து கால் நடையாக தமிழ்நாட்டுக்கு நடந்துவரும் வழியில் சுவாமிகளை திருநாங்கூரில் காலம் சென்ற திரு.சீனிவாச அண்ணார் அவர்கள் சந்தித்து, சுவாமிகள் தங்குவதற்கு வேண்டிய சௌகரியங்கள் செய்தமையால் சுவாமிகள் தங்கி ஆசிரமம் அமைத்து வேதாந்த உண்மையை எளிய முறையில் போதித்து வந்துள்ளார். "நான் தமிழ்நாட்டிற்கு வந்த பின்னர் தான் எனக்கு சமாதானம் கிடைத்தது," என்று சுவாமிகள் சொல்வார்கள்.

சுவாமிகள் சிறிய வயதிலிருந்தே சந்நியாசம் பெற்று காவி உடை அணிந்திருப்பார். ஒரு சிஷ்யன் சுவாமிகளை அணுகி; நான் சந்நியாசம் பெறவேண்டும், காவி உடை தரிக்க வேண்டும் என்று கேட்டபோது சந்நியாசமோ, காவியோ வேண்டாம். கிரகஸ்தனாக இருந்து ஆத்ம ஞானம் அடைவது தான் சாலச்சிறந்தது என்றார். வேதகாலத்தில் சந்நியாசமோ, காவியோ இல்லை. இடைக்காலத்தில்தான் அது வந்தது. சந்நியாசம் என்பது அறிவாளிகளை காட்டுக்கு அனுப்பும் சதித்திட்டம் என்று சுவாமிகள் சொல்வதும் உண்டு.

திருவாரூர் ரயில் நிலையத்தில் ஸ்ரீகுருகிணகர் சுவாமிகள் பற்பொடி விற்பனை செய்துகொண்டு ஆஸ்தீக விஞ்ஞான சாகரம் என்னும் புத்தகமும் விற்பனை செய்து வருவதைக் கண்ட சுவாமி அவர்கள் அந்நூல் எழுதிய பெரியாரை சந்திக்க வேண்டும் என்று கிணகர் சுவாமிகளுடன் சாது சௌந்திரராஜ பிரம்மம் அவர்களைச் சந்தித்து அன்றுமுதல் திருவாரூர் பிரம வித்யா பீடத்துடன் தொடர்பு கொண்டு வேதாந்த நூல்களை எளியமுறையில் சாது பிர்மானந்தாவுடன் இருந்து வெளியிட்டுள்ளார். சுவாமிகள் பூதவுடலும், சாது பிர்மானந்தா அவர்கள் பூதவுடலும் மறைந்து விட்டதால், சுவாமிகள் சிஷ்யர் செ.முருகேசன் அவர்கள், சுவாமிகள் எழுதிய இந்நூலை அவருடைய பொருளுதவி யால் அச்சிட்டு யாம் அறிந்த உண்மையை இவ்வையகம் அறிய வேண்டும் என்ற பேரவாவோடு அச்சிடும் பணியை என்னிடம் ஒப்படைத்தார். அவர்கள் கட்டளையை சிரமேல் கொண்டு சுவாமிகள் எழுதிய கைவல்ய நவநீதசாரம் - சந்தேகம் தெளிதல் - இரண்டாவது பாகமான இந்நூலை வெளியிடும் பணியை மேற்கொண்டேன். சிஷ்யர்கள் எளிதில் புரிந்துக் கொள்ளும் வகையில் வசன நடையாகவும் எல்லோரும் புரிந்து கொள்ளும் வகையிலும் மனதில் பசுமரத்தாணியைப் போல் பதியும் வண்ணம் எழுதியுள்ளார். சுவாமிகள் இந்நூலில் ஜீவன் முக்தி, எனது நிஜசொரூபம், விஷயானந்தம், ஆத்மானுபவம், திருக்கு-திரிசிய விவேகம், தூல தேகம் விடுத்த லிங்கதேகம் பற்றியும், கைவல்ய நவநீத சாராம்சமும், அறிவே தெய்வம் என்று ஆணித்தரமான பதிலும், "நீ ஜனன மரணம் இன்றியவன்" என்பதை விளக்கியும் இன்னும் அனேக வித சந்தேகங்களுக்கு பிரஸ்தானத்திரயம் எனப்படும் உபநிஷத், பிரம்ம சூத்திரம், கீதை முதலியவைகளிலும், பஞ்சதசி, விசார சாகரம், ஞானவாசிட்டம், வேதாந்த சூடாமணி இன்னும் பல நூல்களிலிருந்தும், திருமூலர், திருவள்ளுவர், தாயுமானவர், ஔவைப் பிராட்டியார், பட்டினத்தார், சிவஞான வள்ளலார், சுவாமி விவேகானந்தர், ஸ்ரீபொன்னம்பல சுவாமிகள், கோ.வடிவேல் செட்டியார், பாரதியார், வீரசுப்பையா சுவாமிகள், மகாத்மா, குமாரதேவ சுவாமிகள் இன்னும் பல தமிழ்ப்பெரியோர்களின் அனுபவங்களை எடுத்துக்கூறி விளக்கம் தந்துள்ளார். வேதாகமங்களை அறிய ஆற்றலற்றவர்களாக பலர் காணப்படுவதால் அவர்களுடைய மனோ நிலைக்குத் தக்கவாறு உத்தமன்,

மத்திமன், அதமன் என அதிகாரிகளை மூவகைப்படுத்தி, அவர்களுக்கு தகுந்தவாறு சாஸ்திரங்களில் இருந்து பலவித உவமானங்களையும் எடுத்து எழுதி உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்கம் தந்துள்ளார் சுவாமிகள்.

வியாசபகவான் வகுத்த நான்கு வேதங்களின் முடிவும் சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம் பூரணமாகிய ஐந்து லட்சணங்களைப் பெற்றுள்ள அறிவு சொரூபமே நீ என்பதாம்.

இந்த உண்மை சகல மொழிகளிலும் இருப்பது பிரசித்தமாம். இந்நூல் வாசிக்கும் அன்பர்கள் வடமொழி, தென்மொழி என்ற மொழி வித்தியாசம் பாராமல் சுவாமிகள் எழுதிய உண்மைக் கருத்தை ஊன்றி கவனித்து உன்னத நிலை அடைவார்களாக. இந்நூல் அச்சிட என்னுடன் உறுதுணையாக இருந்து ஒத்துழைப்புத் தந்த திரு.S.ஜெயராமன் அவர்களுக்கும், ஸ்ரீ வினாயகர் அச்சகத்தார் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்து, நூல் வெளியிட பொருளுதவி செய்து ஊக்கம் தந்த சிங்கப்பூரிலிருக்கும் திரு.செ.முருகேச அண்ணார் அவர்களுக்கும் மற்றும் அவருடனிருக்கும் திரு.வை.மாயழகு, திரு.V.R.ஆறுமுகம், திரு.K.K.ஏகாம்பரம் திரு.M.கணபதி, திரு.V.குஞ்சிதபாதம் மற்றும் அன்பர்களுக்கும் நன்றியைத் தெரிவித்து சுவாமிகள் எழுதிய இந்நூலை மெய்யன்பர்களின் இதயக்கமலங்களில் சமர்ப்பிக்கின்றேன்.

இங்ஙனம்

**சுவாமி அபேதானந்தா** என்கிற

டாக்டர். **T.முத்து** ஆர்.ஐ.எம்.பி.

தலைவர்,

பிர்மவித்யா பீடம் கிளை, அரக்கோணம்

உ

ஓம் தத் ஸத்

# கைவல்ய நவநீதம்

## (சந்தேகம் தெளிதல் படலம்)

நரர் குழிபறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம்
உரமுறக் குத்திக் குத்தி உறைப்பிக்கும் உபாயம்போலப்
பரமமாம் சொரூபம் தன்னில் பற்றிய மனோவிருத்தி
திர நிலைபெறச் சந்தேகம் தெளிதலை மொழிகின்றேனே 1

1. அன்பனே உலகத்தவர்கள் ஒரு கம்பத்தை நட்டு அதைப்பலப் படுத்த வேண்டி, கல், மண் முதலியவைகளைப் போட்டு குத்திக் குத்தி உறைப்பிக்கும் உபாயம் போல் தத்துவ விளக்கப்படலம் 108 கவியிலுமுள்ள பொருள்களைக் கேட்டு மனனம் செய்த உன்னுடைய மனோவிருத்தியில் நானே பிரமம்; பிரமமே நான் என்ற ஓதப்புரோத பாவம் ஐயம் திரிபுஅற ஏற்பட்டிருக்கின்றது அல்லவா, அந்த விருத்தி அந்தப் பிரமத்தில் விபரீத உணர்வு ஏற்படாமல் வயிரமலையைப் போன்று ஸ்திரநிலை பெறுவதற்காக சந்தேகம் தெளிதல் படலத்தைச் சொல்லுகின்றேன்.

நற்கருத்து உடையோனாகி ஞானவானாகி நின்றோன்
மர்க்கட நியாயம் போல மகாபூத விகாரம்தொட்டு
நிர்க்குண விதேகமுத்தி நிலைபரியந்தம் சொன்ன
சற்குருவினை விடாமல் சந்ததம் அனுசரித்தான் 2

2. சத்துவகுண சம்பன்னனாகவும், பிரமாத்ம ஐக்கிய ஞானம் உள்ளவனாகவும் நின்று, சிஷ்யன் மர்க்கட நியாயம் போல் அதாவது குரங்கு எங்கு தாவினும் அதன் குட்டி தாய்க்குரங்கை விடாது பற்றிக் கொள்வது போல் ஆத்தம், அங்கம், தானம், சற்பாவம் முதலிய பணிவிடைகளால் சற்குருவைப் பின் தொடர்ந்தான். அதாவது, பஞ்சீகிருத பஞ்ச மகாபூத காரியமான ஸ்தூல தேகத்தோற்றம் முதற் கொண்டு ஜீவன் முக்தி, விதேக முக்தி பரியந்தம் சொன்ன சற்குருவை எப்பொழுதும் வழிபடத் தொடங்கினான்.

சந்ததம் புருடன் தன்னைச் சாயைபோல் விடாமல் அன்பாம்
மைந்தனை நோக்கிச் சாட்சி மாத்திரமாய் நின்றாயோ
சிந்தையில் ஐயமெல்லாம் தீர்ந்தவோ தெளிவினுள்ளே
அந்தரம் கலந்ததுண்டோ அனுபவம் உரைசெய்வாயே 3

3. ஒரு புருஷனை விட்டு நீங்காத அவன் சாயை (நிழல்) போல் சற்குருவை விடாமல் அன்பாய் பின்பற்றி நின்ற சீடனை நோக்கி குருவானவர் அருளிச் செய்கின்றார். அன்பனே! காண்பான், காட்சி, காணப்படுபொருள் ஆகிய மூன்றில், காண்பான் ஆகிய சாட்சி மாத்திரமாய் நிற்கின்றாயோ? உனக்கு ஏற்படக்கூடிய பிரமாணகத சந்தேகம், பிரமேயகத சந்தேகம் முதலிய எல்லாம் தீர்ந்து விட்டதா? அதாவது, வேதாந்தமானது ஜீவப் பிரமங்களின் பேதத்தைக் கூறுகின்றதா? அல்லது அபேதத்தைக் கூறுகின்றதா? என்னும் சந்தேகம் பிரமாணகத சந்தேகம் எனப்படும். ஜீவப்பிரமங்களின் பேதம் சத்தியமா? அல்லது அபேதம் சத்தியமா? என்னும் சந்தேகம் பிரமேயகத சந்தேகம் எனப்படும். இந்த சம்சயங்கள் எல்லாம் உன்னை விட்டு ஒழிந்து போய்விட்டதா? உன் புத்தியில் மேகமானது சூரியனை மறைப்பது போல் ஏதாவது பேதப்பிராந்தி வந்து கலந்ததுண்டா? அனுபவம் கூறுவாயாக.

என உரைத்தருளும் ஆசான் இருபதம் வணங்கி எந்தாய்
சனன வன்காட்டில் மோகத் தமத்து எழு பேதப்பேய்கள்
உனதருள் உதய வெற்பில் உபதேச அருக்கன் தோன்றி
மனவிழி தெரிய ஞான வான்கதிர் பரந்தால் உண்டோ 4

4. குருதேவா! முன் கவியில் உன் அனுபவத்தை சொல் என்று கட்டளையிட்டீர் அல்லவா! எனது பிதாவே தங்கள் திருவடிகளுக்கு வணக்கம். குருதேவா! ஜனனமாகிய பெரிய காட்டில், அஞ்ஞானமாகிய இருளில், பேத புத்தியாகிய பிசாசுகள், தங்களுடைய கிருபையாகிய உதயகிரியில் பிரம்மோபதேசமான சூரியன் உதயமாய், அதன் வாயிலாக என் உள்ளத்தில் உள்ள ஞானமாகிய கண் திறந்து ஞானவொளியைப் பரப்பினால் மேற்கூறிய பேதப் பேய்கள் நிற்குமோ? நிற்காதல்லவா? இதில் பேதங்களாவன : ஜீவேஸ்வரபேதம், ஜீவர்களின் பரஸ்பர பேதம், ஜீவஜடங்களின் பேதம், ஈஸ்வர ஜடங்களின் பேதம், ஜடஜடங்களின் பேதம் ஆகிய ஐந்துமாம். பேதப்பேய்கள் மற்றொரு விதம் வருமாறு :-

நித்தன் அன்று உரைத்த வாக்கியப்படியே நிகழ்த்துவன் பிராந்தி ஐந்தினையும்
சத்தியம் இந்த உலகெனல் கருவி தணந்திடாது உடலை நானென்னல்
கத்த போத்தாவும் நானென்று நானும் கடவுளும் வேறெனக் கருதல்
சித்துருவாகி இருந்தும் நான் ஆகேன் சிவம் எனல் சிதடர்பால் அறியே
– சிவஞான வள்ளலார் சாத்திரம் பக்கம் 171

இக்கவியில் பேதப்பேய்களின் ஐந்து விதத்தையும் காண்க.

மந்திர மூர்த்தி தன்னால் மாற்றிய பேய் போனாலும்
எந்திரம் எழுதிக்கட்டி இனி வராவகை செய்வார்போல்
முந்தி உன் உபதேசத்தால் மோகம் போனாலும் ஐயா
புந்தி நின்று உறைக்க இன்னம் புகலும் விண்ணப்பம் உண்டே 5

5. குருதேவா! உலகில் ஒருவனைப் பேய் பிடித்தால் அதை நீக்கு வதற்கு மந்திரவாதியானவன் பல உபாயத்தால் ஓட்டினாலும், அது திரும்பவும் வந்து அவனை பிடித்துக் கொள்ளாதவாறு எந்திரம் எழுதிக்கட்டும் உலக வழக்கம் போல், முன் தத்துவ விளக்கப் படலத்தில் தேவரீர் அருளிச் செய்த பிரம்மோபதேசத்தால் அஞ்ஞானம் நீங்கி விட்டது. ஆனாலும் ஐயா! குருவே! என் புத்தியானது மாறுதல் அடையாமல் இருக்க மேலும் விண்ணப்பம் உண்டு.

ஆகமப் பிரமாணத்தால் அறி என்றும் வாக்குக்கு எட்டாது
ஏகமாம் பிரமம் என்றும் இதயத்தால் உணர்வாய் என்றும்
சோகமாம் மனத்திற்கு எட்டாச் சுயஞ்சோதி என்றும் சொன்னீர்
மோகமாம் இரண்டு சங்கை முளைத்தன பறித்திடீரே 6

6. குருதேவா! தாங்கள் தத்துவ விளக்கப் படலத்தின் 64வது செய்யுள் முதல் 82வது செய்யுள் வரை கூறியுள்ள, தத்துவமஸி மகா வாக்கியமான ஆகமப் பிரமாணத்தால் உன் நிஜ சொரூபமான பிரமத்தை நீயாய் அறியக் கடவாய் என்று அருளிச் செய்தீர். பின் அந்தப் பிரமம் வேத வாக்கியத்துக்கு எட்டாது என்றும் அருளிச் செய்தீர். பின் மனதினால் தான் அந்த பிரமத்தை அறிய வேண்டும் என்றும், துக்கத்தோடு கூடிய மனத்திற்கு எட்டாது என்றும் சொன்னீர். இதில் அடியேனுக்கு ஏற்பட்ட சந்தேகம் யாதோ எனின், பிரம சொரூபமானது தத்துவமஸி முதலான வேத வாக்கியங்களுக்கு எட்டுமா? எட்டாதா? மனதுக்கு எட்டுமா? எட்டாதா? என்னும் மயக்கத்திற்கு இடமான இரண்டு வித சந்தேகங்கள் உண்டாயின அவற்றை நீக்கி அருள்வீராக.

மற்றை முப்பிரமாணத்தால் வஸ்து நிர்ணயம் கூடாதே
உற்றதோர் விடயம் பூதம் உபயம் அன்று ஆதலாலே
குற்றமாம் குணவிசேடம் கூடாமல் இருக்கையாலே
இற்றது வாக்குக்கு எட்டாது என்பதும் அறிவாய் நீயே 7

7. அன்பனே உனக்குண்டான இரண்டு சந்தேகங்களில் முதல் சந்தேகமான பிரமம் வாக்குக்கு எட்டாது என்பதற்குக் காரணம் கூறுகின்றேன். வேதாந்தத்தில் ஒரு பொருளை விளக்குவதற்காக நான்குவித பிரமாணங்கள் கூறப்பட்டுள்ளன. ஒரு பொருளை உணர்வதற்கு ஒப்புவமையாகக் கூறப்படுவது பிரமாணம் எனப்படும். அது சப்தத்தால் அறிவிப்பது, பிரத்தியட்சமான கண்கூடால் அறிவிப்பது, அனுமானத்தால் அறிவிப்பது, உவமானத்தால் அறிவிப்பது ஆகிய நான்கில் கண்கூடாகப் பார்ப்பது எல்லாம் அறிபடுபொருளாய் அசத்தாய்ப் போம். பிரமம் அறிபடுபொருளன்று. ஆகையால் பிரத்தியட்சப் பிரமாணத்தால் அறியக்கூடாது. அனுமானப் பிரமாணத்தால் அறியலாமோ எனின் கூடாது. புகையைக் கண்டு ஆங்கு நெருப்புண்டு என்று அறிவது அனுமானமாம். இதன்படிப் பார்த்தால் கண்டத்துவ தோஷம் வரும். பிரமம் அகண்டமாகையால் அனுமானத்தால் அறியக்கூடாது. இனி உவமானத்தால் அறியலாமோ எனின் கூடாது. தனக்குச் சமானமான மற்றொரு பொருள் இன்மையின் உவமானத்தால் அறிய முடியாது. இக்காரணத்தால், எக்குணங்களுக்கும், விசேஷங்களுக்கும் பொருந்தாமல் இருப்பதால் அந்தப் பிரமம் வாக்குக்கெட்டாது என்பதை நீ அறிவாயாக.

இதன் உள்ளுரை :- மற்றை முப்பிரமாணம் என்பதால் நான்காவதான சப்தப் பிரமாணத்தால் தான் அந்தப் பிரமத்தை அறிய வேண்டும். இதற்கு ஆகமப் பிரமாணம் என்றும் ஒரு பெயர் கூறுவர். இதை ஆறாவது கவியில் ஆகமப்பிரமாணத்தால் அறி என்று கூறினமையால், ஆகமப் பிரமாணமான தத்துவமசி மகா வாக்கியத்தால் தான் பிரம்ம நிச்சயம் செய்தல் வேண்டும். இது அடுத்த செய்யுளில் தொடரும்.

வாக்கியம் தனக்கு எட்டாது வஸ்து என்று உரைத்த வேதம்
வாக்கிய விருத்தியால் அவ்வஸ்துவைக் காட்டிற்று அன்றோ
வாக்கியங்களிலே மானமாவது ஏது என்றாயாகில்
வாக்கியம் இரண்டும் மெய்யே மறைகள் பொய்யாது கேளாய் 8

8. அன்பனே! பிரமம் வாக்குக்கு எட்டாது என்று கூறிய வேதம் மகா வாக்கியத்தின் லட்சணா விருத்தியால் அந்தப் பிரமத்தை காட்டியிருக்கிறது. லட்சணா விருத்தி என்பதும், பாகத்தியாக லட்சணை என்பதும் ஒன்றேயாம்.

த்வம் பத வாச்சியார்த்தத்தை நேதி செய்யக் கூடிய லட்சணா விருத்தியால்தான் பிரம்ம நிச்சயம் செய்தல் வேண்டும். இவ்வாறாக பிரமம் வாக்குக்கு எட்டும், எட்டாது என்று கூறும் இரண்டு வாக்கியத்தில் நாம் அங்கீகரிக்கத் தக்கது எதுவெனின் இரண்டு வாக்கியமும் உண்மைதான். வேதம் பொய் சொல்லாது. இது அடுத்த செய்யுளில் தொடரும்.

தன்பதி அல்லாப் பேர்கள்தமை அல்லன் அல்லன் என்றாள்
அன்பனைக் கேட்ட நேரம் அவள் வெட்கி மௌனமானாள்
என்பது போல நீக்கி இதுஅன்று இதுஅன்று எனச்சேடித்த
பின் பரப்பிரமம் தன்னைப் பேசாமல் காட்டும் வேதம் 9

9. அன்பனே! இந்த இரண்டு வாக்கியங்களும் பொருந்துமாறு ஒரு உதாரணம் கூறுகின்றேன் கேட்பாய். ஓரிடத்தில் திருமணம் நடந்தபின் இரண்டு மணமக்களும் இருந்த ஒரு கூட்டத்தில் மணமகளுடைய தோழியானவள் அக்கூட்டத்தில் இருப்பவர்களைச் சுட்டிக்காட்டி அவன்தான் உன் கணவனா? இவன்தான் உன் கணவனா? என்று கேட்ட பொழுது அல்ல, அல்ல என்றே கூறிக்கொண்டே வந்தாள். முடிவில் கணவனைக் காட்டி கேட்ட பொழுது அவள் வெட்கி மௌனமானாள். இந்த உதாரணத்தைப் போல் வேதமும், ஸ்தூல சரீர தத்துவம் ஆறும் நீயா? சூட்சும சரீர தத்துவம் இருபதும் நீயா? அவித்தை, ஜீவன் ஆகிய ஒவ்வொன்றும் நீயா? என்று நேதி செய்து பின் முடிவில் 29வது ஆன கூடஸ்தனைப் பற்றிக் கேட்கிறபோது வேதம் மௌனமாய் விட்டது. இதனால் கூடஸ்தனே பிரமம்; பிரமமே கூடஸ்தன் என்பது பொருள். இதை அறிவிப்பதற்காக ஜட பதார்த்தங்களை எல்லாம் நேதி செய்த பின், எஞ்சி நின்ற அறிவே பிரமம் என்று வேதம் கூறாமல் கூறிற்று.

முந்திய சங்கைதீர மொழிந்ததை அறிந்து கொள்வாய்
பிந்திய சங்கைதீரப் பேசும் உத்தரம் நீ கேளாய்
இந்தியங்களுக்கு இராசன் இதயமாம் அதின் எண்ணங்கள்
புந்தியும் மனமும் என்றே புறத்து அகத்து உலாவி ஆடும் 10

10. அன்பனே! வாக்குக்கு பிரமம் எட்டுமா? எட்டாதா? என்ற உன் முதற்கேள்விக்கு பதில் கூறினேன். இனி இரண்டாவது கேள்வியான மனதிற்கு பிரமம் எட்டுமா? எட்டாதா? என்பதற்கும் பதில் கூறுகின்றேன்

கேட்பாயாக. அன்பனே நீ முன்னதாக மனதின் சொரூபம் இத்தகையது என்று தெரிந்து கொண்டால்தான் எட்டும் எட்டாது என்பதைப் பற்றி நிச்சயம் செய்தல் கூடும். ஆகையால் பின்வரும் இரண்டு கவியால் மனதின் சொரூபத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக. சகல இந்திரியங் களுக்கும் இராஜன் ஆத்மாவாகும். அதனுடைய எண்ணங்கள் புத்தியென்றும், மனமென்றும் சொல்லப்படும். அதுதான் உள்ளிலும், வெளியிலும் கூத்தாடா நிற்கும். இதில் வரும் எட்டும் எட்டாது என்பதற்கு முடிவு அடுத்த 14வது கவியில் காணலாம்.

உன் முகம்போல் கண்ணாடிக்குள் ஒருமுகம் கண்டாற்போல
சின்மய வடிவின் சாயை சித்துப்போல் புத்தி தோன்றும்
நின்மனோ விருத்தி அந்த நிழல்வழியாய் உலாவும்
தன்ம நன்மகனே இத்தைத்தான் அன்றோ ஞானம் என்பார் 11

11. அன்பனே! எண்ணங்களாகிய ஜீவத்வமும் இவ்வாறே. ஒரு கண்ணாடியில் பார்க்கும் போது அதில் தன் பிரதி பிம்பமுகம் தோன்றுவது போல் சித்து வடிவமான ஆத்மாவின் பிரதிபிம்பமும் அந்தக் கரணத்தில் மற்றொரு சித்தைப்போல் தோன்றும். அப்போது நான் எனது என்ற விருத்தியுண்டாகும். அந்த விருத்தியும் அந்தக்கரணமும் ஒன்றாகச் சேர்ந்து வெளிப்பட்டு விஷயங்களைச் சென்று பற்றும். உத்தம சிஷ்யனே! இவ்வாறு சென்று பற்றுகின்ற எண்ணங்களுக்குத் தான் விருத்தி ஞானம் என்று பெயர் கூறுவர் பெரியோர்கள்.

இதன் உள்ளுரை :- நினைத்தல், ஸ்மரித்தல், எண்ணுதல் இவை ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள். ஒன்றை நினைக்கும் செயல் ஜடவஸ்துக்களுக்கு இல்லை. எங்கு சேதனம் உண்டோ? அங்கு தான் ஒன்றை நினைக்க முடியும். எனவே புத்தியில் பிரதிபிம்பித்த ஆத்மாவின் சாயையே சிதாபாச ஜீவனாம். இந்த ஜீவனே கர்த்தா போக்தாவாம். நான் எனது என்று அபிமானிப்பதுவும் இதுவேயாம்.

உருக்கிய தராநீர் நாநா உருவங்கள் ஆனாற்போல
விருத்திகள் கடபடாதி விடயமாய்ப் பரிணமிக்கும்
அருப்பல விடயமெல்லாம் ஆபாசன் தோற்றுவிக்கும்
இருட்டினில் விளக்கும் கண்ணும் இல்லாமல் பொருள் காணாதே 12

12. அன்பனே! இவ்வாறு தோன்றிய விருத்தியின் பரிணாமம் எவ்வாறாகுமென்னில், மூசையில் இட்டு உலையில் வைத்து உருக்கிய பஞ்சலோகங்களின் தரா நீர் ஆனது, பல அச்சுக் கருவிகளில் வார்க்கப்

பட்டபோது அச்சுருவம் எப்படி எப்படி இருக்கின்றதோ, அப்படி அப்படி அந்த நீர் உருவம் பெறுகின்றது. அதுபோல் இந்த விருத்திகள் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றி அதன் அதன் வடிவமாகின்றன. இங்ஙனம் பல விஷயங்களை இந்த ஆபாச ஜீவன் தோற்றி வைக்கும். எங்ஙனமெனின் இருட்டில் உள்ள பதார்த்தங்களை அறிவதற்கு விளக்கு ஒளியும் கண்ணும் வேண்டும்.

எரிகின்ற விளக்கால் கண்ணால் இருட்பொருள் காணல் வேண்டும்
தெரிகின்ற பரிதி காணச் சென்றிடின் கண்ணே போதும்
விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்
புரிகின்ற விருத்தியொன்றே போதும் மெய்ப்பொருள் காண்போர்க்கே 13

13. அன்பனே! இருட்டில் உள்ள பொருள்களைக் காண வேண்டு மானால் விளக்கொளியும் கண்ணும் வேண்டும். ஆனால் சூரியனைப் பார்ப்பதற்கு கண் ஒன்றே போதும் அதுபோல் விரிந்திருக்கின்ற இந்த உலகை அறிவதற்கு விருத்தி ஞானமும், சிதாபாசனும் ஆகிய இரண்டும் வேண்டும். ஆனால் ஆத்மாவை பிரம ரூபமாக அறிவதற்கு விசாரரூப விருத்தி ஒன்றே போதுமானது. சிதாபாசன் வேண்டுவதில்லை.

விருத்தியும் பலமும் கூடும் விகாரமே மனம் என்பார்கள்
கருத்தெழும் விருத்தி வேண்டும் கணக்கினால் மனத்திற்கு எட்டும்
வருத்திய பலமாம் இந்த மனத்திற்கு எட்டாது கண்டாய்
அருத்தம் இப்படியென்று ஐயம் அகன்று நீ தெளிந்திடாயே 14

14. அன்பனே! அந்தக்கரணத்தின் விருத்தியும் சிதாபாசனும் சேர்ந்த பரிணாமமே அதாவது கூட்டுறவே மனமென்று சொல்லப்படும். சற்குரு கிருபையாலும், வேதாந்த சாஸ்திர பாடத்தாலும், அந்தக் கரணத்தில் உண்டாகும் அகம் பிரம்மாகார விருத்திக்கு எட்டும். சிதாபாசனோடு கூடிய மனதிற்கு எட்டாது என அறிவாய். அதாவது வேதாந்த விசாரம் செய்யும் மனதிற்கு எட்டும் என்றும் அங்ஙனம் செய்யாத மனதிற்கு எட்டாது என்றும் அறிக. அன்பனே நீ இந்தப் படலம் 6வது கவியில் பிரமம் மனோவாக்குக்கு எட்டுமா? எட்டாதா? என்று வினாவிய வினாவிற்கு விடையளித்து விட்டேன்.

வஞ்சகம்இல் பரமார்த்த குருவே சொன்ன
வழிகள் அறிந்தேன் இனி ஓர்வசனம் கேளீர்
சஞ்சலமற்று அகண்ட பூரணமாய்ச் சித்தம்
ததாகாரம் ஆவதன்றோ சமாதி யோகம்
உஞ்சலை ஒத்து அலைவது தன்சுபாவமாகி
ஒருகணத்தில் பலவுலகாய் உதிக்கும் இந்த
நெஞ்சகம் வஸ்துவில் அசையா நிவாத தீப
நிலையடைவது எப்படியோ நீர் சொல்வீரே 15

15. குருதேவா! தாங்கள் எனக்கு ஒன்றும் மறைக்காமல் சொரூபாத்வைத சித்தாந்தத்தைச் சொன்ன பிரகாரம் அறிந்தேன். பிரமம் மனோவாக்குக்கு எட்டும் எட்டாது என்பதற்கு தாங்கள் சொன்ன விளக்கங்களைத் தெரிந்து கொண்டேன். மேலும் ஒரு விண்ணப்பத்தை கேட்டு அருள்வீராக. மனமானது ஒன்றினாலும் அசைவடையாமல் பிரம சொரூபமாக ஆவதல்லவா சமாதி எனப்படும். காற்றில் அகப்பட்ட இலவம் பஞ்சுபோல் ஒரு கணத்தில் பல உலகாகார வடிவமாகிப் பரிணமிக்கும் சுபாவமுடைய இந்த மனமானது காற்றில்லாத இடத்து விளக்குப்போல பிரமத்தில் அசைவற நிலை பெறுவது எப்படியோ? அருள்வீராக.

கருது மனோகுணம் மூன்றாம் மூன்றில் ஒன்று
கதித்தெழுந்தால் மற்ற இரண்டும் கரந்து நிற்கும்
தருமமிகும் சத்துவம் மேலானபோது
சன்மார்க்கமான தெய்வ சம்பத்து உண்டாம்
மருவு இரசோகுணமாகில் உலக தேக
வாதனையாம் சாத்திர வாதனையுமாகும்
அருமகனே தமோகுணம் மேலான போதில்
அசுர சம்பத்து உண்டாகும் அறிந்து கொள்ளே 16

16. அன்பனே! உன்னுடைய வினாவிற்கு விடையளிக்கின்றேன் கேட்பாயாக. மனமானது மூன்று குணத்தின் வசப்பட்டு நிற்கும். அந்த மூன்றில், ஒன்று மேல் ஓங்கி நின்றால், மற்ற இரண்டும் கீழ் அடங்கி நிற்கும். இதில் சத்துவ குணம் மேல் அதிகரித்தால் நன்மார்க்கமும்,

ஆத்மஞான விசாரமும், சற்குணங்களுமான தெய்வ சம்பத்து உண்டாகும். ரஜோகுணம் அதிகரித்தபோது உலக வாசனையும், தேக வாசனையும், கர்மகாண்ட, பக்திகாண்ட சாஸ்திர வாசனைகளும் ஆகிய மூன்றும் உண்டாகும். தமோ குணம் அதிகரித்தபோது மேற்கூறிய ஆத்ம ஞானத்திற்கு எதிர்மறை துர்க்குணங்களான அசுர சம்பத்து உண்டாகும். இதை நீ தெரிந்து கொள்ளுவாயாக.

மனது சத்துவ சொரூபம் மற்ற இரண்டும்
வந்து கலந்தன அவற்றை மாற்றினால் போம்
தனது சன்மார்க்கத்தை விடாது இருந்தபோது
தமோகுணமும் ரசோகுணமும் சமிக்கும் பின்னைக்
கனபரிணாமம் சலனம்போம் போனக்கால்
களங்கமற்று நின்ற ஆகாசம் போலும்
நினதுளம் அப்படியாம் அப்பிரமத்து ஒன்றாய்
நிருவிகற்ப சமாதியிலே நிற்கும்தானே 17

17. அன்பனே! மனமானது சத்துவ குணத்தில் தோன்றினபடியால் அதற்கு இயற்கையில் நற்குணமே சுபாவமாம். மற்ற இரண்டு குணங் களான ரஜோ, தமோ குணங்கள் இடையில் வந்து இந்த மனதோடு கலந்தது. அவ்விரண்டையும் உனது முயற்சியினால் நீக்கினால் போய் விடும். இங்ஙனம் இரண்டு குணங்களும் போனால் இந்த மனதிற்கு உண்டான சலனம் போய்விடும். போய்விடுமானால் களங்கமற்று தெளிந்த ஆகாயம் போல், உனது இயற்கை வடிவான சத்துவகுண மனமானது அந்த பிரமத்தோடு ஒன்றி நிர்விகல்ப சமாதியில் நிற்கும். இதில் நிர்விகல்ப சமாதியின் விளக்கம் அடுத்த கவியின் உள்ளுரையில் காணலாம்.

களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர்
களங்கமற்ற கண்ணாடி காட்டும்போது
விளங்கி அதன்மயமாகி அபேதமாகி
விகற்பமின்றி நிருவிகற்பம் ஆனாற்போல
அளந்து அறியப்படா விபுவாய்ச் சத்தாய்ச் சித்தாய்
ஆனந்தமாம் பிரமத்து ஐக்கியமான
உளம் தெளிந்தபடி இருந்தால் உலகமெங்கே
உலைவெங்கே என்று சங்கை ஒழித்திடாயே 18

18. அன்பனே! இந்த மனமானது பிரமத்தை அடைவதற்கு மேலும் வழி சொல்லுகின்றேன் கேட்பாய். நேருக்கு நேராக இரண்டு கண்ணாடியைக் காட்டுகின்ற போது இரண்டுக்கும் இடைவெளியில் என்ன இருக்கின்றது? பரிசுத்தமாய் இருக்கின்றல்லவா? அதுபோல், சற்குரு முன்னிலையில், தத்துவமசி மகாவாக்கிய விசாரத்தால் நானே பிரமம்; பிரமமே நான் என்று ஐயந்திரிபற தெளிந்தபடி இருந்தால் பின் மனம் ஜகத்தாகப் பரிணமித்தல் ஏது, ஓயாமல் சலித்தல் ஏது என்று உன் ஐயம் நீக்கக் கடவாய்.

இதன் உள்ளுரை :- இதற்கு முன் கவியில் நிர்விகற்ப சமாதியில் நிற்கும் என்று கூறியதில் மனம் அசைவற்று நிற்கும் என்பது பொருளன்று. பின் யாது பொருளோ எனின், நான் பிரம சொரூபன் என்ற உறுதியில் நிற்கும் எனக் கொள்க. இந்த உறுதிப்பாடோடு சகல விவகாரமும் கூடும். இதை விடுத்து மனம் அத்தியந்தம் அடங்க வேண்டும் என்று விசார சாகரத்தின் ஏழாம் தரங்கத்தில் மத்திம அதிகாரியானவன் கூறியபோது அதைக் கேட்டிருந்த உத்தம அதிகாரியானவன் இவர்கள் பைத்தியம் பிடித்தவர் போல் உளறுகிறார்கள் என்று சிரித்தான் என விசார சாகரம் கூறியிருப்பதால் மனத்தே சத்துவ குணத்தோடும், பிரம்ம நிச்சயத்தோடும் உனக்குரிய விவகாரத்தை செய்வாய். இக்காரணம் பற்றியே இந்நூலாசிரியரும் அடுத்த கவியில் "தெளிந்ததன்றோ முத்திதானே" என்று கூறியிருப்பதால் அறியலாம்.

ஏகமாய் மனம் இறந்தால் சீவன்முத்தர்
இருக்கும் மட்டும் பிராரத்தம் எதினால் உண்பார்
போகமானது புசித்துத் தொலைப்பதன்றே
புசிப்பதென்றால் மனம் தானும் போனதன்றே
சோகமாம் மனம் இறந்தால் போகமில்லை
தோன்றுமெனின் முத்தரென்று சொலக்கூடாதே
மோகமாம் இதுதெளியக் குருவே நன்றா
மொழிந்தருள்வாய் தெளிந்ததன்றோ முத்திதானே 19

19. குருதேவா! அடியேனுக்கு பின்வருமாறு சந்தேகம் தோன்றுகின்றது. அதாவது, பிரமத்தோடு ஏகமாய் மனம் கலந்தால் ஜீவன் முத்தர்கள் தேகம் உள்ள பரியந்தம் பிராரத்துவ கர்மத்தின்

பலனாகிய போகங்களை அனுபவித்தே தீர வேண்டுமல்லவா? இங்ஙனம் அனுபவிக்குமானால் அப்போது மனம் அடங்கவில்லையே. துன்பத்தைக் கொடுக்கும் மனம் அடங்காமல் அவனுக்கு போகானுபவம் இல்லையே. மனம் அடங்கினால் தோன்றினால் முத்தன் என்று சொல்லக் கூடாதே. மயக்கத்திற்கு ஏதுவான இந்த சந்தேகங்களை நீக்கி உபதேசித்தருள வேண்டும். தன்னை பிரம சொரூபனென்று தெளிந்ததல்லவா ஜீவன் முக்தி.

மனநாசம் சொரூபம் என்றும் அரூபம் என்றும்
வகுத்துரைப்பார் இருவகையா வரும் இவற்றில்
வினவாத சீவன் முத்தரிடத்தில் ஒன்றும்
விதேக முத்தரிடத்தில் ஒன்றும் மேவும் கண்டாய்
தனதான சத்துவமாய் மனம் சேடித்துத்
தமசு ரசசுகள் நசித்தல் சொரூபநாசம்
அனகா சத்துவம்தானும் இலிங்க தேகம்
அடங்கும் போது அடங்குதலே அரூபநாசம் 20

20. அன்பனே! உன் வினாவிற்கு விடையளிக்கின்றேன். மனோ நாசம் இரண்டு விதம் என்று சொல்லுவார்கள். ஒன்று சொரூப நாசம், மற்றொன்று அரூப நாசம். இவற்றில் தன்னை பிரம்ம சொரூபமாக ஐயந்திரிபற தெளிந்த ஜீவன் முத்தனிடத்தில் ஒன்றும், விதேக முத்தனிடத்தில் ஒன்றும் பொருந்தியிருக்கும். இந்த இரண்டில் ஜீவன் முத்தனிடத்தில் மனம் அரூபமாயிருக்கும். அதாவது சத்துவகுண வடிவமாயிருக்கும். விதேக முக்தரிடத்தில் அந்த அரூபமனமும் நாசமாய்ப் போகும். இதில் முக்குணத்தோடு கூடிய மனம் உருவமனம் எனப்படும். அது எல்லோரிடத்திலும் இருக்கும். இந்த முக்குணத்தில் ரஜோ, தமோ குணங்கள் நசித்து சத்துவ குணமாகி சேஷித்த மனம் அருவமனம் எனப்படும். அது ஜீவன் முத்தரிடத்தில் இருக்கும். விதேக முத்தரிடத்தில் அதுவும் இராது. ஏன் எனில் அவனுக்கு சூட்சும சரீரம் லயமாய்ப் போனபடியால் சத்துவ குணமனமும் போய் விடுகிறது. இங்கே விதேக முத்தனுக்கு சூட்சும சரீரம் லயமாய்ப் போனபடியால் சத்துவகுண மனமும் லயமாய் விட்டது என்று கூறியிருப்பதன் பொருள் ஜீவன் முத்தனது ஸ்தூல சரீரம் காலத்தால் பிணமாய்ப் போனபின், விதேக

முத்தியை ஒப்புக்கொள்ளும் அபிப்பிராயத்தைத் தழுவிக் கூறியதாம். ஏனெனின் ஜீவன் முத்தனுக்கு தன் திருஷ்டியில் தேகம் இல்லை. பிறருடைய திருஷ்டியில் அவனுக்கு தேகம் உண்டு. எனவே ஜீவன் முத்தனை விதேக முத்தன் எனக்கூறுவது பொருந்தும்.

சுத்தமாம் சத்துவமே உண்மையாகும் துகள் இருள்
போனால் மனமென் சொல்லும் போம்போம்
வர்த்தமானத்தில் வந்த உணவை உண்பார்
வருவதும் போவதும் நினைந்து மகிழார் வாடார்
கர்த்தராம் அகந்தையை விட்டு அகர்த்தராகிக்
கரண விருத்திகள் அவத்தை காண்பாராகி
முத்தராய் இருக்கலும்ஆம் புசிப்பும் கூடும்
முட்டிலை என்று அறிந்து சங்கை மோசிப்பாயே 21

21. அன்பனே! சுத்தமான சத்துவ குணமே உண்மையாகும். ரஜோ, தமோ குணங்கள் போனால் மனம் என்கின்ற சொல்லும் போகும். போனக்கால் இந்த ஜீவன் முத்தர்களின் நிலை எவ்வாறாகும் எனில், நிகழ்காலத்தில் கிடைத்த உணவை உண்பார்கள். வருங்காலத்தில் வருவதையும், போவதையும் நினைத்து மகிழ்ச்சியும் வாட்டமும் அடைய மாட்டார்கள். தேகத்தைத் தான் எனக்கருதும் கர்த்தாத் தன்மையை எல்லாம் கருவி கரணாதிகளின் செயல் நான் ஒன்றும் செய்யவில்லை என்ற அகர்த்தா தன்மை உடையவர்கள் ஆகி, அந்தக்கரணங்களின் செயல்களுக்கும், மூன்றவஸ்தைகளுக்கும் சாட்சியாகி முக்தராய் இருப்பார்கள். மேலும் பிராரத்துவ கர்மப்படி போக போக்கியமும் கூடும். இதற்குத் தடையாதொன்றும் இல்லையென அறிந்து சந்தேகத்தை ஒழிப்பாய்.

விவகார வேளை எல்லாம் சமாதி என்றால்
விகற்பமன்றோ மனம் அலைந்து விடாதோ விட்டால்
அவதானம் நழுவுமன்றோ என்றாயாகில்
அதற்கொரு திட்டாந்தம் கேள் ஆசைகொண்டு
நவமாகப் பரபுருடன் தன்னைக் கூடி
நயந்த சுகம் அனுபவித்த நாரி நெஞ்சம்
தவமான மனைத் தொழில்கள் செய்யும் போதும்
தழுவி அனுபவித்த சுகம்தனை விடாதே 22

22. குருதேவா! ஜீவன் முத்தர்கள் சத்துவகுண மனத்தோடு பிராரத்துவ கர்மங்களின் பயன்களை அனுபவிக்கும் நேரத்தில், தான் பிரம்மம் என்னும் நிச்சயமாகிய சமாதியும் ஒரே காலத்தில் எங்ஙனம் கூடும். கூடுமானால் மனம் விஷயமாகிய ஆசா பாசத்தில் விழுந்து அலையாதோ? அங்ஙனம் அலையுமானால் முடிவில் நான் பிரம்மம் என்னும் நிச்சயம் நழுவி விடுமே. இந்த சந்தேகம் அடியேனுக்கு உண்டாகிறது. அன்பனே! அதற்கு விடையளிக்கின்றேன் கேட்பாயாக. ஒரு பரபுருஷனுடன் சுகத்தை அனுபவித்த நாரியின் மனம், தவம் செய்வதற்கு ஏதுவான குடும்ப விவகாரங்களை செய்யும்போதும் முன் தழுவி அனுபவித்த சுகத்தை மறவாமல் இருப்பதைப் போல், ஞானியும் தன்னை பிரம்ம சொரூபன் என்பதை மறவாமல் இருப்பான்.

இதன் உள்ளுரை :- இதில் சமாதி என்று வரும் இடங்களில் எல்லாம் அறிவு சொரூபநிலை எனப்பொருள் கொள்க. வேதாந்த விசாரத்தால் பிரமம் சொரூபம் நாமே என திடமாகத் துணிந்தவர்கள் உலக விவகாரத்தை செய்யும் போதும் அந்த நிச்சயம் மறவாமல் இருப்பார்கள் என்பதாயிற்று. ஆகுமானால் சிலர் மனமானது சரீரத்திற்குள் சென்று பிரம்மத்துடன் கலந்து அல்லது பிரம்மத்தைப் பார்த்தபின் வெளியில் வந்து விவகரிக்கும். அந்த பிரம்மத்தை பார்த்ததனால் அல்லது கலந்ததனால் அதை மறவாமல் இருப்பார்கள் என்று இந்த கவிக்கு அர்த்தம் கூறுகிறார்கள். அது பொருந்தாது. ஏனெனில் இவர்கள் தன் சொரூபத்தை தனக்கு அறிபடு பொருளாய்க் கண்டார்களா? அல்லது அறிபடு பொருள் ஆகாமல் தன்னை கண்டார்களா? அறிபடு பொருளாய்க் கண்டார்கள் எனின் அறிபடு பொருள் அசத்தென்று முன்னமே கூறினோம். இனி தன்னைத்தான் கண்டார்கள் எனின் தன்னைப் பற்றுதல் என்னும் கிரியைக்கு கர்த்தாவும், கருமமும் (பற்றப் படுபொருள்) தானே ஆதல் ஆத்மாஸ்ரய தோஷமாம். குயவன் குடமாகாதது போல் செயப்படு பொருளும், செய்பவனும் ஒன்றாகாது. இதுபோல் தானே தனக்கு அறிபடு பொருளாயிடுதல் வேதவிரோதமாம். இது நிற்க ஜீவன் முக்தனுக்கு விவகாரம் உடன்பாடா? அன்றா என்பதைப் பற்றி சிறிது ஆராய்வோம். விசாரசாகரம் ஆறாந்தரங்கத்தில் திடபோதம் எவனுக்குண்டாயி ருக்கிறதோ, அவனுக்கு சமாதியும், விவகாரமும் ஒன்றே. ஆகையால் அந்தக்கரணம் நிச்சலமாயிருக்கும் பொருட்டு ஞானி யாதொரு பிரயத் தனமும் செய்ய வேண்டியதில்லை. ஏன் எனின் அந்தக்கரணம் நிச்சலமாய் இருப்பதால் மட்டுமே பிர்மானந்தம் விசேஷமாய் விளங்காது. நான் சச்சிதானந்தமாம் இருக்கின்றேன் என்பது விசேஷத்திற்கு

பொருளாம். ஆகையால் அகம் பிரம்மாகார விருத்தியினால் தான் ஆனந்தம் விளங்கும்; மனம் அடங்குவதால் விளங்காது. இந்த பிரம்மாகார விர்த்தி வேதாந்த விசாரத்தால் உண்டாகுமே ஒழிய உபாசனையாலும், ஏனைய அப்பியாசத்தாலும் உண்டாகாது. அந்தக் கரணத்தின் சஞ்சல சுபாவமும் வேதாந்த விசாரத்தால் நீங்கிவிடும் என்றார். மேலும் நாலாம் தரங்கத்தில் "விஷய சம்பந்தத்தால் உண்டாகும் ஆனந்தம் தன் சொரூபானந்தத்திற்கு வேறல்ல என்று ஞானி அறிகிறான். இதனால் விஷய போகத்திலும் ஞானிக்கு சமாதியே சித்திக்கின்றது. அஞ்ஞானியோ தன் சொரூபம் ஆனந்தம் என்று அறிகிறதில்லை. மாறுதலாக விஷயத்தில் ஆனந்தம் இருப்பதாகக் கருதி மயக்கத்தை அடைகிறான்" என்று கூறி இருப்பதால் தன் சொரூபம் அசங்கம் என்று அறிந்து திட போதத்துடன் சகல விவகாரமும் செய்வாயாக. "போதமுண்ட பிள்ளாய்" என்று திருஞான சம்பந்த சுவாமிகளுக்கு ஒரு பெயர் வழங்குவதைக் காண்க. சமாதி என்ற சொல் கேட்டதும் தான் அறிவு சொரூபன் என்ற ஞானத்தை விட்டு மனோலயத்தில் ஆழ்ந்தனர் பலர். பாவம் இவர்களை மறுக்க வேண்டி பர புருஷனை நச்சிய நாரி திருஷ்டாந்தம் கூறினார் இந்நூலாசிரியர். விசார சந்திரோதயம் 12வது பக்கத்தில் "ஐயந்திரிபற ஆத்மாவே பிரம்மமென்னும் நிச்சயம் திட அபரோட்ச பிரம்ம ஞானமாம்" என்றும், உத்தரகீதை 2ம் அத்தியாயம் 48வது சுலோகத்தில், "எவன் வேதாந்த சாஸ்திரங்களைக் கேட்டும், ஓதியும் நான் பிரம்மமென்று அறிய வில்லையோ அவனுக்கு படித்த பிரயாசை மட்டும் தான் பலன்" என்றும், சிவஞான வள்ளலார், "நான் பிரம்மம் எனும் ஞானம் ஞானிகள் பால் உளவாகும்" என்றும் கூறியிருப்பதால் நான் பிரம்மமென்ற நிச்சயமே போதும். மனம் பிரம்மத்தில் லயமாக வேண்டியதில்லை. மேலும் மனம் பிரம்மத்தில் கலப்பது தனக்கு அறிந்தா அறியாமலா? அறிந்து கலந்தது எனின் பிரமம் அறிபடு பொருளாயிற்று. அறிபடு பொருள் அசத்து என்பது முன்னமே கூறினோம். இனி அறியாமல் கலந்தது எனின் கலந்தது தனக்கு தெரியாது என்று ஆயிற்று. அப்போது கலந்தது பொய்யாம். ஆகையால் கலக்க வேண்டும் என்ற பிராந்தியை விட்டு ஜீவன் முக்தி நிலையில் இருந்து கொண்டு உலக உபகார விவகாரம் செய்வாய். மேலும் ஞானவாசிட்டம் வீரசுப்பையா சுவாமிகள் உரை 1079ம் பக்கம் அர்ச்சுனன் பகவானை நோக்கி "ஹே! பகவன்! சமாதி பழக வேண்டும் என்று தாங்கள் ஏன் கூறுகின்றீர்? ஹே! அர்ச்சுனா! பிரம்மத்தை தன் சொரூபமாக உணர்ந்தவன். எப்போதும் சமாதியில் இருப்பவனாயும், விவகரிப்பவனாயும் என் வடிவனாவன்." எனவே ஞானிக்கு எப்பொழுதும் சமாதியாம் என்பது கருத்து என்று கூறியிருப்பதால் சமாதியோடு விவகாரம் செய்வாயாக.

தேகத்தன் அலனாகி அகர்த்தனாகிச்
சீவனின்றிப் பிரமமாய்த் தெளிந்த முத்தன்
போகத்தை உண்பன் என்றால் கர்த்தாவாமே
பூரணமாம் அகர்த்தனுக்குப் போகமுண்டோ
சோகத்தை அறுத்தருளும் குருவே இந்தத்
துகளறுக்க வேண்டும் என்று சொன்னாயாகில்
மாகர்த்தன் மாபோகி மாத்தியாகி வகை
மூன்றாய் அவர் இருக்கும் மகிமை கேளாய் 23

23. குருதேவா! வேதாந்த விசாரம் செய்து தன்னை பிரமம் என்று தெளிவடைந்த ஜீவன் முத்தன் தேகம் தான் அல்லவென்றும், தான் அகர்த்தாவென்றும், ஜீவத்துவம் கற்பிதமென்றும், அதுவும் தான் அல்லவென்றும், தான் பிரம்மமே என்றும் ஐயந்திரிபறத் தெளிந்தபின் அவன் போக போக்கியங்களை அனுபவிப்பானானால் அவன் கர்த்தாவாமே. பரிபூரண பிரமசொரூபமாக தன்னையறிந்த ஜீவன் முத்தனுக்கு போக அனுபவம் கூடுமா? பிறவித் துன்பத்தை தீர்த்தருளிய குருவே இந்த சந்தேகத்தையும் நீக்கி அருள்வீர். அன்பனே! உன் வினாவிற்கு இதுமுதல் பதிமூன்று கவியினால் விடை அளிக்கின்றேன். மேற்கூறிய ஜீவன் முத்தர்கள் மூன்று விதமாய் இருப்பார்கள். அவர்களுடைய பெயர்கள் வருமாறு மாகர்த்தன், மாத்தியாகி, மாபோகி என்று மூன்று விதமாக அவர்கள் இருக்கும் பெருமையை நீ கேட்பாயாக.

செய்கையும் செய்விக்கையும் அற்று இருக்கும் காந்தச்
சிலைமலை முன் இரும்புகள் சேட்டிக்குமா போல்
செய்கையும் செய்விக்கையும் அற்று இருக்கும் என்முன்
செடமான உலகம் எலாம் சேட்டை செய்யும்
மெய்கலந்த இந்திரிய விகாரரூப
விவகார விருத்திக்கும் விருத்தி தானாய்
மெய்கலந்த சமாதிக்கும் சாட்சியே நான் வெயில்போல்
என்று உறைத்தவனே விபு மாகர்த்தன் 24

24. அன்பனே! முன்கூறிய மூவரில் மாகர்த்தனுடைய நிச்சயத்தை கூறுகின்றேன் கேட்பாயாக. ஒன்றை செய்தலும், செய்வித்தலும் இன்றி அசைவற்று இருக்கும் காந்தக்கல் மலைமுன் இரும்பு ஊசிகள் சலன மடைவது போல் செய்தல், செய்வித்தல் ஆகிய இரண்டுமின்றி அறிவு சொரூபமாயிருக்கும் என்முன் ஜடமான ஐம்பூதமும், அதன் காரியமான தேகாதிப்பிரபஞ்சமும் தனக்குதானே தொழிற்படும். உலக விவகாரத்திற்கு சூரியன் சாட்சியாயிருப்பது போல் சகல இந்திரியங் களின் தொழில்களுக்கும், அந்தக்கரணத்தின் விருத்திகளுக்கும், பிரமத்தில் பொருந்துதலான சமாதிக்கும் நான் சாட்சி மாத்திரமாய் உள்ளேன் என்ற நிச்சயம் உள்ளவனே விபு (வியாபகன்) மாகர்த்தன் ஆவான். இதில் ஜடமானவை அல்லது இந்திரியாதிகள் தாமாகவே இயங்குமோ வெனின் இயங்கும். மேற்கோள் :- நன்னூல் 454வது சூத்திர உரையில் கைப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கார்ப்பு, இனிப்பு என்னும் அறுசுவைகளும் வெம்மை, தண்மை, மென்மை, வன்மை, நொய்மை, சீர்மை, இழுமெனல், சர்ச்சரை ஆகிய இந்த எண்வகை ஊறுகளும் (ஸ்பரிசம்) உயிரல்லாத பொருள்களின் குணங்களாம் என்று கூறப்பட்டுள்ளது. எனவே, குணியான ஆத்மாவினுடையது அன்று: கீதாசாரம் 97, 98ன் பொருள் காண்பதுவும், கேட்பதுவும், போவதுவும், வருவதுவும், வாங்குவதுவும், கொடுப்பதுவும் ஆகிய இவை ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களின் தொழில்களாம். பசி தாகம் பிராண வாயுவின் தர்மமாம். அச்சம், துன்பம், ஆசை, கோபம் ஆகியவை புத்தியின் தர்மங்களாம் என்று கூறியிருப்பதால் ஆத்மா தர்மியாம். ஆதலால் ஆத்மாவாகிய தனக்கு இவை இல்லையென்று மகிழ்ந்திருப்பார்கள் இந்த ஜீவன் முத்தர்கள். மேலும் தத்துவ விளக்கப் படலம் 41வது கவியின் உள்ளுரையில் காண்பித்துள்ள பஞ்சீகரணத்தால் தோன்றிய இருபத்தைந்து தத்துவங்களும் ஜடப்பொருளின் இயக்கமேயாம். இக்காரணம் பற்றி ஜடப் பொருளின் இயக்கம் சித்தாகிய தனக்கு இல்லையென்று நிச்சயித்தவனே மாகர்த்தனாவான். மேலும் உட்கரண புறக்கரணங்கள் யாவும் குணமே ஒழிய குணி அன்றாம். குணமும் குணியும் ஒன்றெனின், குணங்கள் அழிவதுபோல் குணியும் அழியும் அன்றோ. அழியுமாயின் முதற் பொருள் இல்லாமல் போய்விடும். போமாயின் நாஸ்தீகமாம். இது சுருதி, யுக்தி, அனுபவ விரோதமாம். இக்காரணம் பற்றி குணங்கள் யாவும் அறிவான தன் சொரூபத்தில் கற்பித குணமாம். சொப்பன சாட்சியை, சொப்பனக் காட்சிகள் பாதிக்காதது போல்

கற்பித குணமான தேகேந்திரியாதிகள் யதார்த்த குணியான தன்னை பாதிக்காது என்று அறிந்தவன் மாகர்த்தன் எனப்படும் ஜீவன் முத்தனாவன். நன்னுல் சூத்திரம் 451 : "ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றினும் வேற்றுமை நயத்தின் வேறே உடல் உயிர்" என்பதன் உரையில் உயிர் சித்தாயும் உடம்பு சடமாயும் நிற்கும் என்று கூறியிருப்பதால் அறியலாம்.

அறுசுவையின் குணம் குற்றம் அசுத்தம் சுத்தம்
அபத்தியம் பத்தியம் என ஊண் ஆய்ந்திடாமல்
பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போல்
போகங்கள் புசிப்பவன் மாபோகியாகும்
சிறிது பெரிதுகள் தனது அன்னியங்கள் நன்மை
தீமைகள் சேரினும் படிகச்செயல் போல் சித்தம்
வெறிதிருக்கும் அவனே மாத்தியாகியாவான்
விரதம் இம்மூன்று உடையவரே வீடுளோரே 25

25. அன்பனே! இனி மாபோகியின் நிச்சயத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக. தாம் உட்கொள்ளும் உணவுகளின் அறுசுவையேயும் நன்மை, தீமைகளைப் பற்றியும், சுத்தம் அசுத்தத்தைப் பற்றியும், பத்தியம், அபத்தியத்தைப் பற்றியும் ஆராயாமல் பிராரத்துவக் கர்மத்தின் பலனாக தன்னைத் தேடி வந்து சேர்ந்த உணவுகளை சகித்தலோடும் காட்டுத் தீப்போல் புசிப்பவன் மாபோகியாவான். இனி மாத்தியாகியின் நிச்சயத்தையும் நீ கேட்பாயாக. சிறிது-பெரிது, தனது-பிறருடையது, நல்லது-கெட்டது ஆகிய இவைகள் வந்து சேர்ந்தாலும், ஒன்றையும் கவராத ஸ்படிகத்தின் செயல்போல், மனம் ஒன்றிலும் பற்றாதிருக்கும் அவனே மாத்தியாகியாவன். மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி ஆகிய இந்த மூன்று விரதம் அதாவது உறுதிப்பாடு உடையவர்களே ஜீவன் முத்தர்களாம்.

மெய்யும் கொண்டு பிராரத்தம்தரு விதிவழி நின்றிடவும்
உய்யும் கர்மிகளுக்கு அனுகுணமா உறுதொழில் செய்திடவும்
செய்யும் செய்கை முடிந்தவன் என்று உரை செப்புவது எப்படியோ
நையும் துன்பம் அகற்றிய குருவே நலமா அருள்வீரே 26

26. குருதேவா! பிறவித்துன்பம் மாற்றியருளிய தங்கள் திருவடிகளுக்கு அஷ்டாங்க நமஸ்காரம் செய்கின்றேன். அடியேனுக்கு இன்னும் ஒரு ஐயமுண்டு. அதையும் கேட்டு அருளுவீராக. தேகத்தோடு கூடியிருக்கும் ஜீவன் முத்தர்கள் பிராரத்துவ கர்மத்தின் பயன்களை அனுபவித்துக் கொண்டு இருக்கும்போது, மோட்சம் அடைய விரும்பும் உத்தமர்களுக்கு பாடம் சொல்லவும், உபதேசாதிகள் புரியவும் அல்லது இல்வாழ்க்கைக்குரிய தொழில்களைச் செய்து கொண்டிருக்கும் போது அவர்களை கிருத கிருத்தியன் அதாவது எல்லாம் செய்து முடிந்த ஜீவன் முத்தன் என்று எங்ஙனம் கூறமுடியும் சர்வ துக்க நிவர்த்தி அளித்த குருவே நலமாய் அருள்வீராக.

ஆடவர் செய்தொழில் மூவகையாகும் அவித்தை வசத்துறும் நாள்
ஏடணை மமதை அகந்தை உ(ள்)ளார்க்கே இகபர விவகாரம்
வீடுஅணுகுவம் எனும் இச்சையுளார்க்கே வித்தை படிப்பதெலாம்
பாடன் மிகும் தொழிலால் பலனுண்டோ பரிபூரணமானால் 27

27. ஞானபுத்திரா! உன் வினாவிற்கு விடையளிப்பேன் கேட்பாயாக. உலகத்தில் உள்ளவர்கள் செய்கின்ற தொழில்கள் மூன்றுவிதமாக இருக்கும். ஏனையவைகளை இந்த மூன்றில் அடக்கிக் கொள்க. அந்த மூன்றாவன உழவாதி, யக்ஞாதி, சிரவணாதி எனப்படும். இவற்றில் போகத்தில் இச்சையும், தேகத்தில் நான் என்னும் அபிமானமும் உடையவர்களுக்கே உழவாதி இகலோக விவகாரமாம். சொர்க்காதி போகத்தில் இச்சையுடையவர்களுக்கே யக்ஞாதி விவகாரமாம். வீட்டின்பமான மோட்சம் அடைவோம் என்னும் இச்சையுடையவர் களுக்கு சிரவண மனனாதி விவகாரமாம். பரிபூரண பிரமமே நான்; நானே பரிபூரண பிரமம் என்று ஐயந்திரிபற தன்னை உணர்ந்த ஞானி களுக்கு முன் கூறிய யக்ஞாதி, உழவாதி, சிரவணாதி ஆகிய தொழில்களால் ஒரு பயனுமில்லை.

25,26,27 கவிகளின் உள்ளுரை : விரதம் இம்மூன்று உடைய வரே வீடுள்ளோரே என்று வரையறுத்துக் கூறினமையால், ஏனைய கர்ம, பக்தி காண்டிகள் வீடெனப்படும் மோட்சம் அடைய மாட்டார்கள் என்பதாயிற்று. இக்கவிக்கு ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் அளித்த உரையில், அதாவது பக்கம் 257ல் "விரதம் இம்மூன்றுடையவரே என்னும் தேற்றேகாரத்தால் தவம், மகம், தீர்த்தம், சேவை, அர்ச்சனை, தானமாகிய புறக்கருமங்களையுடைய மற்றையர் நிரதிசயானந்த மோட்சம் அடையார் என்பது பெறப்படுகின்றது" என்று கூறியிருப்பதால்

அறியலாம். இந்த மூவர்களும் உலக உபகார கர்மங்கள் செய்ய வேண்டாவோ எனின், தனக்கு இஷ்டமிருந்தால் செய்யலாம். செய்ய வேண்டும் என்ற விதியில்லை. இதை பஞ்சதசி 743 பக்கத்தில் இந்த ஞானி பிரம்மாதி ஸ்தம்ப பரியந்தம் சகல பிராணிகளோடு தன்னையும் முத்தனாக காணுகிறவனாக இருத்தலின் அவனுடைய திருஷ்டிக்கு பந்தப்பட்டவர்கள் இன்மையால் அவனுக்கு உலகோபகார கர்மம் இல்லை. "மேலும் பகவத் கீதை 13வது அத்தியாயம் 17வது சுலோகத்தில், ஆத்ம திருப்தனாகவும், மனிதனாகவும் உள்ள அந்த ஞானிக்கு செய்ய வேண்டுவது ஒன்றுமில்லை" என்றும், பஞ்சதசி 744வது பக்கம், "இந்த ஞானி வைதீக கருமங்கள் செய்ய வேண்டாவோ எனின், அதுவும் அஞ்ஞான கற்பிதமாயிருத்தலின் பொய்யாம். ஆகையால் ஞானிக்கு விதியின்மையின் தோஷமுமில்லை" என்று கூறி இருப்பதால் ஞானிகளுக்கு விதி-விலக்கு இல்லையென அறிக.

குரவர் சிகாமணியே கேளீர் நீர் கூறின வழிஒக்கும்
பரமுடன் இகமும் இழந்தவரன்றோ பழகுவர் மெய்ஞ்ஞானம்
விரவு முயற்சியின் மீண்டவர் அதை இனி வேண்டுவரோ வேண்டார்
சிரவண மனனாதிகள் வேண்டாவோ சித்தம் உறைத்திடவே 28

28. தேசிக சிரோரத்தினமே! இன்னும் ஓர் விண்ணப்பம் உண்டு கேட்டருளுவீராக. ஜீவன் முத்தர்களுக்கு உழவாதி, யாகாதி, சிரவணாதி களால் யாதொரு பிரயோஜனமுமில்லை என்று தாங்கள் கூறியது பொருத்தமேயாகும். ஆனால் இகலோக ஆசையும், பரலோக ஆசையும் அற்றவர்களல்லவா சிரவண மனனாதியான ஞானாப்பியா சங்கள் செய்வார்கள். மேற்கூறிய உழவாதி, யக்ஞாதிகளின் பலன் ஜனன மரணத்தைக் கொடுக்குமே ஒழிய முத்தியைக் கொடுக்காது என்று எண்ணி அதை விட்டு விட்டு சிரவணாதியைக் கேட்டு ஞானாப்பியாசத்தை செய்யத் தொடங்கினவர்கள், மீண்டும் அந்த உழவாதி தொழிலை செய்வாரோ? செய்யமாட்டார்கள் அல்லவா ஆனால் அவர்கள் தன் சொரூபமான பிரமத்தில் மனம் திடம் பெறும் பொருட்டு சிரவண மனனாதிகள் செய்ய வேண்டாவோ?

கிளர்மகனே கேள் தத்துவம் அறியார் கேட்டல்செயக் கடனே
தளர்வறு சிந்தித்தலின் முயல்வார் சிலர் சந்தேகங்கள் உ(ள்)ளார்
தெளிதலில் நிற்பார் விபரீதப்பேய் தீரா வாதனையோர்
வெளியுருவாய் அறிவாய் நிறைவாயினர் வேண்டுவது ஒன்றுண்டோ 29

29. ஆத்ம சொரூபமாய் விளங்கும் சிஷ்யனே! உன் வினாவிற்கு விடையளிக்கிறேன் கேட்பாய். ஆத்மசொரூபமே தன் வாஸ்தவ சொரூபம் என்று அறியாதவர்கள் சிரவணாதி(கேட்டல்)களைச் செய்ய வேண்டும். நான் ஜீவனோ அல்லது பிரம்மமோ என சந்தேகம் உடையவர்கள் சிந்தித்தலாகிய மனனம் செய்ய வேண்டும். நான் நிச்சயமாக பிரம்மமல்ல, ஜீவனேயாம் என்னும் விபரீத புத்தி உடையவர்கள் நிதித்தியாசனம் எனப்படும் தெளிதலில் முயற்சிக்க வேண்டும். ஆனால் பரிபூரண அறிவை தன் நிஜ சொரூபமாய் அறிந்த ஜீவன் முத்தர்களுக்கு முன் கூறிய மூன்றும் வேண்டியதில்லை. ஏனெனில் நிறை பொருளே அவர்களாதலின் செய்ய வேண்டுவது ஒன்றுமில்லை. இதில் அறிவாய் நிறைவாயினர் வேண்டுவது ஒன்றுண்டோ? என்று கேட்டிருப்பதால், அறிவே வடிவாய் விளங்கும் அவர்கட்கு எக்கருமமும் செய்ய வேண்டிய கடமையில்லை. அறிவே வடிவு என்று சொல்லும் போது எந்த அறிவு என்று ஐயம் ஏற்படுமே யானால் இக்கவிக்கு ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகளின் உரை 261ம் பக்கம் "தேகேந்திரியாதிகளைக் காணும் அறிவாய்" என்று உரைத்திருப் பதால் அறிக.

ஐயா கேளீர் தத்துவ ஞானியும் அஞ்ஞானிகள் போலச்
செய்யா நின்றேன் கண்டேன் உண்டேன் சென்றேன் எனலாமோ
பொய்யாம் விபரீதங்கள் அவர்க்குப் போயின என்றீரே
மெய்யாம் பிரம விசாரம் இதுஅன்றே வெளியாய் உரையீரே 30

30. ஐயா! கேளீர். பிரம்ம ஞானிகளும் அஞ்ஞானிகளைப் போலவே நான் ஸ்நானம் செய்தேன், நான் பார்த்தேன், நான் கண்டேன், நான் கேட்டேன் என்று சொல்கிறார்களே அவர்களுக்கு ஜீவேஸ்வர ஜகத்தோற்றம் போய்விட்டதாகச் சொன்னீர்களே. அங்ஙன மாயின் பாம்பு என்ற பயம் போய் பழுதையென்று தெளிந்த பின்னரும் பாம்பு என்ற பயம் வரக்காரணம் இல்லை அல்லவா? அதுபோல நான் என்பது அத்தியாசமாம். அத்தியாசமாவது "தனது அபாவ அதிகரணத் தில் தனது அபவாசம்" (தான் இல்லாத இடத்தில் தான் தோன்றுதல் அத்தியாசம் எனப்படும்.) இதை தத்துவ விளக்கத்தின் 27வது கவியில் கூறினீர். அங்ஙனமாயின் தன் சொரூபத்தில் தேகத்தைத் தான் எனக்கொண்ட நான், கற்பனை சொரூபத்தைத் தான் எனக்கொண்ட நான் உண்மையாகும். இவ்வாறு அறிந்தவன் மீண்டும் தேகத்தைத் தான் எனக்கொண்டு நான் வந்தேன், போனேன் என்று விவகரிப்பது

பொருந்துமா? பழுதையில் பாம்பு என்ற விபரீதம் போல் தன் சொரூபத்தில் இந்த நான் என்பது விபரீதமல்லவா? அது போனபின் நான் என்பது பொருந்துமா? உண்மையான பிரம்ம விசாரத்தை வெளிப்படுத்தி அருள்வீராக.

ஓய்ந்த கனாவில் கண்ட பழங்கதை ஓதுவன் வாதனையால்
ஆய்ந்து அறிவுற்றவன் அப்படி செப்புவன் ஆபாசனும் ஆகான்
மாய்ந்த தன் உடல் வேம் அளவும் விண்ணவன் மனுடன் எனப்படுவான்
வீய்ந்த சிதாபாசன் போம் அளவும் விவகாரம் தொடரும் 31

31. அன்பனே! உன் வினாவிற்கு விடையளிக்கின்றேன் கேட்பாய். ஒருவன் தான் கண்ட கனவில் தோன்றிய பல விவகாரங்களை விழித்துக் கொண்டபின் நனவில், தான் முன் கனவில் கண்ட வினோதக் காட்சிகளை விளையாட்டாகக் கூறுவான். அங்ஙனம் கூறினாலும் தான் கண்டு அனுபவித்த கனவின் சுக துக்கங்களில் பற்றில்லாமல் வினோத மாத்திரமாய் கூறுவான் போன்று, தேகாதிப் பிரபஞ்சம் பொய்யென்றும், பிரம்மமாகிய தன் சொரூபமே வாஸ்தவமென்றும் ஐயந்திரிபறத் தெளிந்த ஜீவன்முத்தன், நனவின் வாசனையினால் நான் பார்த்தேன், கண்டேன், கேட்டேன் என்று விவகரிப்பன். அங்ஙனம் விவகரிப்பினும் அவன் ஜீவத்தன்மையுடையவனாக மாட்டான். அவன் பிரம்மமேயாம். அது எதுபோல எனின், தேவன் ஒருவன் மனிதனாகப் பிறந்து, மீண்டும் தேவனாக வேண்டி கங்கா நதியில் மூழ்கி சரீரத்தை விடுவன் ஆயினும், அவன் உடல் நாசமடையுமளவும் உலகத்தாரால் அவன் மனிதன் என்றே கூறப்படுவான். அதுபோல் தத்துவ ஞானத்தால் பிரமத்தை அறிந்த இந்த ஞானிகளையும் உலகத்தவர் மனிதன் என்றே விவகரிப்பர். இந்த ஜீவத்துவம், இறுதிவரை தொடரும்.

இதன் உள்ளுரை : ஞானி அஞ்ஞானியாகிய இருவர்களுக்கும் உலக விவகாரம் சமமாயினும், ஞானியானவன் பற்றற்று விவகரிக்கின்றான் என்பதைக் கூறுவான் தொடங்கி இக்கவியில் முடிவு கூறுகின்றார். ஓர் அரசன் தான் கண்ட கனவில் தன்னை பிச்சை ஏற்பவனாகக் கண்டேன் என்று அந்த அரசன் நனவில் கூறுவான் ஆயின், அவனுக்கு அதில் பற்று இன்றி எங்ஙனம் கூறுகின்றானோ, அங்ஙனமே இந்த ஞானியும் நான் கண்டேன், கேட்டேன், உண்டேன் என்று பற்றற்று விவகரிக்கின்றான். அதனால் இந்த ஞானி ஜீவத்தன்மை உடையவனாகிறதில்லை. அவன் எப்பொழுதும் பிரம்ம சொரூபமேயாம். இவ்வாறாயின் ஞானி அஞ்ஞானி இருவருக்கும் பேதம்

யாதோ எனின், வேதாந்த சூடாமணியின் 177வது கவியில் கண்டு தெளிக. மேலும், இக்கவியில் சிதாபாசனாகிய ஜீவத்துவம் போம் அளவும் விவகாரம் தொடரும் என்று கூறி இருப்பதில் ஜீவத்துவம் நாசமாய்ப் போகுமா? அல்லது கற்பிதமாய்ப் போகுமா? எனின் இந்நூல் தத்துவ விளக்கப்படலம் 29வது கவியில் "அநாதியாம் ஜீவரெல்லாம்" என்று கூறியிருப்பதால் அநாதிப் பொருள்களுக்கு நாசம் சொல்லக் கூடாது. உற்பத்தி நாச ரகிதமாய், தோற்ற மாத்திரமாகி விளங்கும் பொருள்கள் அநாதி எனப்படும். இதில் இந்த ஜீவத்தன்மையும் அநாதியே யாம். ஒரு பொருளை அநாதி என்று ஒப்பியபின் அதற்கு நாசம் கூறுதல் பிழையினும் பெரிய பிழையாம். பின் முடிவு யாதோவெனின், சொப்பன காட்சி முழுதும் கற்பனையும், சொப்பன சாட்சி உண்மையுமானவாறு போல, ஜீவத்வம் கற்பனையும் ஜீவசாட்சி உண்மையுமாம் என கொள்க. இந்த ஜீவசாட்சியான அறிவினிடத்தில் கானல் நீர் போல் ஜீவத்வம் தோன்றிக் கொண்டே இருக்கும் இந்தத் தோற்றத்திற்கு காலவரையறை இன்மையால் அநாதி எனப்பட்டது. இக்காரணம் பற்றி ஜீவேஸ்வர ஜகத்தோற்றம் சோபாதிகம் எனப்பட்டது. சோபாதிகமாவது பொய்யென்று அறிந்த பின்னும் தோன்றிக் கொண்டே எது உள்ளதோ அதைக் குறிக்கும். அத்தகையது கானல்நீராம். கானலில் தோன்றும் நீர்த்தோற்றம் கானலைவிட தனிப்பொருளாகுமா? ஆகாத கற்பிதத் தோற்றத்தை உயர்திணை ஆண்பால் பொருளாக்கி ஜீவன் என்று கூறுவது உலக வழக்கே ஒழிய நூல் வழக்கன்று. நூல் வழக்கு ஆகுமாயின் பாரதத்தில் வரும் கர்ணனுக்கு தோன்றிய வேடுவ ஜாதிப்பிராந்தியும் அவனைவிட வேறு ஒரு உயர்திணை ஆண்பால் பொருளாக்கி கூறவேண்டும். முடியுமா பாவம்! இதை வீரசைவ சித்தாந்த மரபில் வந்த குமாரதேவ சுவாமிகள் அருளிய அத்வைத உண்மை 78வது கவியில், "தன்னை ஜீவனெனத் திரிவாய் தான் நின்று உணர்தல் அஞ்ஞானம்" என்றும், 97வது கவியில் "இந்த ஜீவன் கற்பிதமேயன்றி வேறோர் பொருளல்ல" என்று கூறியிருப்பதாலும் அறியலாம்.

ஆனால் ஐயா குருவே காண்பது அசத்தியம் என்றாலும்
நானா விவகாரம் துயரலவோ ஞானசுகம் தருமோ
போனால் அன்றோ நன்றாம் நிட்டை பொருந்திடல் வேண்டாவோ
தானாம் நிட்டை புரிந்தால் செய்கை தவிர்ந்தவன் எப்படியோ 32

32. குருதேவா! ஞானியின் விவகாரம் விதேக முத்தி பரியந்தம் தொடரும் என்றீரே. அங்ஙனமாயின் நாநாவித விவகாரங்கள் ஞானிக்குத் துன்பத்தை கொடுக்குமேயொழிய அறிவானந்தத்தைக்

கொடுக்காதல்லவா? சகல விவகாரமும் ஒழிந்துபோனால் அல்லவா பிரம்மானந்தம் உண்டாகும். அதற்காக அவன் நன்றாக நிஷ்டை (தெளிதலில் உறுதி) சாதிக்க வேண்டாவோ? அங்ஙனம் நிஷ்டை புரிந்தால் அவன் எல்லாம் செய்து முடித்தவன் அதாவது கிருத கிருத்தியன் என்று எங்ஙனம் கூறத்தகும். இந்த சந்தேகத்தை நீக்கியருள்வீராக.

இதன் உள்ளுரை : இதில் நிஷ்டை என்று வருமிடங்களில், கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆகிய மூன்றில், தெளிதலில் உள்ள உறுதிக்கு உரிய பெயர் எனக்கொள்க. இந்தக் கருத்தை விட்டு நிஷ்டை என்பதற்கு நிர்விகல்ப சமாதிப் பழக்கம் எனப்பொருள் கொள்வாருமுளர். வேறு சிலர் மனதை உடம்புக்குள் திருப்பிச் சென்று பிரம்மத்தில் கலந்துக் கொள்வதுதான் நிஷ்டை என்றும் கூறுவர். இன்னும் சிலர் பத்மாசனம் போட்டுக்கொண்டு கைகளின் விரல்களை சின்முத்திரை பிடித்து கண்விழிகளிரண்டையும் மேலே சொருகி மரக்கட்டையைப்போல் சிறிது நேரம் இருந்துவிட்டு வெளியே வருவார்கள். என்ன செய்தீர்கள் என்று கேட்டால் நிர்விகல்ப சமாதியில் இருந்தேன் என்பார்கள். ஜீவ லட்ஷணமும் பிரம்ம லட்ஷணமும் அறியாத இவர்கள் தவப்பகடியாட்டம் ஆடுகின்றார்களே ஒழிய, தன் உண்மை சொரூபம் அறிந்தார் களில்லை பாவம் உள்ளே சென்று பிரம்மத்தைக் காணவேண்டும். நிர்விகல்ப சமாதியை அடைய வேண்டும் என்று நினைக்கின்ற நினைப்பு எதுவோ அதுவே சித்து சொரூபம். அதாவது பிரம்ம சொரூபம் என்று இவர்கள் அறியவில்லை. எக்காலத்தில் இந்த உண்மை அறிவார்களோ யாம் அறியோம். நான் என்ற சொல் சேதனம் அன்னியில் பொருந்தாது என்பதற்கு ஞானவாசிட்டம் மேற்கோள்,

அகம் அகம் என்று அனைத்து உயிரினிடத்தும் இருந்தும் அனவரதம் உரைப்பதாகி,
நிகழ்ஒளியாம் ஆத்தும தத்துவமான சொரூபத்தை நினைத்தல் செய்வாம்,
திகழ் இதயக்குகை உறையும் தேவதையை விட்டு அயலே தெய்வம் தேடல்,
மிக அரிய கவுத்துவத்தை எறிந்து சிறுமணி தேடும் வேட்கை போலாம்

என்று கூறியிருப்பதால், நான் என்று நினைப்பது சடப்பொருள் களுக்குப் பொருந்தாது. சித்திற்கே பொருந்துமென அறிக.

தெரிதரு மகனே ஆரம்பத்தொடு தீரும் விவகாரம்
உரிய தியானமும் விவகாரங்களும் உள்ளத் தொழிலன்றோ
துரிய பரம்பொருள் ஆனவர் வேறொரு தொழில் செய்வதும் உண்டோ
அரிய சமாதிகள் பழகுவனேல் அவன் ஆரூடனும் அன்றே 33

33. ஞானபுத்திரா! சிரவணாதிகள் (கேட்டலாதிகள்) ஆரம்பிக்கும் போதே புறத்திலுள்ள உழவாதி விவகாரங்கள் குறையும். ஏனெனின் தத்துவ விளக்கப் படலம் 13வது கவியில், "கைதப்பி ஓடும் மான்போல்" என்று கூறியபடி இங்கும் சிரவணாதி ஆரம்பத்தில் விவகாரம் குறைய வேண்டும். முத்திக்குரிய தியானமும் மற்றுமுள்ள விவகாரங்களும் அந்தக்கரணத்தின் தொழிலாகும். பிரமமே தன் சொரூபமாக அறிந்த ஞானிகளுக்கு லௌகீக, வைதீகமான ஒரு தொழலும் செய்ய வேண்டுவதில்லை. ஆகையால் கர்த்தத்துவ புத்தியோடு அறிவானந் தத்தை அடையவேண்டி அரிய சமாதிகள் பழகுவானானால் அவன் உண்மையுணர்ந்த ஆருட ஞானியன்று. இதில் ஆருட ஞானியென்பது "சித்சொரூபந்தானே ஜெக சொரூபமானவெல்லாம்" என்ற சொரூப சாரத்திற்கு இணங்க நாமரூபப் பிரபஞ்சத்தை பிரம்ம ரூபமாக காண்ப வனையே குறிக்கும் என்க.

உத்தம குருவே ஆரூடருமாய் ஒருதொழில் அற்றவருள்
சித்தம் அடங்கு தியானாதிகள் சிலர் செய்குவதென் என்றால்
இத்தலம் மருவும் பிராரத்தப் பிரிவு எப்படி அப்படியே
முத்தரும் வெகுவிதம் ஆகுவர் என்பது முன்னே சொன்னேனே 34

34. குருதேவா! ஆருட ஞானிகளாயினோர்கள், எல்லாம் செய்து முடித்த கிருத கிருத்தியர்கள். அவர்களுக்கு ஒருவித தொழிலும் செய்ய வேண்டும் என்ற விதியில்லை. அங்ஙனமிருக்க சிலர் மனதை அடக்க கூடிய ஜப, தப, தியான, யோகங்கள் ஏன் செய்கிறார்கள் என்ற சந்தேகம் அடியேனுக்கு ஏற்பட்டு இருக்கிறது. அன்பனே அவர்களுடைய பிராரத்துவ கர்மம் எப்படியோ அப்படி இருப்பார்கள் என்று தத்துவ விளக்க படலம் 97வது கவியில் கூறியிருப்பதை வாசித்து அறிந்து கொள்க.

நல்லவனே கேள் உலக உபகாரம் ஞானிகள் விவகாரம்
அல்லது வேறொரு பெறுபேறும் இ(ல்)லை அதனால் பிணியும் இ(ல்)லை
வல்ல சிருட்டி முதற்பல தொழிலால் வருபுண்ணிய பாவம்
எல்லவருக்கும் அனுக்கிரகம் செயும் ஈசன் அடைந்திலனே 35

35. உத்தமனே கேள்! தன்னலம் கருதாத ஞானிகள் செய்யும் விவகாரங்கள் முழுதும் உலக உபகார நிமித்தமே ஒழிய அதனால் அந்த ஞானிகள் அடையும் பயன் யாதொன்றும் இல்லை. அங்ஙனம்

விவகாரம் செய்வதனால் அவர்களுக்கு எவ்வித குறைபாடுமில்லை. எங்ஙனமெனின் சிருட்டி, திதி, சம்காரம் ஆகிய முத்தொழிலையும் செய்யும் ஈஸ்வரன் அதனால் வரும் புண்ணிய-பாப, லாப-நஷ்டத்தை அடையாதது போல், இந்த ஞானிகளும் தாம் செய்யும் உலக உபகார கர்மத்தால் வரும் புண்ணிய-பாப, லாப-நஷ்டத்தை அடைய மாட்டார்கள். முக்கியமாக உலக உபகார கர்மமென்பது வேதாந்த பாடத்தைப் போதிப்பதாகும். அங்ஙனம் ஆயின் கர்த்தத்துவ புத்தி இல்லாத ஞானிகளால் எங்ஙனம் வேதாந்த பாடம் சொல்லக்கூடும் எனின் விருப்பு, வெறுப்பு இல்லாத ஈசுவரன் ஜனங்களின் புண்ணிய பாப வசத்தால் சிருட்டியாதிகளை உண்டாக்குவது போல, சிஷ்யர்களின் புண்ணிய விசேஷத்தால் ஞானிகள் தோன்றி வேதாந்த பாடம் சொல்லக்கூடும் என்க. இதை சங்கர பகவத்பாதர் துதியில், "நாங்கள் புண்ணியம் அனைத்தும் ஒன்றாய் அங்கு புல்லென வந்து ஆண்டருளி" என்று கூறியிருப்பதால் அறிக.

ஈசனுமாய் அருவாய் உருவாகி எழுந்தருளும் குருவே
ஈசனும் ஞானியும் ஒப்பு என்றீரே எப்படி ஒப்பு என்றால்
ஈசனும் ஞானியும் மமதை அகந்தை இகந்ததினால் ஒப்பாம்
ஈசனுமாம் பலசீவருமாம் உலகெல்லாம் இவனாமே 36

36. ஜகத்துக்கு அபின்ன நிமித்த, உபாதான காரணனும், ஈசுவரனும், வியாபக சேதனனுமாகி, எனையாளும் குருவுமாகி எழுந்தருளிய ஆசாரியரே! தங்களுக்கு வணக்கம். முன்பாட்டில் ஈசுவரனும், ஞானியும் சமானமானவர்கள் என்றீர். அங்ஙனமாயின் இருவரும் எப்படி சமானம் ஆவார்கள் என்பதை அறிய விரும்புகிறேன். அன்பனே! கேட்பாயாக. இவ்விருவரும் நான், எனது என்னும் அபிமானம் இன்மையான அசங்கத் தன்மையால் சமானம் ஆவார்கள். அன்றியும் இந்த ஞானி பிரம்ம சொரூபமானதால் தன்னிடத்தில் கற்பிதமான ஜக-ஜீவ-பரமாயும், அன்றாயும் இருப்பதால், இந்த ஞானி எல்லாமாயும், அல்லவுமாயும் இருக்கிறான்.

எல்லாச் சீவரும் இவனாம் என்றீர் இவன்தான் முத்தியடைந்து
எல்லாச் சீவரும் முத்தி பெறாமல் இருப்பான் ஏன் ஐயா
எல்லாச் சீவரும் வெவ்வேறானால் இவன் எல்லாம் அலனே
எல்லாப் பொருளும் உரைத்தருள் குருவே இதை நீர் மொழியீரே 37

37. குருதேவா! அடியேனுடைய எல்லா வினாக்களுக்கும் தக்க விடை அளித்து முத்தியில் சேர்த்தீர். இன்னும் ஒரு விண்ணப்பம் உண்டு கேட்டருள்வீர். இந்த ஞானியே எல்லா ஜீவருமாவர் என்று அருளினீர். அங்ஙனமாயின் இந்த ஞானி முத்தியடைந்தால், எல்லா ஜீவர்களும் முத்தியடைய வேண்டுமே அங்ஙனம் இல்லாதிருப்பதற்கு காரணம் யாதோ? அன்றியும், எல்லா ஜீவர்களும் வேறு வேறு; இந்த ஞானியும் வேறு ஆனால், அப்போது எல்லாம் இந்த ஞானிதான் என்று முன் கூறியது பொருந்தாது அல்லவா? இந்த வினாவிற்கு விடை அளிப்பீர்.

அகம் எனும் ஆன்மா பூரணம் ஏகம் அனேகவிதம் சீவர்
அகம் எனும் அந்தக்கரண உபாதிகள் அளவிலை ஆதலினால்
சகம் முழுதும் குளிர் சந்திரன் ஏகம் சலசந்திரர் பலராம்
சகமதில் ஏரி குளம் சிறுகுழி சால் சட்டி குடம் பலவால் 38

38. அன்பனே! ஒரே சேதனம் (அறிவு), பல ஜீவர்களாகத் தோன்றுவதை ஒரு உவமானத்தால் விளக்கிக் காட்டுகிறேன். ஜகத்தைப் பிரகாசிப்பிக்கும் வானச் சந்திரன் ஒன்றேயாம். ஆனால் ஏரி, குளம், குழி, சால், சட்டி, குடம் என்னும் நீர் கொள்கலன்கள் பலவாம். இவைகளில் மேற்கூறிய சந்திரனின் பிரதிபிம்பம் பலவித ஜலசந்திரர்களாக விளங்குவது போல் ஒரே பிரம்ம சேதனம் பல அந்தக்கரணங்களில் பிரதி பிம்பித்து பல ஜீவர்களாக விளங்குகின்றது.

சட்டி குடங்களில் ஒன்று நசித்திடின் அதின்உள் சலசந்த்ரன்
ஒட்டும் முதற்சந்திரனொடு கூடும் ஒழிந்தவை கூடாவே
கட்டும் உபாதி நசித்திடு சீவன் காரண ஆன்மாவில்
கிட்டும் ஐக்கியம் உபாதி கெடாதவர் கேவலம் ஆகாரே 39

39. மேல்கூறிய சட்டி, குடம் முதலிய உபாதிகளில் ஒன்று நாசமானால், அதில் பிரதிபிம்பித்துத் தோன்றிய ஜலசந்திரன் பிம்ப சந்திரனோடு ஏகமாகும். ஏனைய சட்டி, குடங்களில் தோன்றிய ஜல சந்திரர்கள் வானச்சந்திரனோடு ஏகமாவதில்லை. அதுபோல் ஒரு அந்தக்கரணத்தில் உள்ள அஞ்ஞான உபாதி, தத்துவ ஞானத்தினால் நாசமானால், அதில் தோன்றிய ஜீவத்தன்மை தனது காரணமான பிரமத்தில் ஐக்கியமாகும். அவ்வாறு அஞ்ஞான உபாதி கெடாத ஏனைய ஜீவர்கள் தனக்கு காரணமான பிரமத்தில் ஐக்கியமாவதில்லை. அன்பனே! இந்த விடையை நீ ஆராய்ந்து அறிவாய்.

இதன் உள்ளுரை : சட்டி, குடங்களில் ஒன்று உடைந்து போனால் அதில் உள்ள ஜலசந்திரன் வானச்சந்திரனோடு சேர்வதுபோல் அல்லது ஒன்றுபோல் தோன்றுவதாக தெரிவதுபோல், தூலசரீரம் நஷ்டமானால் அதிலுள்ள ஜீவர்கள் பிரமத்தோடு ஏகமாகாதோ எனின் ஆகாது. குடத்தில் பிரதி பிம்பத்திற்கு ஏதுவான ஜலம் நஷ்டமாகவில்லை. அதுபோல் அந்தக்கரணமும், அஞ்ஞானமும் நஷ்டமாகாதவரையில் பிரமத்தோடு ஐக்கியம் கிட்டாது. இவையிரண்டும் பிரம்ம ஞானத்தாலே நாசமாக வேண்டும் இதுபற்றியன்றோ முன்படலம் 105வது கவியில் "அரிய மெய்ஞ்ஞானத் தீயால் அவித்தையாம் உடல் நீறாகும், சூட்சும சரீரம் உலையிரும்பு உண்ட நீர்போல் விபுவான சொரூபத்தில் இறந்து போமே" என்று கூறியதை இங்கு நினைவிற்கொள்ள வேண்டும். ஜலத்தைப் போன்ற அந்தக்கரணமும், அஞ்ஞானமும் இருக்கும் வரையில் ஜீவத்துவம் தோன்றிக் கொண்டே இருக்கும். இக்கவியில் கூறிய பிம்ப- பிரதிபிம்ப திருஷ்டாந்தம் உத்தம சித்தாந்தம் அன்று. பூர்வபட்சமேயாம். பேதவாதம் ஆறும், அபேத வாதம் ஐந்தும் ஆக பதினொறு வாதமும் பூர்வபட்சமெனக்கொள்க. முற்கூறிய அபேதவாதத்தில் மூன்றாவது பிம்ப-பிரதிபிம்ப திருஷ்டடாந்தமாம். ஜீவப்பிரமங்களுடைய ஐக்கியத்திற்கு இந்த பதினொன்று வாதப்படிக் கூறுவது தோஷமுடையது. இதன் விரிவை வேதாந்த சூடாமணி 125, 126 கவியில் காணலாம். இனி தோஷமில்லாத சித்தாந்த பட்சம் யாதோவெனின் கர்ணனுக்குத் தோன்றிய வேடுவ ஜாதித்தன்மை போலும், தசமனுக்கு தசமத்தன்மை தோன்றாதது போலும், மனிதனாகத் தோன்றிய இராமனுக்கு பிரமத்துவம் தோன்றாதது போலும், தோன்றிய இந்த ஜீவத்தன்மை கற்பிதம் என்று அறிந்து பிரமத்துவம் சுபாவச்சித்தமாகத் தோன்றுதலாம். மேற்கூறிய திருஷ்டாந்தத்தில் ஒன்றை எடுத்துக் கொள்வோம். பாரதத்தில் வரும் கர்ணனுக்கு தான் வேடுவ ஜாதியில் பிறந்தவன் என்ற இழிகுலப் பிராந்தி உண்டாயிற்று. அது ஆசாரியர் உபதேசத்தால் போய்விட்டது. அவனது இயற்கையான க்ஷத்திரிய குலத்தன்மை அறிந்து ஆனந்தமடைந்தான். அதுபோல் பிரமத்தின் அஞ்ஞானத்தினால் நான் ஒரு ஜீவன் என்ற பிராந்தி தோன்றுகிறது. அது குரு உபதேசத்தால் போனபின், நான் பிரம்ம சொரூபன் என்னும் ஏகான்ம ஞானம் அவனுக்கு உண்டாகின்றது. அதுவே அவனுக்கு மோட்சமாம் என்று பிரஹதாரண்யக உபநிஷதத்தின் வியாக்யா னத்தில் பாஷ்யக்காரரும், வார்த்திகக்காரரும் எழுதியிருக்கிறார்கள்.

இந்நூலாசிரியரும், "கட்டும் உபாதி நசித்திடு ஜீவன் காரண ஆன்மாவில் கிட்டும் ஐக்கியம்" என்று கூறியிருப்பதால், ஒரு அந்தக்கரணத்திலுள்ள அஞ்ஞானம் நசித்த ஜீவன் தனக்குக் காரணமான பிரமமாகவே எஞ்சிநிற்பன் எனக்கொள்க. இந்த திருஷ்டாந்தத்தை குமாரதேவ சுவாமிகள் அத்வைத உண்மை 34வது கவியில் கண்டு தெளிக.

அரைய குமாரன் புலையருடன் அணுகி மறந்தும் ஒருவரால்
அரைய குமாரனென அறியில் அஃது எப்போதும் மறவாது இத்
தரையில் ஆசான் எழுந்தருளித் தனைப்பார்த்து அது நீ என உரைக்கின்
புரையில் அதுவாம் மூவவத்தைப் பொருந்தும் பொழுதும் மறவானால்

இக்கவியால் ஜீவத்துவம் கற்பிதமென்றும், பிரமத்துவம் சுபாவ சித்தமென்றும் அறிவித்தவாறு காண்க.

இவன் அயன் மால் சிவனாகிய ஈசரொடு எப்படி ஒப்பாவன்
சிவன் முதன் மூவரும் அகில சிருட்டி திதி நாசங்கள் செய்வார்
அவர் பிறர் மதிகளும் முக்காலங்களும் அறிவார் விபுஆவார்
தவமிகு குருவே இவனுக்கு அவைபோல் சற்றும் காணேனே 40

40. குருதேவா! ஈசனும், ஞானியும் சமானம் என்று தாங்கள் கூறியதில் அடியேனுக்கு மீண்டும் ஐயம் தோன்றுகிறது. மும்மூர்த்தி களோடு இந்த ஞானிகள் எப்படி சமானம் ஆவார்கள்? மும்மூர்த்திகள் ஆக்கல், அளித்தல் முதலியவை செய்வார்கள். அன்றியும், அவர்கள் பிறருடைய புத்திகளையும், சென்ற காலம், நிகழ்காலம், வருங்காலம் ஆகிய முக்காலங்களையும் அறிவார்கள். இதனால் அவர்கள் சர்வாந்தர்யாமியும் ஆவார்கள். ஆனால் இந்த ஞானிக்கு முன்சொன்ன மகிமைகள் சற்றும் கண்டிலேன். ஆதலின் ஈசனும், ஞானியும் எப்படி ஒப்பாவர் குருமூர்த்தி!

தடத்து நீர் நிலாத்திரி ஒளி உபயமும் தழுவும் ஊர்தனைக் காக்கும்
குடத்து நீர் விளக்கினில் ஒளி இரண்டும் ஓர்குடும்பம் மாத்திரம் காக்கும்
அடுத்த மைந்தனே ஞானியும் ஈசனும் அறிவினால் பிரிவில்லை
கெடுத்த மாயையின் குணங்களால் மேலென்றும் கீழென்றும் பிரிவாமே 41

41. அன்பனே! ஈசனும், ஞானியும் சமானமாம் என்று நான் சொன்னதை நீ இன்னும் புரிந்து கொள்ளவில்லை. அதை உதாரண முகத்தால் விளக்கிக் காட்டுகின்றேன். ஒரு ஏரியில் உள்ள ஜலமும், சந்திரப் பிரகாசமும் பல ஊரைக் காக்கும் தன்மையுடையது. ஆனால் ஒரு குடத்தில் உள்ள ஜலமும், ஒரு விளக்கும் ஒரு வீட்டை மட்டும் காக்கும் தன்மையுள்ளது. அதுபோல சிஷ்யனே! தத்துவ ஞானியும், ஈசுவரனும், "நான் பிரமம்" என்னும் ஞானத்தால் பேதமில்லை. இருவர்களுடைய அறிவும் ஒன்றுதான். எனினும் சத்துவகுண மாயையில் தோன்றியவன் ஈசுவரன், ரஜோகுண மாயையில் தோன்றினவன் ஜீவன். இந்த பேதமே ஒழிய தன் உண்மை சொரூபத்தை அறிந்த ஞானிக்கும், ஈசுவரனுக்கும் மேற்கூறிய குணபேதமே ஒழிய குணியான பிரம்ம சொரூபத்தில் பேதம் இல்லை. குடஜலமும், விளக்கும் அளவில் சிறியது. ஏரியும், நிலவும் அளவில் பெரிது. ஆனால் காக்கும் தன்மை இரண்டிற்கும் ஒன்றானவாறு போல் ஞானி தன்னை அடைந்தவர்களின் அஞ்ஞானத்தைப்போக்கி முக்தியடைய செய்கின்றான். ஈசுவரனும் தன்னை அடைந்தவர்களைக் காப்பாற்றுகின்றான். எனவே ஒருமை, பன்மையான உபாதி பேதமே ஒழிய இருவருக்கும் சொரூபத்தில் பேதமில்லை.

நரரில் மன்னனைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான
சுரர்கள் மாயை வல்லவர் அணிமாதிகள் தொக்க மாதவம் மிக்கோர்
தரணி மானிடர்க்கு அவைகள் இல்லாமையால் தாழ்வுளரானாலும்
பிரமபாவனையால் இவர் அவர் எனும்பேதம் ஒன்றி(ல்)லை பாராய் 42

42. அன்பனே! நீ ஈசுவரனும், ஞானியும் எப்படி ஒப்பாவார் என்று வினாவிய வினாவிற்கு முன் கவியில் விடை அளித்தேன். இந்தக் கவியில் அதை உதாரண முகத்துடன் விளக்கி காண்பிக்கின்றேன். மனிதர்கள் என்ற முறையில் ஒரு மன்னவனும், ஒரு சித்துப் புருஷனும் சமானமாயினும், சித்தர்களுக்கு எண்வகையான சித்து மகிமையால் பேதம் இருக்கிறதல்லவா? மேலும் மும்மூர்த்திகளுக்கு அஷ்டமா சித்திகளும், சர்வஞ்ஞத்துவாதி கல்யாண குணங்களும் உண்டு. இந்த ஜீவன் முத்தர்களுக்கு அவைகள் இல்லாமையால் தாழ்வு உளரானாலும், "நான் சச்சிதானந்த நித்திய பூரணன்" என்ற பிரம பாவனையால் ஞானிக்கும், ஈசுவரனுக்கும் சற்றும் பேதம் இல்லை. அதாவது சேதனத் தன்மையில் இருவருக்கும் பேதம் இல்லை என்பது பொருள்.

முத்தி நல்கிய சற்குருவே பலமுனிகளுக்கு அணிமாதி
சித்தி பூமியில் கண்டிருக்கவும் அந்தச் செல்வம் ஈசனது என்றீர்
புத்தி ஒத்திட உரைத்தருள் என்றிடின் புகழும் ஈசனை வேண்டிப்
பத்தி செய்திடும் தவத்தினால் யோகத்தால் பலித்தது என்றறிவாயே 43

43. குருதேவா! அடியேனுக்கு மேலான அறிவை அளித்த கருணைக்கு வணக்கம். இன்னும் ஓர் விண்ணப்பம் உண்டு, கேட்டருள்வீராக. முன் கவியில் எண்வகை சித்திகளும் ஈசுவரனுடைய செல்வம் என்றீர். அங்ஙனமாயின் வியாசர், வசிட்டர் முதலிய ரிஷிபுங்கவர்களுக்கு, அந்த சித்தியின் காரணமாக சாப, அனுக்கிரக சத்திகள் காணப்படுகின்றது. இந்த சித்தர்களுக்கு அது எவ்வாறு உண்டாயிற்று என்பதை அருள்வீர். அன்பனே! கேட்பாய். மேற்கூறிய மும்மூர்த்திகளை நோக்கிச் செய்யும் தவத்தாலும், பக்தியாலும், யோகத்தாலும் அந்த எண்வகை சித்திகளும் அவர்களுக்கு உண்டாயிற்று என்று அறிவாய்.

சிவசொரூபமாம் தேசிக மூர்த்தியே சித்தி முத்தி இரண்டும்
தவமுளோர் அடைகுவர் எனில் அவர்கள்போல் சகலரும் அடைவாரே
அவர்கள் பூருவம் சித்தியும் ஞானமும் அடைந்ததும் கண்டோமே
இவர்கள் ஞானிகள் என்றால் சித்திகள் இவர்க்கி(ல்)லா வகைஏதோ 44

44. பரிபூரண ஞானமே ஓர் உருவாய் எழுந்தருளியிருக்கும் குருமூர்த்தியே! சித்திகளும், முத்திகளும் மேற்கூறிய வியாச, வசிட்டாதி முனிவர்கள் அடைந்ததாக சாஸ்திரங்களில் கூறியிருப்பதை நாம் பார்த்தோமே. ஆனால் பூமியில் இக்காலத்திலுள்ள ஞானிகளுக்கு சித்திகள் காணோமே. முற்காலத்தில் வியாசர் முதலியோர்கள் ஆற்றிய தபசின் பயனாக சித்தியும், முத்தியும் அடைந்தார்கள். இக்காலத்திலுள்ள ஞானிகளுக்கு அந்தச் சித்துமகிமை இல்லாமைக்கு காரணம் யாதோ அருள்வீராக.

காமியத் தவம் காமியம் ஒன்றையும் கருதிடாத் தவம் என்றும்
பூமியில் தவம் இருவகை சித்தியும் போதமும் தரும் மைந்தா
ஆம் இவற்றில் ஒன்று இயற்றினால் ஒன்றையே அடைகுவர் இது தீர்வை
யாமுரைத்த அவ்விரண்டையும் இயற்றினார் அன்றுள பெரியோரே 45

45. அன்பனே! உன் வினாவிற்கு இந்த இரண்டு கவியால் விடையளிக்கின்றேன் கேட்பாயாக. தனக்கு என பலனை விரும்பிச் செய்யும் புண்ணிய கருமங்களுக்கு காமிய கர்மங்கள் எனப்பெயர். பலனை விரும்பாது பிரம்மார்ப்பணமாகச் செய்யும் புண்ணிய கர்மங்களுக்கு நிஷ்காம கர்மம் எனப்பெயர். இவ்விருவகையில் காமியமாகச் செய்யும் கர்மத்தின் பயனால் எண்வகைச் சித்திகள் உண்டாகும். நிஷ்காம கர்மத்தின் பயனாக ஆத்ம ஞானம் உண்டாகும். இவற்றில் ஒன்று மட்டும் செய்தவர்கள் ஒரு பலனைத்தான் அடைவார்கள். இரண்டுவகை கர்மங்கள் செய்தவர்கள் இரண்டுவகை பலன்களும் அடைவார்கள். இது நியமமாதலின் முன்கூறிய காமிய நிஷ்காமிய மாகிய இரண்டுவகை கர்மமும் செய்தவர்கள் வியாசர், வசிட்டர் முதலானோர்கள். அதனால் அவர்களுக்கு சித்தியும், முத்தியும் உண்டாயின. இதில் புண்ணிய கர்மத்திற்கும் ஜப, தப, தியான, யோகங் களுக்கும் தவம் என்று ஒரு பெயர் இருந்தபோதிலும் உண்மையில் ஆத்மஞான விசாரத்திற்கே தவம் எனப்பெயர். இதை பஞ்சதசியில் காணலாம்.

அனக மைந்தனே முத்தி ஞானத்தையே அடைந்தனர் அல்லாமல்
சனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரோ
இனிய சித்தியை விரும்பினார் சிலர் சிலர் இரண்டையும் முயன்றார் அம்
முனிவர் சித்திகள் வினோதம் மாத்திரம் தரும் முத்தியைத் தாராவே 46

46. அன்பனே! ஜனகராஜன், மாபலிச் சக்கரவர்த்தி, பகீரதன் முதலானோர்கள் ஆத்மஞானத்தை விரும்பி பெரியவர்களிடத்தில் வேதாந்த சாஸ்திரம் பாடம் கேட்டு தன்னை உணர்ந்தார்களேயொழிய சித்திகளை விரும்பி தவம் செய்தார்களா? சிலர் சித்தியை விரும்பினார்கள். வேறு சிலர் முத்தியை விரும்பிப் பாடம் கேட்டார்கள். இன்னும் சிலர் இரண்டையும் விரும்பி முயற்சித்தார்கள். சித்திகள் வினோதம் மாத்திரம் தருமேயொழிய முத்தியைத் தராது.

இதன் உள்ளுரை : சித்து விளையாடுதல் என்ற ஒரு கோட்பாடு புராண காலத்திலிருந்து வந்துள்ளது. அந்த ஐதீகத்தையொட்டி இந்நூலாசிரியரும் காமியத்தவத்தால் சித்திகளும், நிஷ்காமியத் தவத்தால் முத்தியும் உண்டாகும் என்றார். ஒவ்வொருவரும் ஒவ்வொன்றை விரும்பினார்கள். ஆனால் ஞானவாசிட்டத்தில் வரும் ஜனகராஜன் மாபலி, பகீரதன் முதலானோர்கள் முத்தியை விரும்பி தத்தம்

குருமார்களிடத்தில் பாடம் கேட்டார்களே ஒழிய சித்திகளை விரும்பி தவம் செய்யவில்லை. இக்காரணம் பற்றி இந்த கவியில் சித்திகள் வினோத மாத்திரம் தருமேயல்லாது முத்தியைத் தராது என்று வரையறுத்துக் கூறினமையால் சித்திகள் தவப்பகடியாட்டமாம் என்பதற்கு ஐயமில்லை. சித்திகள் உண்டு என்பதற்கு புராண வரலாறைத் தவிர, யுக்தி, அனுபவங்களுக்குப் பொருந்தவில்லை. இந்த உண்மையை உணர்ந்து அன்றோ நமது தாயுமான சுவாமிகள் சித்தர்கணம் என்ற தலைப்பை கொடுத்து சித்து விளையாட்டின் பெருமையை வானளாவப் புகழ்ந்தபின் அதன் பயனை நோக்கி மக்களை ஏமாற்றும் கபடநாடகம் என்றும், அப்பிரயோஜனமானது என்றும் கருதி பாடிய பாடலை கீழே பாருங்கள். பராபரக்கண்ணி :

"சித்திநெறி கேட்டல் செகமயக்கம் சன்மமற
முத்திநெறி கேட்டல் முறைகாண் பராபரமே"

மேலும் தாயுமான சுவாமி பாடல் மெய்கண்ட விருத்தி உரையில் பக்கம் 245 கவி

"வானிலே பறக்க மண்ணிலே நுழைய வானவர் வணங்க மற்றொருவர்
ஊனிலே புகுதல் அவரவர் தங்கள் உளம்தனில் நினைந்ததும் உரைக்கப்
போனதொர் உயிரை எழுப்ப எண்சித்தி புகன்றதெலாம் கையில் வரினும்
ஞானமே இல்லையாயின் அன்னவரை நாயினும் கடையென நாடே"

என்று கூறியிருப்பதால், சிஷ்யனே! விரதம், தவம், யோகம், தியானம் முதலியவற்றால் சித்திகளை அடையலாம் என்ற மயக்கத்தை விட்டு உன் நிஜ சொரூபத்தைப் பார்.

யோகஞானமே முத்தியைத் தருமெனில் ஒழிந்த சித்திகள் வேண்டி
மோகமாய் உடல் வருந்தினார் சிலசில முத்தர்கள் ஏனென்றால்
போகமாய் வரும் பிராரத்த கர்மங்கள் புசித்தன்றோ நசித்து ஏகும்
ஆகையால் அந்தச் சித்திகள் பிராரத்தம் ஆகும் என்றறிவாயே 47

47. குருதேவா! இன்னும் ஓர் விண்ணப்பம் உண்டு கேட்டருள்வீராக. ஆத்மாவைப் பிரமம் என்றறியும் ஞானமே முத்தியைக் கொடுக்கும் என்று முன் கூறினீர். அங்ஙனமாயின் சிலர் சித்திகளை வேண்டி அரும்பாடு பட்டார்கள். தங்கள் உடலையும் வாட்டினார்கள்.

மேற்கூறிய பிரகாரம் சித்திகள் முத்தியைக் கொடுக்காது என்று அறிந்திருந்தும், ஞான வாசிட்டத்தில் வரும் பெண்மணிகளான சூடாலை முதலியவர்கள் சித்து நெறியை அடைய முயன்றார்கள். இதற்கு காரணம் யாதோ அருளிச் செய்வீர். அன்பனே! கேட்பாய் பூமியில் உள்ளவர்கள் எவராயினும் பிராரத்த கர்மத்தை அனுபவித்துத்தான் தீர்க்க வேண்டும் என்று விதியிருப்பதால், அந்த சித்திகளை அடைய முயற்சிப்பது பிராரத்துவ கர்மம் என்று அறிவாய்.

இதன் உள்ளுரை : ஆண்டான்-அடிமை என்னும் புத்தியினால் செய்யும் யாகாதி கர்மத்தினாலும், பிர்மா, விஷ்ணுவாதி தெய்வ உபாசனையாலும், இயமாதி அஷ்டாங்க யோகத்தினாலும் துவைதப் பிராந்தி அதிகரிக்குமே ஒழிய உண்மையான மோட்சம் கிட்டாது. துவம்பத வாச்சியார்த்தமான ஸ்தூல சரீராதி ஒன்பதும், தற்பத வாச்சியார்த்தமான விராட்டாதி ஒன்பதும், நேதி செய்த பின் இலட்சியார்த்தமான கூடஸ்த-பிரம்ம ஐக்கிய சொரூபமே தான் என்றறியும் அபரோக்ஷ ஞானமே மோட்சமாம். இது கர்மத்தால் வராது; விசாரத்தால் வரும் என்க. தன்னை அறியும் பிரம்ம வித்தை கர்ம காண்ட, பக்தி காண்டங்களில் இல்லை என்பதற்கு தத்துவராயர் பாடுதுறை 111வது அதிகாரத்தில் "தன்னை அறிவது கர்ம காண்டத்தில் உண்டோ" என்றும், ஆத்மாவே பிரம்மம் என்பதற்கு ஞானவாசிட்டம் "பகவானாகும் இவ்வான்மா" என்றும் கூறியிருப்பதைக் காண்க.

இலக்கம் ஆயிரம் சுருதியால் ஊகத்தால் என்மனம் அசையாமல்
பெலக்க வேண்டும் என்று அருள்குருவே அகப்பிராந்தி போய்த் தெளிவானேன்
துலக்கமான கண்ணாடியை அடிக்கடி துலக்கினால் பழுதன்றே
அலக்கண் மாற்றிய தேவரீர் எனக்குரை அமிர்தங்கள் தெவிட்டாவே 48

48. அனேகம் சுருதிகளாலும், யுக்திகளாலும் என் நிஜ சொரூபத்தைவிட்டு மனம் நழுவாமல் திடமாய் அதில் அழுந்த வேண்டும் என்று கருதி எனக்கு ஏற்பட்ட சகல சந்தேகங்களுக்கும் பதில் அளித்த சற்குரு மூர்த்தியே! வணக்கம். தங்கள் உபதேசத்தால் எனது அந்தக்கரணத்தில் உண்டான ஐவகைப் பிராந்திகளும் ஒழிந்து தெளிவடைந்தேன். ஆனாலும் சுத்தமான கண்ணாடியை மேலும், மேலும் துலக்கினால் குற்றம் இல்லை அல்லவா? அதுபோல் சந்தேகங்களை நீக்க மேலும் மேலும் கேட்டுத் தெளிவது குற்றம் இல்லையல்லவா? பிறவித்துன்பம் நீக்கக்கூடிய தங்கள் வாக்கியாமிர் தத்தைக் கேட்க அடியேனுக்குத் தெவிட்டவில்லை.

கைதவங்களைச் சாத்திரம் சொல்லுமோ கருணையால் எனை யாளும்
ஐயனே குருவே எவராகிலும் அனுபவித்தாலன்றிச்
செய்த கன்மங்கள் விடாது என்ற வசனமும் சென்ம சஞ்சிதம் வேவத்
துய்ய ஞானத்தீ சுடும் என்ற வசனமும் துணிவது எப்படி நானே 49

49. கருணையினால் எனையாளும் ஐயனே! குருவே! வேதமானது அசத்தியம் கூறாதல்லவா? அப்படியிருக்க, எவரானாலும் தாங்கள் செய்த கருமத்தின் பயன் அனுபவித்தால் அல்லது தீராது என்ற வேத வசனமும், பல ஜன்மங்களுக்கு காரணமான சஞ்சிதவினை எத்தனையானாலும் ஞானக்கினியானது எரித்து பஸ்மமாக்கிவிடும் என்ற வேத வாக்கியமும் ஆகிய இவ்விரண்டில் எது உண்மை என்பதை அருளிச் செய்வீர். இதில் சஞ்சித கருமம் பிராரத்துவமாக வந்து அனுபவித்துத் தீருமென்பதும், அது ஞானாக்கினியால் தீருமென்பது மாகிய இரண்டில் யாது உறுதி என வினாவினதாம்.

சீவபேதங்கள் அளவி(ல்)லை மைந்தனே செய்கையும் அளவில்லை
ஆவ ஆம் அவரவர் அதிகாரங்கள் அறிந்து பக்குவம் நோக்கிப்
பூ அலர்ந்து பின் பலங்கள் காட்டுவனபோல் பூருவம் சித்தாந்தம்
காவல் வேதங்கள் இரண்டையும் வசனிக்கும் காண்டம் மூவகையாலே 50

50. அன்பனே! உன் வினாவிற்கு இரண்டு கவியினால் விடையளிக்கின்றேன். நான், நான் என்று எண்ணுவதற்கு ஏதுவான அந்தக்கரண உபாதிகளுக்கு அளவில்லை. அதனால் ஜீவர்களுடைய பேதங்களுக்கும் அளவில்லை. அவரவர்களுடைய நானாவித செய்கைகளுக்கும் அளவில்லை. அதன் பலன்களுக்கும் அளவில்லை. ஆகையால் அந்த ஜீவர்களின் பக்குவம் நோக்கி நன்மையைக் கூறும் வேதங்கள் கர்மம், பக்தி, ஞானம் என்னும் மூன்று காண்டங்களால் பூர்வபக்ஷம் எனவும், சித்தாந்த பக்ஷம் எனவும் இரண்டு பக்ஷமாகக் கூறப்பட்டு உள்ளது. அதற்கு உதாரணம் யாதோவெனின் வாழை முதலிய மரங்கள், முன் புஷ்பங்களைத் தோற்றி வைத்து பின் காயாகி பழமாவது போல் பக்குவத்திற்கீடாக அவை போதிக்கப் பட்டுள்ளது.

ஆன பாவிகள் அடைவன நரகங்கள் அவசியமானாலும்
தான மந்திர விரத ஓமங்களால் தவிரும் என்பது பொய்யோ
ஈனமாம் பலசன்ம சஞ்சிதவினை எத்தனையானாலும்
ஞானமாம் கனல் சுடும் என்ற மறைமொழி நம்பினால் வீடுண்டே 51

51. அன்பனே! பாவ கருமங்கள் செய்தவர்கள் நரகத்தை அடைவது அவசியமானாலும் தானம், தருமம் முதலிய பிராயசித்த கர்மத்தால் பாவம் நீங்கி நரகம் வராது என்று வேதம் கூறுவது பொய்யன்று. ஆனால் அனேக ஜன்மங்களைக் கொடுக்கக் கூடிய சஞ்சித கருமம் எத்தனை யாலும் ஆத்மஞானமான அக்கினி அவற்றைப் பஸ்மமாக்கிவிடும் என்று கூறும் வேதத்தின் சித்தாந்த வசனத்தை நம்பினால் மோட்சம் உண்டாம்.

இதன் உள்ளுரை : பாவ-புண்ணியத்தின் பலன் அனுபவித்துத் தீரும் என்பது பூர்வபட்சம். அந்தப் பாவ-புண்ணியங்களும், அதன் பயனாகிய பிறவித் துன்பங்களும் ஆத்மஞானத்தால் கெடும் என்பது சித்தாந்த பக்ஷம். பூர்வபட்சமான கர்மகாண்டப்படி கர்மம் செய்யச் செய்ய அதன்பலம் அனுபவிக்கத் தக்க பிறவிவரும். இது பீஜ-அங்குர நியாயமான அனவஸ்தாதோஷமுடையது. ஆகையால் இதை விட்டு சித்தாந்த பக்ஷமான ஞானகாண்டம் அதாவது உத்தர மீமாம்சையை நம்பினால் வீடுண்டு. இதில் கர்மம், பக்தி ஆகிய இரண்டும் பிபிலிகா மார்க்கமான பிரவிர்த்தி மார்க்கமெனவும், ஞானகாண்டம் விகங்க (பக்ஷி) மார்க்கத்தைப் போன்ற நேதி வாக்கியமான நிவிர்த்தி மார்க்கமெனவும் கொள்க. கருமத் தொடர்ச்சி பீஜ-அங்குர நியாயம் போன்றது என்பதற்கு கீதாசாரம் 12வது கவி "தேகமெடாமுன் கருமச்செயல் வருமாறு ஏது எனவே, ஏகமாம் மரமும் வித்தும் எனும் முறைபோல் என்றவரோ" என்று கூறியிருப்பதால் அறிக.

என்மனம் திருக்கோயிலாத் தினம் குடியிருந்தருள் குருமூர்த்தி
சென்ம சஞ்சித வினையை வேரறுத்திடும் தேவரீர் மெய்ஞ்ஞானம்
தன்மயம் தரும் மகிமையை விபுதராம் சமர்த்தரும் அறியாமல்
கன்மமாம் குழியினில் விழுந்து அழிகின்ற காரணம் உரையீரே 52

52. குருதேவா! தாங்கள் என் சத்துவகுண மனத்தின்கண் சதா குடியிருந்து அருள்கின்றீர். தாங்கள் உபதேசித்து அருளிய பிரமாத்தும ஐக்கிய ஞானமானது, பல பிறவியைக் கொடுப்பதற்குக் காரணமான சஞ்சித கர்மத்தை அடியோடு சுட்டு சாம்பலாக்கும் என்று அருளினீர். அங்ஙனமாயின் இவ்வற்புத மகிமையுள்ள ஆத்ம ஞானத்தை மிகக் கற்றறிந்த புலவர் சிகாமணிகளும், குண தோஷங்களை அறிய சக்தி உள்ளவர்களும் அறிந்து கொள்ளாமல் கர்மங்களையே செய்து வந்தால்

மோட்சம் உண்டு என்று சொல்லுகின்ற படுகுழியில் வீழ்ந்து அழிந்து போவதற்குக் காரணம் யாதோ அருளிச்செய்வீர். இவ்வாறே வைராக்கிய சதகமும் "சமயமாகிய படுகுழியினோடு இழிகின்றாய்" என்பதால் சகல கருமங்களும் படுகுழி என்பதாயிற்று.

அழிவிலாத தத்பதம்தனை மைந்தனே அகமுகத்தவர் சேர்வர்
வழி நடப்பவர் பராமுகமாயினால் மலர்ந்த கண் இருந்தாலும்
குழியில் வீழ்வர்காண் அப்படி வெளிமுகம் கொண்டு காமிகளானோர்
பழிதரும் பிறவிக் கடல் அழுந்துவர் பரகதி அடையாரே 53

53. அன்பனே! உன் வினாவிற்கு விடையளிக்கின்றேன் கேட்பாய் முக்காலத்தும் அழிவில்லாத பரிபூரண பிரமத்தை உள்முக நாட்டமுடையவர்கள் அடைவார்கள். சதா வெளிமுக நாட்டமுடையவர்கள் அடைய மாட்டார்கள். அதற்கு உதாரணம் யாதோவெனின் வழிநடப்பவர்கள் தாங்கள் செல்லும் மார்க்கத்தை பாராமல் பராக்குப் பார்த்துக் கொண்டு போனால் மலர்ந்த கண்ணிருந்தாலும் குழியில் வீழ்வார்கள். அப்படிப்போல சொர்க்காதி லோக போகங்களை விரும்பி யக்ஞாதி கருமங்களை செய்பவர்கள் வெளிமுகத்தினராய் பிறவிக் கடலில் உழல்வார்கள்; மோட்சத்தை அடைய மாட்டார்கள். இக்கவியில் உள்முகமென்பது வேதாந்த விசாரமுள்ள புத்தி எனினும், வெளிமுக மென்பது அஃதின்றிய புத்தியெனினும் ஒக்கும் என்க.

சிறந்த நன்மையும் தீமையும் ஈசனார் செய்விக்கும் செயலன்றோ
பிறந்த சீவர்கள் என்செய்வார் அவர்கள்மேல் பிழைசொலும் வழிஏதோ
துறந்த தேசிக மூர்த்தியே என்றிடில் சுருதி நூற்பொருள் மார்க்கம்
மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனே அது கேளாய் 54

54. சர்வசங்க பரித்தியாகம் செய்த தேசிகோத்தமரே! இதிலும் சந்தேகத்திற்கு இடமில்லாமல் போகவில்லை. ஏனெனில் வெளிமுகங் கொண்டு காமிகளானோர்கள் பழிதரும் பிறவிக்கடலில் உழல்வார்கள் என்று கூறினீர். அங்ஙனமாயின் நன்மை, தீமைகளெல்லாம் அந்தரியாமியான ஈசுவரன் செய்விக்கும் செயலல்லவா? பிறப்பைக் கொடுப்பதும், கொடாமல் இருப்பதும் அவன் செயல். அங்ஙனமிருக்க

இந்த ஜீவர்கள் மேல் பழிகூறக் காரணம் யாதோ? அன்பனே! சுருதி யுத்தி அனுபவமாகிய மூன்றும் தெரியாத மூடர்கள் அங்ஙனம் கூறுவார்கள். அதற்கு அவர்களின் பிராந்தியே காரணமாம். அதன் உண்மையை நீ கேட்பாயாக.

திகழ்ந்த ஈசனார் சிருட்டியும் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே
சகம்தனில் பொது ஈசனார் சிருட்டிகள் சராசரப் பொருள் எல்லாம்
அகந்தையாம் அபிமானங்கள் கோபங்கள் ஆசைகள் இவையெல்லாம்
இகழ்ந்த சீவனார் சிருட்டிகளாகும் காண் ஈசனார் செயலன்றே 55

55. அன்பனே! உன் வினாவிற்கு எட்டு கவிகளால் விடை அளிக்கின்றேன். சுத்த பிரமமாய் விளங்கும் ஈசுவரனுடைய சிருஷ்டியும், ஜீவனுடைய சிருஷ்டியும் வெவ்வேறாகும். உலகத்தில் எல்லோருக்கும் பொதுவான சர–அசரப் பொருள்கள் அனைத்தும் ஈசுவர சிருஷ்டியெனப் படும். தேகாதிகளில் நான் என்னும் அகந்தையும், புத்திர தாராதிகள் எனது என்னும் மமதையும், ஆசையும், கோபமும் ஆகிய இவை யனைத்தும் ஜீவனுடைய சிருஷ்டியாம். அது கடவுள் சிருஷ்டியன்று என்பதை நீ அறிவாய்.

மூவராம் பரன் சிருட்டிகள் உயிர்க்கெலாம் முத்தி சாதனமாகும்
சீவனார் செயும் சிருட்டிகள் தங்களைச் செனிப்பிக்கும் பிணியாகும்
தாவராதிகள் நசித்திடில் ஒருவர்க்கும் சனனங்கள் நசியாவாம்
கோபமாதிகள் நசித்திடில் பந்தமாம் கொடும் பிறவிகள் போமே 56

56. அன்பனே! முன்கூறிய இருவகை சிருஷ்டிகளில், ஈசுவர சிருஷ்டியானது ஜீவர்களுக்கு உபகாரமாய், இருக்கும். ஜீவனுடைய சிருஷ்டியானது துன்பத்தைக் கொடுக்கும். அது எவ்வாறெனை வினவின் கேட்பாய். மும்மூர்த்திகளுடைய சிருஷ்டியான அன்னம், காய்கறி முதலிய உணவுகளை உட்கொண்டு ஆத்மவிசாரம் செய்து வீட்டின்பத்தை அடைய அது காரணமாய் இருக்கிறது. ஈசுவர சிருஷ்டியான உணவுப் பொருள்கள் நஷ்டமாய்ப் போனால் ஒருவரும் சிரவணாதிகளைக் கேட்டு முத்தியடைய முடியாது அல்லவா? ஆனால் ஜீவனுடைய சிருஷ்டியான ஆசை, கோபமாதிகள் நஷ்டமானால் பந்தத்துக்கு ஏதுவான பிறவித் துன்பம் தீரும்.

ஈசர் காரியம் பிரளயத்து ஒழியவும் எவர் பவம் ஒழிந்தார்கள்
தேச கால தேகாதிகள் இருக்கவும் சீவகாரிய மோகம்
நாசமாக்கிய விவேகத்தின் உயிரொடு ஞானமுத்தர்கள் ஆனார்
பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றிப் பசுபதி செயலன்றே 57

57. குருதேவா! ஈசுவர சிருஷ்டியான பஞ்சபூத, பௌதீக உலகம் இப்போதே அழிந்துபோனால் எல்லோரும் முத்தி அடையக் கூடாதோ? அன்பனே! பிரளய காலத்தில் ஈசுவர சிருஷ்டியான பூத, பௌதீகங்கள் நீங்கி முத்தியடைந்தார்களா? இல்லை அல்லவா ஆகையால், இப்பொழுதே, ஈசுவர சிருஷ்டியான கால, தேச, தேகாதிகள் இருக்கும் இக்கணத்தில், உத்தமர்கள் நல்ல ஆத்ம விசாரம் செய்து ஜீவ சிருஷ்டியான ஆசை, கோபமாதிகளைக் களைந்து விவேகத்தால் ஞானமுத்தர்கள் ஆனார் பலர். ஆகையால் காமாதிகள் ஜீவர்களின் செயலேயன்றி ஈசுவர செயலன்று. எனவே, நீயும் ஈசுவர சிருஷ்டியான உணவாதிகளை உட்கொண்டு, ஜீவசிருஷ்டியான காமாதிகளை ஒழித்து ஆத்ம விசாரம் செய்து மோட்சமடையக் கடவாய்.

அச்சுவத்தம் என்று ஒருமரம் அதில் இரண்டு
அரும் பறவைகள் வாழும்
நச்சும் அங்கொரு பறவை அம்மரக்கனி
நன்று நன்று எனத்தின்னும்
மெச்சும் அங்கொரு பறவை தின்னாது
என வியங்கியப் பொருளாக
வைச்சு மாமறை சீவனை ஈசனை
வகுத்தவாறு அறிவாயே 58

58. அன்பனே! ஜீவேஸ்வரர்களைப் பற்றி முண்டக உபநிஷதத்தில் இவ்வாறு கூறியிருக்கிறது. அதை உதாரணத்துடன் விளக்குகின்றேன் கேட்பாய். ஓர் அரசமரத்தில் இரண்டு பறவைகள் இருக்கின்றன. அதில் ஒன்று அம்மரத்தின் கனிகளை நன்று, நன்று எனப் புசிக்கின்றது. மற்றொரு பறவை அதைப் புசிக்காமல் சாட்சி மாத்திரமாய்ப் பார்த்துக் கொண்டு இருக்கிறது. இதுபோல் ஒரு சரீரமாகிற மரத்தில், ஜீவன், ஈசுவரன் ஆகிய இரண்டு பறவைகள் இருக்கின்றன. அதில் ஜீவனாகிற பறவை உடலின் போக போக்கியங்களைப் புசிக்கின்றான். ஈசுவரனாகிய

பறவை ஒன்றும் புசிக்காமல் சாட்சி மாத்திரமாய் இருக்கின்றான். இவ்வாறு வியங்கியப் பொருளாக அதாவது குறிப்புப் பொருளாக வைத்து வேதம் ஜீவனையும், ஈசுவரனையும் வகுத்துக் கூறி இருப்பதை நீ அறிவாயாக.

இதன் உள்ளுரை : இதில் ஜீவ, ஈசுவரர்கள் என்று பொதுப்பட கூறியிருப்பது கிரம சிருஷ்டியை அனுசரித்துக் கூறியதாம். அது எங்ஙனமெனின் ஜீவனுடைய வாஸ்தவ சொரூபமான கூடஸ்த சேதனத்தின் சாயை எனப்படும் ஆபாசன் கர்மத்தைச் செய்கின்றது. வியாபக சேதனத்தின் ஆபாச அம்சமான அந்தரியாமி எனப்படும் ஈசுவரன் பலனைக் கொடுக்கின்றது. இவ்விரண்டிலுமுள்ள சேதனாம்சத்தில் எவ்வித கர்ம பல சம்பந்தமும் இல்லை. ஏன் எனில் சேதனம் இரண்டிடங்களிலும் அசங்கமாய் அதாவது பற்றற்றதாகி ஏகரூபமாய் இருக்கின்றது. இதில் ஜீவ சேதனம் வேறு; ஈசுவர சேதனம் வேறு என்று சொல்வதற்கிடமில்லை. இனி ஈசுவர சப்தத்தின் பொருள் யாதோவெனின், புத்தியில் பிரதிபிம்பித்த பிரதிபிம்பமான சிதாபாசனே ஜீவனெனப்படும். அதற்கு பிம்பமாய் சாட்சி சேதனமான கூடஸ்தனே ஈசுவரன் எனப்படும். இங்ஙனம் பிம்ப-பிரதிபிம்ப பாவமாகி தோன்றுவதற்கு அந்தக்கரணமே இடமாம். இவ்வாறு விளக்கிக் கூறியது கிரம சிருஷ்டியை அடிப்படையாகக் கொண்டு கூறியதாகக் கொள்ள வேண்டும். கிரம சிருஷ்டி கற்பனை என்பதற்கு தத்துவ விளக்கப்படலம் ஈற்றில் ஒன்பது திருஷ்டாந்தங்களைக் காண்பித்தமையால் இந்நூலாசிரியருக்கு அது உடன்பாடன்று. பின் யாது உடன்பாடோவெனின் கூறுதும். விசாரசாகரம் ஆறாம் தரங்கத்தில் "சகல நாம, ரூபங்களும் பிரமத்திற்கு வேறாகாமல் பிரம்ம ரூபமாகவே இருக்கின்றன. இந்த அர்த்தத்தைப் போதிப்பதற்காகவே கிரம சிருஷ்டி சொல்லப்பட்டது. சிருஷ்டி சொல்வதனால் வேறு பிரயோசனமில்லை; ஆகையால் சிருஷ்டிக்கு கிரமம் அதாவது முன்காரணமில்லை. எல்லாம் விவர்த்தமாயிருக்கின்றது. ஏனெனில் சகலவித காண்பான், காட்சி, காணப்படுபொருள் ஆகியவைகளும், ஞானமும் ஒரே காலத்தில் தோன்றுகின்றன. இவைகளுக்கு காரிய காரண பாவம் சொல்லக் கூடாது" என்று கூறியிருப்பதே உடன்பாடாம். மேலும் ஜடப்பொருள்களுக்கு சுக-துக்கானுபவம் கூடாது. சித்ரூபமாகிய ஆத்மாவே சகல போக போக்கியமும் அனுபவிக்கின்றது என்று கூறுவதே உத்தம சித்தாந்தமாம். இதை ஆத்ம புராணம் 45வது பக்கத்தில் "ஜடவஸ்து ஜடத்தின் சுக சாதனமன்று. ஆகையால், போகத்தின்

ஆஸ்ரய வடிவ போக்தாவும் ஆத்மாவேயாம். போகரூபக் கிரியையின் கர்த்தாவும் ஆத்மாவேயாம்" என்றும், ஞானவாசிட்டம் வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் உரையில் 802-ம் பக்கம் "விஷயாகார விருத்தியில் சுயம் வெளியாம். ஆனந்தம் விஷய கோடியில் இலது. ஜடத்தன்மை வழக்காதலின். கர்த்துரு-காரண விருத்தி கோடியிலும் இலதாம். முடிவாக சாட்சி கோடியிலே உளதாம்" என்றும் கூறியிருப்பதால், பிரமரூபமான ஆத்மாவே சகல போகத்தையும் அனுபவிக்கின்றது என்பதாயிற்று. மேலும் ஆத்ம புராணம் 788ம் பக்கத்தில் "ஹே! மைத்ரேயி! எனக்கு உன் சரீரத்தின் கண் உண்டாம் பிரியமானது நின் சரீரத்தின் பொருட்டு அன்றாம். மற்றோ எனது ஆத்ம சுகத்தின் பொருட்டேயாம். அவ்வாறே நினக்கும் என் சரீரத்தின் கண்ணே உண்டாம் பிரியமானதும் என் சுகத்தின் பொருட்டு அன்றாம் மற்றோ நினது ஆத்ம சுகத்தின் பொருட்டேயாம்" என்றும், விசாரசாகரம் 4ம் தரங்கத்தில் "ஹே! சிஷ்யனே! ஆனந்த சொரூபமே ஆத்மா என்றறி. விஷய சம்பந்தத்தால் அது வெளிப்படுகின்றது" என்றும், சசிவர்ண போதம் 45வது கவியின் செங்கல்வராய முதலியார் உரையில் "ஆத்மா பற்றற்றது என்று வேதம் கூறினும், தொழிற்படும் தன்மை சித்துப் பொருளில் நிகழுமே அன்றி சடப்பொருளில் நிகழாது" என்றும், இதற்கு கோ.வடிவேல் செட்டியார் உரையில் "உடம்பினது ஒவ்வொரு தொழிலும் ஆத்மா தொழில் செய்கின்ற போதே நிகழ்கின்றது. அது வாளா இருந்தால் அதனிடத்தில் ஒரு தொழிலும் நிகழ்வதில்லை" என்றும் கூறியிருப்பதால் ஆத்மா சகலமும் அனுபவித்தும் அனுபவியாதவன் எனக்கொள்ளுதல் வேண்டும். இந்த உண்மை அறியாது, ஆபாச வாதம் கூறி சேதன அசேதன விசாரமில்லாமல் ஆத்மா நிர்விகாரன்; அதற்கு போக போக்கியங்கள் இல்லை; அந்த ஆத்மாவே தானாக அறிந்த ஞானிகளுக்கும் போக போக்கியமில்லை என்று கூறி, விவகார ஞானிகளை எல்லாம் இகழ்வாராயினர். பாவம்! நிர்விகாரன் என்பது எல்லாம் அனுபவித்தும் நிர்விகாரனா? அல்லது அனுபவிக்காமல் நிர்விகாரனா? இதில் ஒன்றும் அனுபவிக்காதவன் நிர்விகாரன் எனில் அது ஜடமேயாம். எல்லாம் அனுபவித்தும் நிர்விகாரன் எனின் அப்போது அது சித்தாம். அதுவே ஆத்மாவாம். எனவே இந்நூலாசிரியர் ஆபாச வாதம் கூறியது பூர்வபட்சமாம். ஜீவ-கூடஸ்தர்கள் சேதனாம்சத்தால் ஒன்று என்பதே சித்தாந்த பட்சமாம் என அறிக அன்பனே.

இந்தச் சீவனால் வரும் அறுபகையெலாம் இவன் செயல் என்னாமல்
அந்தத் தேவனால் வரும் என்ற மூடர்கள் அதோகதி அடைவார்கள்
இந்தச் சீவனால் வரும் அறுபகையெலாம் இவன் செயலல்லாமல்
அந்தத் தேவனால் அன்று எனும் விவேகிகள் அமலவீடு அடைவாரே 59

59. உண்மையான ஆத்ம ஞானம் இவ்வாறு இருந்த போதிலும், ஜீவர்கள் மனம்போன போக்கில் போனால் துன்பம் உண்டாகும் ஆகையால், இந்த ஜீவனால் வரும் காமம் முதலிய ஆறு குணங்களும் இந்த ஜீவனுடைய செயலாகக் கருதி அவைகளை நீக்கிவிட முயற்சி செய்ய வேண்டும். அங்ஙனம் முயற்சி செய்யாது, இந்தக் காமாதிகளும் ஈசுவரனுடைய செயல்தான் என்று சொல்லுபவர்கள் அதோகதி அடைவார்கள். இந்த ஜீவனால் விளைந்த காமாதி ஆறு சத்துருக்களும், இந்த ஜீவனுடைய அறியாமையால் விளைந்ததல்லாமல், அந்த ஈசுவரனால் வருவதன்று என்னும் விவேகிகள் தான் மோட்சம் அடைவார்கள்.

இதன் உள்ளுரை : காமாதி இச்சைகளும், ஜீவனும் அனாதியாக இருந்த போதிலும் ஆனந்தமே சொரூப குணமாகப் பெற்றுள்ள ஆத்மாவில் அவை கற்பித குணமாகக் கொள்க. இங்ஙனமன்றி காமாதிகள் ஆத்மாவின் சொரூப குணமாக கூறுபவர்கள் அதோகதி அடைவார்கள் என்பதே இக்கவியின் திரண்ட பொருளாம். ஈசுவரன் என்பது ஆத்மாவின் பரியாய நாமங்களில் ஒன்று என அறிக. இக்காரணம் பற்றி அன்றோ "அனைத்துமாய் அல்லாத அறிவுருவை அகத்துள் வைப்பாம்" என்றார் தத்துவராயர். மேலும் காமாதி இச்சைகளும் ஜீவனும் அனாதி என்று ஒப்பியபின், அதற்கு நாசம் கூறுதல் அடாது. அனாதி வஸ்துக்கள் எப்பொழுதும் உற்பத்தி நாசமின்றி தோன்றிக் கொண்டேயிருக்கும். இக்காரணத்தால், அவை அனுபவத்தோடு கூடிய தோற்றமாய் இருந்த போதிலும், தன் நிஜ சொரூபத்தை நோக்க, அவை கற்பித குணங்களாம். பண்டைக்கால ரிஷி, முனிவர்களிடத்தும், தற்கால அறிஞர்களிடத்தும், காம, கோபாதிகள் இருந்ததும், இருப்பதும் உலகப் பிரசித்தமாம். அங்ஙனமிருக்க இந்நூலாசிரியர் "ஜீவகாரிய மோகம், நாசமாக்கிய விவேகத்தின் உயிரொடு ஞானமுத்தர்கள் ஆனார்" என்று இந்தப் படலம் 57வது கவியில் கூறியது பூர்வ பக்ஷமேயாம். அதன் சித்தாந்தபக்ஷம் யாதோவெனின் இந்தப் படலம் 58வது கவியின் உள்ளுரையில்

காண்பித்த மேற்கோளை இங்கும் கொள்ளத் தக்கதாம். ஈசுவரன் என்பது ஆத்மாவின் பரியாய நாமம் என்பதற்கு கீதாசாரம் 73வது கவி "பிரமமென்றும் ஈசனென்றும் பெருகு பலசீவனென்றும் உரை மயக்க மலது ஆன்மா ஒருவனே என்றவரோ" என்று கூறியிருப்பதால் அறிக.

நலமெய் ஐயனே எல்லவர்க்கும் தெய்வ
நாயகன் பொதுவானால்
சிலரை வாழ்வித்தல் சிலரொடு கோபித்தல்
செய்வது ஏன் என்றாயேல்
குலவு மக்களைத் தந்தைபோல் சிட்டரைக்
குளிர்ந்து துட்டரைக் காய்வன்
கலைகள் நல்வழி வரச்செயும் தண்டமும்
கருணை என்றறிவாயே 60

60. குருதேவா! கடவுள் எல்லோருக்கும் பொதுவானால், சில ஜீவர்கள் சுகம் அடையும் படியும், சில ஜீவர்கள் துக்கம் அடையும் படியாகவும் செய்விப்பதற்குக் காரணம் யாதோ அருள்வீர்? அன்பனே! கேட்பாய். நன்மை செய்யும் குழந்தைகளிடத்தில் கருணையும், தீமை செய்யும் குழந்தைகளிடத்தில் கோபமும் காட்டும் தந்தையைப் போல, பரோபகாரம் செய்பவர்களிடத்தில் சந்தோஷமும், பிறர்க்குத் துன்பம் செய்பவரிடத்தில் கோபமும் உண்டாவது ஈசுவரனுக்கு இயற்கையாம். சாஸ்திரங்களில் விதித்துள்ள சன்மார்க்கத்தில் செல்பவர்களுக்கு நன்மையும், நிஷேத மார்க்கமான துன்மார்க்கத்தில் செல்பவர்களுக்கு தீமையும் உண்டாகும் என்பதாம்.

மனை விலங்கு அறும் மைத்தனே கற்பக
மரம் கனல் புனல் மூன்றும்
தனை அடைந்தவர் வறுமையும் சீதமும்
தாகமும் தவிர்த்து ஆளும்
அனைய ஈசனும் அடைந்தவர்க்கு அருள் செய்வன்
அகன்றவர்க்கு அருள் செய்யான்
இனைய குற்றங்கள் எவர்குற்றம் ஆகும்
என்று எண்ணி நீ அறிவாயே 61

61. அன்பனே! மேற்கூறிய நன்மை, தீமைகளுக்கு உதாரணம் காட்டுகின்றேன் காண்பாய். குடும்பமாகிய விலங்கை தகர்த்து எறிந்த சிஷ்யனே! கற்பக மரத்தைச் சார்ந்தவர்களுக்கு வறுமையும், நெருப்பை அடைந்தவர்களுக்கு குளிர்ச்சியும், தண்ணீரை அடைந்தவர்களுக்கு தாகமும் தீரும். அதுபோல் ஈசுவரனும், தன்னை அடைந்தவர்களுக்கு அருள் செய்வார்; அடையாதவர்களுக்கு அருள் செய்யமாட்டார். இங்ஙனம் அடையாத குற்றம் எவர் குற்றமாகும் என்று நீ ஆராய்ந்து அறியக்கடவாய்.

ஒன்றுகேள் மகனே புமான் முயற்சியால்
உரைத்து மானிடர்க்கு ஈசன்
நன்று செய்யவே காட்டிய நூல்வழி
நடந்து நல்லவர் பின்னே
சென்று துட்டவாதனை விட்டு விவேகராய்ச்
செனித்த மாயையைத் தள்ளி
நின்று ஞானத்தை அடைந்தவர் பவங்கள் போம்
நிச்சயம் இதுதானே 62

62. அன்பனே! ஒரு உபாயத்தைச் சொல்லுகின்றேன் கேட்பாய். மக்கள் நன்மையடையும் பொருட்டு ஈசுவரன் கொடுத்த ஞானகாண்ட நூலில் கூறப்பட்டுள்ள நல்வழி நடந்து, அந்த ஞானகாண்டத்தின் பொருள் அறிவதற்காக ஞானிகள் பின்சென்று, சன்மார்க்கவழி நடந்து தீய குணங்களை களைந்து, ஆத்ம–அனாத்ம விவேகமுடையவர்களாகி ஜக–ஜீவ–பர கற்பனைகளை விடுத்து ஆத்மஞானத்தை அடைந்தவர்களுடைய பிறவித்துன்பம் தீரும். இதுவே வேத முடிவாகும்.

இந்த ஞானம்தான் வருவதெப்படி எனில் இடைவிடா விசாரத்தால்
வந்தடைந்திடும் விசாரம்தான் ஏதுஎனின் மனாதியாம் சரீரத்தில்
இந்த நான் எவன் சித்துஎது சடம்எது இரண்டும் ஒன்றாக் கூடும்
பந்தம்ஏது வீடுஏது என உசாவுதல் பகர் விசாரமதாகும் 63

63. குருதேவா! ஒருவன் மேற்கூறிய ஆத்மஞானத்தை எப்படி இருந்தால் அடையலாம்? அன்பனே! கேட்பாய். சதாகாலமும் விசாரம் செய்தால் அதை அடையலாம். எதைப்பற்றி விசாரிப்பது எனின், மனம்

முதலிய இந்த மூன்று சரீரத்தில், நான், நான் என்று சொல்லுவது எது? அதற்குப் பொருளான ஆன்மா எது? சித்தெனப்படுவது எது? சடம் எனப்படுவது எது? இரண்டும் சேர்ந்து தப்தாய பிண்டம் போல் அதாவது இரும்பில் வியாபித்த நெருப்புபோல், ஒன்றாகப் பொருந்தி இருந்து தோற்றி வைக்கும் பந்தம் எது? மோட்சம் எனப்படுவது யாது? என்று எப்போதும் ஆராய்ந்து அறிவதே விசாரமாகும்.

இதன் உள்ளுரை : வேதாந்த வாக்கியங்களின் உள்பொருளான பிரமமே தன் நிஜ சொரூபமாக நிச்சயம் செய்வது சிரவணமெனப்படும். கூடஸ்த-பிரமங்களின் அபேதத்தை நிச்சயித்தலும், ஜீவேசுவரர்களை அத்தியாசம் என விடுதலும் மனனமெனப்படும். அனாத்மாகார விருத்தியைத் தள்ளி, அகம் பிரம்மாகார விருத்தியின் ஸ்திதி நிதித்தியாசனம் (தெளிதல்) எனப்படும். இதையே சமாதி என்றும் கூறுவர். இந்த கேட்டல், சிந்தித்தலாதிகளைப் பற்றித்தான் விசாரிக்க வேண்டும். மற்றைய விசாரமெல்லாம் பந்தத்திற்கு ஏதுவாகும். ஜீவேஸ்வரர்களை அத்தியாசம் என்பதற்கு கைவல்யம் ஸ்ரீபொன்னம்பல சுவாமிகள் உரையின் 166வது பக்கத்தில் "அந்தமாம் ஜீவன் ஈசன்" என்ற செய்யுளுக்கு உரையில் "பிரம்ம வித்தையினால் நாசமாகும் ஜீவ-ஈசுவரர்கள்" என்று கூறியிருப்பதே போதுமான சான்று. இங்கே ஈசுவரனுக்கு நாசம் கூறியது மாயா உபாதியோடு கூடிய ஈசுவரனை எனக்கொள்க. ஈசுவர சேதனத்திற்கு நாசம் கூறக் கூடாது.

போன சன்மங்கள்த(ம்)மில் அனுட்டித்த நல்புண்ணிய பரிபாகம்
ஞானமாக்குமே விசாரம்ஏன் என்றிடின் நாம் உரைத்திடக் கேளாய்
ஆன புண்ணியம் ஈசுர அர்ப்பணம் செ(ய்)யின் அசுசிபோம் சுசியாகும்
மானதம் பி(ன்)னை விசாரித்து ஞானத்தை மருவும் என்றறிவாயே 64

64. குருதேவா! முன் கவியில் சித்து-சட விசாரமே ஞானத்தைத் தருமே ஒழிய, மற்ற எந்த வைதீக கருமமும் ஞானத்தைக் கொடுக்காது என்று அருளிச் செய்தீர். அங்ஙனமாயின் முற்பிறப்புக்களில் செய்த புண்ணிய கருமத்தின் பலன் ஞானத்தைக் கொடுக்காதோ? சித்து-சட விசாரம் ஏன் செய்ய வேண்டும். இந்த ஐயத்தை நீக்கி அருள்வீராக. அன்பனே! உன் வினாவிற்கு விடை பதினொரு கவியால் அளிக்கின்றேன். புண்ணிய கருமத்தை, பலனை விரும்பாது பிரம்மார்ப்பணமாக செய்தால் மனதில் உண்டாகும் காம, குரோதாதிகள் நீங்கி, நிராசை முதலிய சற்குணங்கள் உண்டாகும். அதன் பின்னர் சித்து-சட விசாரம் செய்து ஆத்ம ஞானம் அடைய வழிதோன்றும் என்று அறிவாய்.

பத்தியும் வயிராக்கியமும் பரலோகமும் அணிமாதி
சித்தியும் தவநிட்டையும் யோகமும் தியானமும் சாரூப
முத்தியும் தரும் விசித்திர கருமங்கள் மோகம் மாத்திரம் தள்ளும்
புத்தியும் தந்திடல் அருமையோ விசாரம்ஏன் புண்ணிய குருமூர்த்தி 65

65. புண்ணிய குருமூர்த்தி! பக்தியும், வைராக்கியமும், சொர்க்க லோகாதி பதவிகளும், எண்வகைச் சித்திகளும், தபசும், நிஷ்டையும், தியானமும், இயம நியமாதி அஷ்டாங்க யோகமும், சாலோகமாதி பதவி முத்திகளும் ஆகிய இவைகளைத் தரக்கூடிய அதிசாமர்த்தியமுள்ள விசித்திர கருமங்கள், தன்னைப் பிரமமென்று அறியவொட்டாமல் மறைக்கின்ற அறியாமையை நீக்கி, ஆத்மாவே பிரமம் என்கின்ற ஞானத்தைத் தராதோ? சித்து-சட விசாரம் செய்துதான் ஞானத்தை அடைய வேண்டுமோ? இதை அருளிச்செய்வீராக.

இதன் உள்ளுரை : புண்ணிய கருமத்தால் வரும் சாலோகமாதி பதவிகள் கற்பிதம் என்பதற்கு பிரமாணம் அனுமானம். "கைலாசாதிப் பதவிகள் அனித்தியம் என்பது பிரதிக்ஞை. ஆண்டுளோர்க்கு திருசியமா யிருத்தலின் என்பது ஏது. யாது யாது திருசியமோ, அது அது கடம்போல் அனித்தியம் என்பது திருஷ்டாந்தம். இதனால் சாலோகமாதி பதவி முத்திகள் அனித்தியமாம். மேலும் கைலாசாதி பதவிகள் அனித்தியம் என்பதற்குச் சிவஞான வள்ளலார் சாஸ்திரம் 275வது பக்கம் "கைலாசம் முதலிய ஸ்தானம் ஒரு காலத்தில் தோன்றி ஒரு காலத்தில் அழியும்" என்று கூறியிருக்கிறது ஆனால் கைலாசம் என்பதற்கு பொருள் யாதோவெனின், சீதாராம-ஆஞ்சனேய சம்வாதம் 10ம் பக்கம் சுலோகம், "கேளினாம் ஆனந்தானாம் சமூக கைலந்தேன" இதன் பொருள் : நாம் அனுபவிக்கும் சகலவித ஆனந்தங்களின் ஸ்திதியே வைகுண்டம் எனப்படும்" என்று கூறி இருப்பதால் பதவி ஸ்தானங்கள் அனித்தியமும் பிரமானந்தம் நித்தியமுமாம்.

வேடம் மாறிய பேர்களை அறியவே வேண்டினால் மகனே கேள்
கூடமாம் அவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகள் ஆய்ந்து அறியாமல்
ஓடியும் குதித்தும் தலைகீழ் நின்றும் உயர்ந்த கம்பத்து ஏறி
ஆடியும் பலகன்மங்கள் செய்யினும் அவர் உண்மை தெரியாதே 66

66. அன்பனே! உன்னுடைய வினாவிற்கு ஒரு உதாரணத்தால் விடையளிக்கின்றேன். மாறுவேடம் பூண்டுள்ள ஒருவனது உண்மைக் குணம் அறிய வேண்டின், அவர்களிடத்தில் மறைத்திருப்பவைகளான சுபாவங்கள், சீலங்கள், குணங்கள், குறிகள் ஆகிய இவைகளை ஆராய்ந்து பார்த்து இவர்கள் நல்லவர்கள் என்று அறியாமல், ஓடியும், குதித்தும், தலைகீழாய் நின்றும், உயர் கம்பத்தேறி ஆடியும் இவ்வாறான பல கருமங்கள் செய்தாலும், அவர்களுடைய உண்மையான சுபாவ குணம் அறிய முடியாதல்லவா?

இன்னவாறு அந்தப் பிரமத்தை அறிவிக்கும் இலக்கணத்தால் வேதம்
சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச் சுருதிநூல் படித்தாலும்
அன்னதானங்கள் தவங்கள் மந்திரங்கள் ஆசாரங்கள் யாகங்கள்
என்ன செய்யினும் தன்னைத் தான் அறிகின்றது இவைகளால் வாராதே 67

67. அன்பனே! முன்சொன்ன திருஷ்டாந்தத்தைப்போல் தாஷ்டாந்தத்தில், இருபத்தெட்டு தத்துவங்களோடு கூடியிருக்கின்ற அந்த பிரமத்தை விளக்கிக் காட்ட வேதமானது! சொரூப லட்சணை, தடத்த லட்சணை, அதத்வ்யா விருத்தி லட்சணை ஆகிய மூன்று லட்சணைகளால் அதிகாரி புருஷர்களுக்கு அறிவிக்கின்றது. இவ்வாறு வேதம் கூறிய ஞானமானது இந்தப்படலம் 63வது கவியில் கூறியது போல், சித்து-சட விசாரத்தால் வருமன்றி, உபநிஷத்துக்கள் படித்தாலும், ஏனைய சுருதி நூல் கற்றாலும், 32 தான தருமங்களைச் செய்தாலும், தவங்கள், மந்திரங்கள் அந்தந்த வருணாசிரமத்திற்குரிய ஆசாரங்கள், யாகங்கள் ஆகிய இவைகளில் எது செய்தாலும், இருபத்தெட்டு தத்துவமான உடம்பை தான் என்று அறியலாமே ஒழிய, 29-வது தத்துவமான ஆத்மாவாகிய கூடஸ்தனே நான் என்று அறியும் ஞானம் இவைகளால் வராது.

இதன் உள்ளுரை : அனாத்மாவை நேதி செய்து ஆத்மாவை அறிவிப்பது அதத்வ்யா விருத்தி லட்சணை எனப்படும். ஒரு மரத்தின் கிளையின் வாயிலாக மூன்றாம் பிறைச்சந்திரனை அறிவிப்பது போல், பஞ்சபூதாதி ஜகத்திற்கு உபாதான, நிமித்த காரணனாயிருப்பது ஆத்மாவான பிரமமேயென அறிவிப்பது தடத்த லட்சணையாம். உஷ்ணப் பிரகாசமே சூரியன் என்பதுபோல், சத்து-சித்து-ஆனந்தம்-நித்தியம்-பூரணம் ஆகிய ஐந்தும் ஆத்மாவின் சொரூபகுணம் என அறிவிப்பதே சொரூப லட்சணையாம். இந்த லட்சணங்கள் சித்து-சட

விசாரத்தால் வருமன்றி ஏனைய உபாயத்தால் வாராதென்க. மந்திரத்தால் வாரா என்பதற்கு மேற்கோள் சிவஞான வள்ளலார் சாத்திரம் 289வது பக்கத்தில் "சப்தகோடி மகா மந்திரம் சித்த விப்பிரம காரணம்" என்று கூறியிருப்பதால் அறிக. யாகத்தால் வாராதென்பதற்கு மேற்கோள் திருக்குறள் "அவிசொரித்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று" என்றும், சுவாமி ராம தீர்த்தர் என்பவருடைய சொற்பொழிவான ராமதீர்த்த விஜயம் 406-வது பக்கத்தில், "ஆயிரம் யாகங்களைச் செய்வதைப் பார்க்கிலும், ஒரு ஏழை மனிதனுக்கு ஒரு ரொட்டித் துண்டு கொடுப்பது மேலானதாகும்" என்று கூறியிருப்பதால் அறிக. 28 தத்துவத்தோடு கூடியிருப்பதே பிரமம் என்பதற்கு மேற்கோள் பிரம்மகீதை கைவல்ய உபநிஷத்தில் "மாலுரு நனவு, கனவு, உறக்கங்கள் வடிவமா நிகழ்ந்துள்ள இறைக்கு" இதன் பொருள் "ஆவரணம் அல்லது மறைப்பில்லாத பிரம்ம சொரூபமான ஞானிகள் இருபத்தெட்டு தத்துவமான மூன்று அவஸ்தை வடிவமாய் இருக்கிறார்கள்" என்று கூறியிருப்பதால் அறிக. குறை நிறை பொருள்.

துளங்கு தர்ப்பண அழுக்கறக் கைக்கொண்டு துலக்கினால் போம் அன்றி
விளங்கு புத்தியால் உலகில்ஆர் துலக்கினார் விமல தேசிக மூர்த்தி
களங்கமாகும் அஞ்ஞானமும் அப்படி கருமத்தால் கழுவாமல்
உளம் குறித்த ஞானத்தினால் எப்படி ஒழியும் ஈது அருள்வீரே 68

68. குருதேவா! கண்ணாடியில் உள்ள அழுக்குப் போக வேண்டுமானால் துடைத்தல் முதலிய கையின் தொழிலால் அது போகுமே ஒழிய புத்தியினால் செய்யும் விசாரத்தால் எப்படி அந்த அழுக்கு போகும். அங்ஙனம் போக்கினவர்கள் ஒருவரும் இலரே. அதுபோல் களங்கமான அஞ்ஞானமும் சற்கருமத்தால் நீக்கப்படாமல், அந்தக்கரணத்தால் அதாவது தேகாதிப் பிரபஞ்சம் மித்தையென அறியும் விசார ஞானத்தால் எப்படி அந்த அஞ்ஞானம் நீங்கும் இதை அருளிச் செய்வீராக.

தர்ப்பணத்தினில் களிம்பு வாஸ்தவ மலம் சகசம் ஆதலின் மைந்தா
கற்பளிங்கினில் கருநிறம் சகசமாக் கறுத்ததன்று ஆரோபம்
தர்ப்பணத்தினில் அழுக்கற வேண்டினால் சாதனத் தொழில் வேண்டும்
கற்பளிங்கில் ஆரோபமே கறுப்பு என்று கண்டிட மனம் போதும் 69

69. அன்பனே! முன்கவியில் நீ எடுத்துக் காண்பித்த உதாரணம் பொருத்தமற்றது. வேறு பொருத்தமான உதாரணத்தைக் காண்பிக்கின்றேன். அதாவது செப்புக் கண்ணாடியில் உண்டாகும் களிம்பாகிய அழுக்கு நீங்க, கையினால் தேய்த்தல் முதலிய தொழில்கள் வேண்டும். அதாவது கருமம் வேணடும். ஆனால் கற்பளிங்கினில் தோன்றும் கருநிறம் அதனுடன் இயற்கையாக உளதன்று. பின் எங்ஙனமெனின் தனக்கென சொரூபம் ஒன்றின்றி தோற்றமாத்திரமாக உடையது அந்தக் கருநிறம். செப்புக் கண்ணாடியில் தோன்றும் களிம்பு நீக்க தேய்த்தலாதி தொழில் வேண்டும் என்பது உண்மை. ஆனால் கற்பளிங்கினில் கருநிறம் கற்பனைத் தோற்றம் என அறிவதற்கு மனதின் விசாரமே போதும். சாதனத் தொழில் தேவையில்லை.

இதன் உள்ளுரை : சற்கருமத்தால் அஞ்ஞானம் நீங்காது; சித்து-சட விசாரமே அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைக் கொடுக்கும் என்பதாயிற்று. இதில் "தர்ப்பணத்தினில் களிம்பு வாஸ்தவ மலம் சகசமாதலின் மைந்தா" என்று கூறியிருப்பதில், தர்ப்பணம் என்பது தாமிரத் தகட்டில் பொருந்திய கண்ணாடியே செம்புக் கண்ணாடி எனக்கொள்க. அதற்கு களிம்பு சகசம். அதாவது இயற்கையாகவே உள்ளது. அதை நீக்க சாதனத் தொழில் வேண்டும். ஆனால் ஆத்மாவில் தோன்றும் அஞ்ஞானம் சகஜமாக இல்லாமல் தோற்ற மாத்திரமாகவுடையது. அதை நீக்க விசார ஞானமே போதுமானது என்பதாம்.

இங்கும் அப்படி சச்சிதானந்தத்தில் இடர் சடம் பொய் மூன்றும்
தங்கும் மாயையின் கற்பிதம் அன்றியே சகச வாஸ்தவம் அன்றே
பங்கமாகும் அஞ்ஞானத்தைக் கருமங்கள் பகைசெயாது உறவாக்கும்
துங்க ஞானமே கரும அஞ்ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாமே 70

70. அன்பனே! முன் கூறிய ஸ்படிகக் கல்லில் கருநிறம் கற்பனையாகத் தோன்றும் என்று நான் சொன்ன திருஷ்டாந்தத்தைப் போல், தாஷ்டாந்தத்திலும் சத்து-சித்து-ஆனந்தம்-நித்தியம்-பூரண மான ஐந்து இலக்கணமும் சொரூப குணமாகப் பெற்றுள்ள ஆத்மாவான பிரமத்தில் அசத்து-சடம்-துக்கம்-அநித்தியம்-கண்டம் ஆகிய ஐந்தும் கற்பனையாகத் தோன்றும். இது மாயா கற்பிதம் அல்லாமல் உண்மை

யான பிரமத்தில் உளதன்று. இங்ஙனம் அறியாமல் சற்கருமம் செய்யச் செய்ய அஞ்ஞானம் அதிகரிக்குமே ஒழிய, நான் பிரமம் என்று அறியும் முத்தி வராது. இது எங்ஙனமெனில் ஐப்பசிமாத அமாவாசை இருளில், கார்மேகமும் சூழ்ந்து கொண்டால், காரிருள் அதிகரிப்பது போல் கருமம் செய்யச் செய்ய அஞ்ஞானம் அபிவிருத்தியடைந்து அதன் பயனாக பிறவித் துன்பம் வருமேயொழிய, பிறவித் துன்பம் தீர்ந்து முத்தி வராது. ஆகையால் பிரபல சுருதி வாக்கியமான சித்து-சட விசார ஞானமே அஞ்ஞானத்தைச் சுட்டு நீறாக்கும், நெருப்பாகும், அதுவே முக்தியுமாகும்.

இதன் உள்ளுரை : ஆத்மாவினிடத்தில் நான், எனது என்பதற்கிடமான தேகாதிப் பிரபஞ்சம் கற்பித தோற்றம் என்பதற்கு ஸ்படிகக்கல் உபமானம் காட்டினார். ஸ்படிகத்தில் கருநிறம் வெறுந்தோற்றமே ஒழிய அதற்கு ஸ்படிகத்தைவிட வேறு தனிப் பொருள் இன்று. அங்ஙனமே சச்சிதானந்த சொரூபமான ஆத்மாவில் "நான் தேகமுடையவன் என்றும், நான் துக்கி என்றும், நான் அஞ்ஞானி என்றும், நான் ஜனன-மரணம் உடையவனென்றும்" தோன்றும் தோற்றமெல்லாம் மேற்கூறிய ஸ்படிகத்தில் கருநிறம் போல் அத்தியாசமே அல்லாமல் வாஸ்தவமன்றாம். இதில் கருமம் செய்யச் செய்ய அஞ்ஞானம் அதிகரிக்கும் என்பதற்கு வாசுதேவ மனனத்தின் அஞ்ஞான சொரூப நிரூபக அத்தியாயத்தில், அதாவது 109வது பக்கத்தில் காணலாம்.

மனைக்குள் வைத்த பண்டங்களை மறந்தவன்
வருடம்நூறு அழுதாலும்
நினைத்து உணர்ந்தபின் கிட்டும் அப்படி இந்த
நின்மல ஆன்மாவும்
அனர்த்தமான தன் மறதியைக் கெடுத்துத் தன்
அறிவினால் காணாமல்
கனத்த கர்மங்கள் நூறுஉகம் செய்யினும்
காணுமோ காணாதே 71

71. அன்பனே! ஒருவன் தன் வீட்டுக்குள் ஒரு பண்டம் வைத்தபின் அதை மறந்துவிட்டு அதைத் திரும்பவும் பெற வேண்டுமானால் என்ன செய்யலாம். ஒரு நூறாண்டு காலம் அழுதாலும், அல்லது காசிக்குப் போனாலும், அல்லது ராமேஸ்வரத்திற்குப் போனாலும் அந்தப் பண்டம்

கிடைக்க மாட்டாது அல்லவா? அந்தப் பண்டம் வைத்த இடத்தை நினைந்து உணர்ந்த பின் அகப்படும். அதுபோல் இந்த ஆத்மாவும் துன்பத்திற்குக் காரணமான தன்னுடைய மறப்பை விசார ஞானத்தால் கெடுத்து, தான் பேரறிவு சொரூபன் என்று தன்னறிவினால் நிச்சயம் செய்வதை விட்டு, பெரிய சற்கருமங்கள் நூறுயுக கால பரியந்தம் செய்தாலும் அந்த ஆத்மாவை அறிந்து உய்ய முடியுமா? முடியாது.

இதன் உள்ளுரை : முன் வைத்த பொருள், வைத்த இடத்தை ஞாபகப்படுத்திப் பார்த்தால் வெளிப்படுமே ஒழிய, மற்ற எத்தொழிலாலும் வெளிப்படாது. அதுபோல் சித்து-சட விசார ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கி, எப்பொழுதும் சொரூப சுபாவமாயுள்ள ஞானம் வெளிப்படுமே ஒழிய, தீர்த்த யாத்திரை, ஆலய வழிபாடு, யக்ஞ யாகாதி முதலிய வெளித் தொழில்களும், ஜப-தப-யோக-ஆசன-பிராணயாமம் முதலிய உள்தொழில்களும் பல கற்ப கோடி காலம் வரை செய்தாலும், அதன் பலன் அனுபவிக்க பிறவி வருமே ஒழிய முத்தி வராது. ஏன் எனின் கருமத்தின் பயன் அநித்தியம். அதற்கு உதாரணம் யாதோவெனின், கிருஷியாதி தொழிலின் (கருமம்) பயன் தானியப்பேறு. அது அநித்தியமாம். அதுபோல் சற்கருமத்தால் விளைவது அநித்திய பலமான பிறவித் துன்பமேயாம். நித்தியமான ஞானத்தைக் கொடுக்கும் சக்தி அதற்கு இல்லை. கருமத்தால் பிறவித் தன்பம் தீராது என்பதற்கு உதாரணம் பிரமகீதை "மையல் ஒன்றற இவ்வறிவினை அறியின் மானிடன் முத்தனாம் அன்றி, துய்ய கருமத்தால் மைந்தரால் மற்றொரு பொருளினால் உற்பவம் துடையான்" என்று கூறியிருப்பதால் காணலாம். மேலும் கருமத்தால் முத்தியில்லை என்பதற்கு மேற்கோள் ஞானவாசிட்டம் "தவம் மகம் தீர்த்தம் சேவை அருச்சனை தானமாதி-அவமயக்கத்தால் நீணாள் விலங்கு போல் அவத்தவர் வாழ்வர்-பவமுறும் இவற்றை விட்டு பரிசுத்த பரமபோதம் கவரறப் பற்றி எல்லாக் காதலும் நீக்கி நிற்பாய்." மேல் காண்பித்த சற்பிரமாணங்களின் தாற்பரியத்தை அனுசரித்து இந்நூலாசிரியரும், "கனத்த கருமங்கள் நூறு யுகம் செய்யினும் காணுமோ காணாதே" என்றார். இதுகாறும் கருமம் ஞானத்தைக் கொடுக்காது என்றும், சித்து-சட விசாரமே ஞானத்தைத் தரத்தக்கது என்றும் 13 கவியால் கூறிமுடித்தார்.

### அவதாரிகை

இனி கரும காண்ட நூல்களின் கருத்து வேறு என்று ஐந்து கவியால் கூறி விளக்க ஆரம்பிக்கின்றார்.

நன்மையாம் குருவே சுகம் தருவது ஞானமே எனும் வேதம்
தன்ம பாவ மிச்சிரங்களால் தேவர்கள் தரு விலங்குகள் மாந்தர்
சென்மமாகுவ சாதி ஆசாரமே செய்தவம் சுகம் என்று
கன்ம காண்டத்தில் விதித்தது என் விதித்துள காரணம் உரையீரே 72

72. குருதேவா! சர்வதுக்க நிவர்த்தி; பரமானந்தப் பிராப்தியுமான மோட்சம் தரத்தக்கது சித்து-சட விசாரத்தால் உளவாகும் ஞானமேயாம் என்று உத்தர மீமாம்சையும், அதன் சங்கர பாஷ்யமும் வேதோப நிஷத்துக்களும் கூறியிருக்க, கரும காண்ட நூல்களில் புண்ணியத்தால் தேவர்களும், பாவத்தால் தரு, விலங்குகளும், புண்ணிய-பாவ கலப்பால் மனிதர்களுமான பிறவிகள் உண்டாகும். ஆதலால் நீ மேற்கொண்டு பாவத்தை செய்து இழிவான பிறவியை அடையாதிருத்தற் பொருட்டு, அவரவர்களுடைய வருணாசிரம தருமப்படி ஒழுகினால் சுகமுண்டு என்று பூர்வ மீமாம்சையான கரும காண்டத்தில் கூறியதற்குக் காரணம் அருள்வீராக.

தினமும் மண்நுகர் பிள்ளை நோய்க்கு இரங்கியே
தீம்பண்டம் எதிர்காட்டிக்
கனமருந்துகள் ஒளித்து வைத்து அழைக்கின்ற
கருணை நல்தாய்போல
மனைஅறங்கள் செய் மகங்கள் செய் நன்று என்று
மலர்ந்த வாசகம் சொல்லும்
நினைவு வேறு காண் சுவர்க்க காமிகள் அந்த
நிண்ணயம் தெரியாரே 73

73. அன்பனே! அங்ஙனம் கூறிய வேதத்தின் அபிப்பிராயம் வேறு. அதை விளக்கிக் கூறுகின்றேன் கேட்பாய். தினமும் மண்ணைப் புசிக்கின்றக் குழந்தைக்குக் காமாலை நோய் வரும் என்று அறிந்து இரக்கம் கொண்ட தாயானவள் அதற்கான கசப்பு மருந்தை ஒளித்து வைத்துக் கொண்டு, தித்திப்புப் பண்டத்தை எதிரே காண்பித்து, குழந்தையை அழைத்து கசப்பு மருந்தைக் கொடுக்கின்ற கருணையுள்ள மாதாவைப் போல், கரும காண்ட நூலில் இல்லற தருமத்தைச் செய், யாகங்களைச் செய் என்று சொல்லும். அங்ஙனம் சொல்லுகின்ற வேதத்தின் உள்நோக்கம் வேறு. அந்த நோக்கத்தை சுவர்க்காதி போக போக்கியத்தில் இச்சையுள்ள கர்ம காண்டிகள் அறிய மாட்டார்கள்.

போகம்ஆர் உயிர் கண்டதை உண்பதும் புணர்வதும் இயல்பேகாண்
ஆகமங்களும் சுபாவத்தை விதிக்குமோ அத்தனை தெரியாதோ
காகமே கறுத்திடு நெருப்பே சுடு கசந்திடு வேம்பே நீ
வேக வாயுவே அசை என ஒருவரும் விதித்திடல் வேண்டாவே 74

74. அன்பனே! உண்பதுவும், புணர்வதுவும், மனையறங்கள் செய்வதுவும் ஜீவர்களுக்கு இயற்கை சுபாவமாயிருத்தலின், அதற்கு விதி வேண்டுவதில்லை என்பதை உதாரண முகத்துடன் காண்பிக்கின்றேன். ஜீவர்களுக்கு அருந்தல், பொருந்தல் இரண்டும் இயற்கையாயிருக்க, அவர்களைப் பார்த்து நீ அருந்துக; நீ பொருந்துக என்று வேதம் விதிக்குமோ? விதிக்காது. வேதத்திற்கு அவ்வளவு தெரியாதா? இயற்கைக்கு விதி கூறுவது பொருந்தாது. அது எதுபோலவெனின், காக்கையைப் பார்த்து நீ கறுத்திடுக என்றும், நெருப்பைப் பார்த்து நீ சுடு என்றும், வேம்பைப் பார்த்து நீ கசந்திடு என்றும், வேகமுள்ள வாயுவைப் பார்த்து நீ அசைந்திடு என்றும், ஒருவன் கூறுவானாயின் அவன் வார்த்தையைப் பயனற்றதாக கொள்ளுவது போல், இயற்கை விதி கூறும் சாஸ்திரங்களும் பயனற்றதாம். ஆகையால் வேதம் போக போக்கியத்தைக் கொடுக்கக் கூடிய கருமத்தை விலக்கிக் கூறியதே ஒழிய அதை செய்ய வேண்டும் என்று விதிக்கவில்லை. எனவே வேதத்தின் அபிப்பிராயம் பிரவிர்த்தி மார்க்கத்தைக் கூறுவதன்று; நிவிர்த்தி மார்க்கத்தை கூறுவதில் தான் பிரியம்.

கள்ளும் ஊனும் நீ விரும்பினால் மகங்கள் செய் காமத்தில் மனதானால்
கொள்ளும் பெண்பொடு கலவி செய் எனில் இவன் குறையெலாம் தொடான் என்றே
தள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும் தவிர்வதே கருத்தாகும்
விள்ளும் இவ்விதி என்னெனில் பூருவ நியமமாம் விதியன்றே 75

75. அன்பனே! வேதத்தின் அபிப்பிராயம் வேறு என்பதற்கு மேலும் இரண்டு உதாரணத்தைக் காண்பிக்கின்றேன். மது, மாமிசத்தை உண்ண விரும்பினால், யாகங்களை செய்து உண்ண வேண்டும் என்று கரும காண்டம் கூறினால் அதற்கு உட்பொருள் யாது. 10,000 ரூபாய் செலவு செய்து ஒருயாகம் செய்து அதில் ஒரு ரூபாய் மதிப்புள்ள மது மாமிசத்தை புசி என்று கூறினால் யாராவது செய்வார்களா? அதுபோல் காம இச்சை உண்டானால் பல பெண்மணிகளை இச்சிப்பதைப்

பார்க்கிலும், ஒரு பெண்மணியை மணந்துகொள் என்று கரும காண்டம் கூறுகின்றது. அதுவும் துன்பத்திற்கு காரணம் என்று அந்த கரும காண்டமே கூறியிருப்பதால், சகலமும் விட்டொழிப்பதே வேதத்தின் அபிப்பிராயமாம். ஆகையால், மனையறங்கள் செய், மகங்கள் செய் என்ற விதி பூர்வ பக்ஷமாம். ஞான காண்டம் சித்தாந்த பக்ஷமாம். சகலத்தையும் விட்டொழிப்பதே வேதத்தின் அபிப்பிராயம் என்பதற்கு மேற்கோள் பொய்யாமொழி.

"அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல் வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு"

என்று கூறியிருப்பதால் அறிக.

மது இறைச்சிகள் உண் என்ற சுருதி பின்
மணந்து பார் எனல் பாராய்
மிதுன இச்சையும் புத்திர உற்பத்தியால்
விரும்பு என்ற விதி பாராய்
இதையும் விட்டு ஒழி யதி நயிட்டிக வன்னிக்கு
இகழ்ச்சியற்றதும் பாராய்
அதை அறிந்து கன்மங்கள் ஆசைகள் ஒழிந்து
ஆனந்தம் அடைவாயே 76

76. அன்பனே! யாகத்தை செய்து மது, மாம்சாதிகளை அருந்துக என்ற கர்ம காண்ட நூல், பின் அதைப் புசிக்க வேண்டாம்; முகர்ந்து பார்த்து எறிந்து விடுக என்று கூறிய வாக்கியத்தையும் நீ ஆராய்ந்து பார்த்துக் கொள்க. காம இச்சை உண்டானால் ஒரு பெண்ணை மணந்துக் கொள்க என்று கூறியபின், புத்திர உற்பத்திக்காக மட்டும் விதித்துள்ள நாட்களில் அதாவது, பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை உறவு கொள்ள வேண்டும் என்ற வாக்கியத்தையும் நீ ஆராய்ந்து கொள்க. யாகாதிகளையும், இல்வாழ்க்கையும் விட்டொழித்த துறவிகளான ஞானிகளை வேதமும், உலகமும் புகழ்வதையும் நீ ஆராய்ந்துபார். இவைகளையெல்லாம் ஆராய்ந்து பார்த்த பின் வேதத்தின் உண்மையான கருத்து சர்வதுக்க நிவர்த்தியும், பரமானந்த பிராப்தியையும் பயப்பதாகும் என்று உறுதி செய்து, சற்கருமங்களில் உள்ள ஆசையை விட்டு ஒழிப்பாயாக.

இதன் உள்ளுரை : யாகத்தில் கொலையுண்ட உயிரானது சொர்க்கத்தில் கொலை செய்தவனுடைய வரவை எதிர்ப்பார்த்து பழிக்குப் பழிவாங்கும். ஆகையால் யாகத்தில் உயிர்க்கொலை செய்யாதே என்று பாகவத புராணத்தில் "மகம் இயற்றுழி மாய்ந்த மறியெலாம்" எனற் செய்யுள் தொடங்கி ஆறு செய்யுட்களால் மறுக்கப் பட்டிருப்பதைக் காண்க. இதுகாறும் கூறியவாற்றால் வைதீகக் கருமங்கள் செய்யச் செய்ய அஞ்ஞானம் அதிகரித்து பிறவித் துன்பத்தைக் கொடுக்கும் என்றும், சித்து-சட விசார ஞானமே முத்தியைக் கொடுக்கும் என்றும் கூறி முடித்தார்.

உலகமான அஞ்ஞானமும் கருமமும் உறவுஎன்ற வழி கூடும்
பலவுமான அஞ்ஞானமும் ஞானமும் பகை என்பது உளதானால்
நிலவிலே மருப்போல அஞ்ஞானமும் நிமல ஞானத்தோடே
குலவிநின்று இந்தச் சிருட்டிகள் செய்யவும் கூடுமோ குருமூர்த்தி 77

77. குருதேவா! தாங்கள் முன் 70வது கவியில் அஞ்ஞானமும், வைதீகக் கருமங்களும் தம்முள் உறவாக இருந்து கொண்டு அஞ்ஞானத்தை அதிகரிக்கச் செய்யும் என்று கூறியது உண்மைதான். ஆனால் துங்க (மேலான) ஞானமே அஞ்ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பு என்று அருளிச்செய்தீர் அது உண்மையானால் ஞானமும், அஞ்ஞானமும், நிலவிலே மருப்போல அல்லது களங்கம் போல ஒற்றுமையாக இருந்து கொண்டு, இந்த சிருட்டிகள் செய்வது கூடுமா? இதை அருள்வீராக.

சொரூப ஞானமும் விருத்தி ஞானமும் என்று
சோதிஞானமும் இரண்டாம்
சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த்
தோன்றும் வேறிலை மைந்தா
சொரூப ஞானம் அஞ்ஞான சத்துருஅன்று
சுழுத்தியில் கண்டாயே
சொரூப ஞானத்தில் மருவும் அஞ்ஞானத்தைச்
சுடும் விருத்தியின் ஞானம் 78

78. அன்பனே! உன் வினாவிற்கு விடை மூன்று கவியால் அளிக்கின்றேன். இந்தக் கவியில் ஜோதி ஞானம், சொரூப ஞானம், விருத்தி ஞானம் என மூன்றாகக் கூறுவதுபோல் தோன்றினாலும், ஜோதி என்பதை சொரூப ஞானத்திற்கு அடைமொழி ஆக்கி சொரூப ஞானம் எனவும், விருத்தி ஞானம் எனவும் இரண்டாகக் கொள்ள வேண்டும். இதில் அறிவே எண்ணங்களாகத் தோன்றும். அங்ஙனம் தோன்றுவதால் அவை இரண்டு என்னும் தொகைக்கு உட்பட்டது அன்று எனினும், நெருப்புப் பெட்டியில் உள்ள அக்கினி இருட்டிற்கு விரோதியாகாதது போல, இந்த அறிவு அஞ்ஞானத்திற்கு விரோதியன்று என்பதை நீ சுழுத்தி அவஸ்தையில் அனுபவித்திருக்கின்றாய் அல்லவா? அறிவு எனினும், சொரூப ஞானம் எனினும் ஒரு பொருளையே குறிக்கும். ஆகையால் அறிவின்கண் கற்பிதமாயுள்ள அஞ்ஞானத்தை, "நான் அறிவு சொரூபன்" என்று உன் உள்ளத்தில் நின்று எழுகின்ற எண்ணமாகிய விருத்தி ஞானம் கெடுக்கும். எனவே விருத்தி ஞானமே அஞ்ஞான சத்துரு, சொரூப ஞானம் அஞ்ஞான சத்துருவன்று என்று நீ அறிவாயாக.

இதன் உள்ளுரை : இந்தக் கவியில் ஜோதி ஞானம் என்பது பிரகாசமுடைய ஞானம் என்பது பொருள். எனவே சொரூப ஞானம் எனவும், விருத்தி ஞானம் எனவும் இரண்டும்தான் கூறப்பட்டுள்ளது. சுழுத்தி அவஸ்தையில் சொரூப ஞானமும், அஞ்ஞானமும் ஒன்றாக இருக்கின்றது. அது நனவில் அகம் பிரம்மாகார விருத்தியினால் அஞ்ஞானத்தைக் கெடுக்கின்றது. இங்ஙனமாக சொரூப ஞானமே, விருத்தி ஞானமாய் வெளிப்படுகின்றது. அந்த சொரூப ஞானம் அஞ்ஞான சத்துருவன்று என்பது உலகப் பிரசித்தம். சுழுத்தியில் நின்று விழித்துக் கொண்டவன் இரண்டு அனுபவத்தைக் கூறுகின்றான். அதிலொன்று நான் சுகமாய்த் தூங்கினேன் என்பது. ஒன்றும் தெரியவில்லை என்பது மற்றொன்று. இதில் ஒன்றும் தெரியவில்லை என்ற அஞ்ஞானமும், சொரூப ஞானமும் தம்முள் விரோதியாகாமல் இருக்கின்றது சுழுத்தியில். இந்நிலையில் முத்தி(மோட்சம்) இல்லை. பின் முத்தி எங்ஙனமெனின், நனவில் நான் சச்சிதானந்த சொரூபன் என்ற விசேஷ விருத்தி ஞானத்தினால் அஞ்ஞானம் நீங்கி முத்தியுண்டாகும். அது எங்ஙன மெனின் தீப்பெட்டியிலிருக்கும் நெருப்பு இருட்டிற்கு விரோதியாகாமல், தட்டி வெளிப்படுத்தியபின் விரோதியாவது போலும் எனக்கொள்க.

துருத்தி மாயையைச் சுழுத்தியில் சுடாத தன் சொரூப ஞானம்தானே
விருத்தி ஞானமாய்ச் சுட்டது எப்படி எனில் வெய்யிலால் உலகெங்கும்
பரித்த சூரியன் சூரிய காந்தத்தில் பற்றி அக்கினியாகி
எரித்தவாறுபோல் சமாதியில் விருத்தியால் எரிக்கும் என்றறிவாயே 79

79. குருதேவா! குவிதல், விரிதல் சுபாவமுள்ள சுழுத்தி அவஸ்தையில், ஆத்மாவான பிரமத்தோடு வேறுபடாமல் ஒற்றுமையாக இருந்தபின், நான் பிரமம் என்னும் ஞானம், அஞ்ஞானத்தை எப்படி கெடுக்கும் இதை அருள்வீராக. அன்பனே! கேட்பாய். சூரியன் தானாகவே ஒன்றையும் எரிக்காமல், சூரிய காந்தக் கல்லின் வாயிலாகப் பற்றி எரிப்பது போல், மாயையான விக்ஷேபத்தின் காரியமான பஞ்ச தன்மாத்திரையில் தோன்றிய அந்தக்கரணத்தில் "நான் பிரமம்" என்னும் விருத்தி ஞானம் உண்டாகுமானால், அதன் வாயிலாக அறியாமை எனப்படும் அஞ்ஞானம் நீங்கி முத்தனாவாய்.

அருளும் ஐயனே திரிவித கரணத்தால் ஆகிய தொழில் எல்லாம்
கருமம் அல்லவோ விருத்தி ஞானமும் அந்தக்கரண காரியம் அன்றோ
உரிய கர்மம் அஞ்ஞானத்தைக் கெடுக்கும் என்று ஓதினால் ஆகாதோ
பெரிய ஞானம் என்று அதற்கு ஒரு பெயரிட்ட பெருமையை உரையீரே 80

80. குருதேவா! மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரணத்தால் இயற்றப்படும் தொழில்கள் எல்லாம் கருமம் அல்லவா? அப்படி இருக்க, "நான் பிரமம்" என்னும் விருத்தி ஞானமானது, மனம் முதலிய அந்தக்கரணத்தின் தொழிலாகிய கருமமன்றோ! அங்ஙனமிருக்க மனதின் தொழிலால் ஆன கர்மமே அஞ்ஞானத்தைக் கெடுத்தது என்று சொல்லக் கூடாதோ? "நான் பிரமம்" என்னும் விருத்திக்கு அதாவது எண்ணத்திற்கு, விருத்தி ஞானம் என்று அதற்கு ஒரு பெயர் சூட்டி அழைத்த காரணத்தை அருள்வீராக?

விருத்தி ஞானம் அந்தக் கரணத்தொடு விருத்தியாகிலும் மைந்தா
ஒருத்தி மக்களே தங்களில் பகைக்கின்றது உலகெங்கும் கண்டோமே
கருத்தனாகிய புருட தந்திரங்களாம் கருமங்கள் அவைபோல
வருத்த ஞானமோ புருட தந்திரமன்று வஸ்து தந்திரமாமே 81

81. அன்பனே! உன் வினாவிற்கு 8 கவியால் விடையளிக்கின்றேன் கேட்பாயாக. விருத்தி ஞானம் அந்தக் கரணத்தின் தொழிலான கருமந்தான். அதில் சந்தேகமில்லை. ஆனாலும் ஒரு தாயின் பிள்ளைகள், தங்களுக்குள் விரோதித்துக் கொள்வதை உலகத்தில் பார்த்தோம். அதுபோல் ஜப, தப, தியானம் முதலிய கருமங்கள், தேகமே

தான் என்னும் அகங்கார புத்தி உள்ள புருஷர்களால் ஏற்படுத்தக் கூடிய தந்திரங்களாகும். இதற்குப் புருஷ தந்திரம் எனப்பெயர். விருத்தி ஞானம் அப்படி புருஷ தந்திரம் அன்று. அது வஸ்து தந்திரமாம். அதாவது அந்தக்கரண சாட்சியான கூடஸ்த பிரமமே தன் நிஜ சொரூபம் என்று அறிவது வஸ்து தந்திரமாம்.

வகுத்த கருமங்கள் செய்யவும் தவிரவும் மற்றொன்றாக்கவும் கூடும்
மிகுந்த ஞானம் அப்படியன்று தியானமும் விவேக ஞானமும் வேறே
செகத்தில் ஒன்றை ஒன்றா இவன் பாவிக்கும் தியானம் கற்பிதயோகம்
முகத்தமாக் கண்ட ஞானமே வாஸ்தவம் மோகமாய் மயங்காதே 82

82. அன்பனே! மனம், வாக்கு, காயங்களால் செய்யக் கூடிய கருமங்கள், செய்யவும், செய்யாமல் இருக்கவும், ஒன்றை மற்றொன்றாக மாற்றவும் கூடும். ஞானம் அப்படியன்று. அதை மாற்றவோ, ஒன்றை மற்றொன்றாக்கவோ முடியாது. ஆகையால் மனதின் தொழிலான தியானமும், விவேக ஞானமும் வேறு வேறாகும். உலகத்தில் ஒன்றை மற்றொன்றாக்குவது எது எனின், சிவலிங்கத்தை சிவனாகப் பாவிப்பதுவும், சாளக்கிராமத்தை விஷ்ணுவாகப் பாவிப்பதுவும் ஆகிய பாவனாத் தியானமானது கற்பிதமாம். ஆகையால், ஆராய்ச்சியினால் தன் வாஸ்தவ சொரூபத்தைப் பிரமம் என்று ஞானகதப் பிரத்தியக்ஷத்தால் அதாவது விசாரக் கண்ணால் கண்டதுவே ஞானமாம். இந்தப் பேதம் தெரியாமல் மயக்கத்தை அடைய வேண்டாம். இதில் கற்பித யோகமென்பது சகுணத் தியானத்திற்கு பரியாயப் பெயர் எனக்கொள்க.

கண்டறிந்தது ஞானம் கேட்டதுதனைக் கருதுபாவனை யோகம்
கண்டபேர் சொலக்கேட்டது மறந்துபோம் கண்டது மறவாதே
கண்ட வஸ்து மெய் தியான வஸ்துக்கள் பொய் கறுவி அஞ்ஞானத்தைக்
கண்ட அக்கணம் கொல்வது ஞானமே கருமம்அன்று அறிவாயே 83

83. அன்பனே! தியானம் கற்பிதம்; ஞானம் வாஸ்தவம் என்பதை மேலும் விளக்கிக் காட்டுகின்றேன். சகல விஷயங்களையும் இது இன்னது, இது இன்னது என்று கண்டு அறிந்து அனுபவித்த அறிவெதுவோ, அதுவே ஞான வடிவமாம். சிவலிங்கத்தை சிவமாகப் பிறர் சொல்லிக் கேள்விப்பட்டு பாவிப்பது தியானமாம். தியானம் ஒரு

காலத்தில் மறந்துப் போகக்கூடும். பிராமணனுக்கு பிராமணத்துவம் மறவாதது போல, பிரம சொரூபமான தன்னை கேட்டல், சிந்தித்தல் தெளிதலால் நான் பிரமம் எனக்கண்டது மறவாது. ஆகையால், இங்ஙனம் கண்ட பிரம்ம வஸ்து மெய்யாம். தியான வஸ்துக்கள் பொய்யாம். எனவே அஞ்ஞானமான அறியாமையைக் கெடுப்பது, "நான் பிரமம்" என்னும் விருத்தி ஞானமேயாகும். தியானம் முதலிய கருமங்கள் அறியாமையைக் கெடுக்காது. இந்த வேறுபாட்டை நீ ஆராய்ந்து அறிவாய்.

இதன் உள்ளுரை : இக்கவிக்கு ஸ்ரீபொன்னம்பல சுவாமிகள் இயற்றி அருளிய உரையின் 323வது பக்கம் "மூர்த்தித் தியானம் போல, தியான மாத்திரத்தால் நான் பிரமமென்னும் நிச்சயமானது, தியானத்தை விட்டால் இல்லாமல் போவதால் தியான வஸ்துக்கள் பொய்யென்றும், பிராமணனுக்கு நான் பிராமணன் என்பது தியானிக்காமல் இருந்தாலும் மறந்து போகாதது போல், ஆருட ஞானிக்கு மறந்திருந்தாலும் பிரம்மத்துவம் சுபாவ சித்தமாய் இருத்தலால் கண்டது மறவாது என்று கூறினார்" என்று வரைந்திருப்பதால், பிரம்மத்தைத் தியானிப்பதும் பொய் என்பதற்கு ஐயமில்லை. தன்னை விசாரித்தவர்களும், மூர்த்தி தியானம் விட்டு, பிரம்மத்தைத் தியானம் பண்ணுகிறார்கள். இது ஐவகை பிராந்தியில் ஒன்றாம். பிராமணன் தன்னை பிராமணன் என்று தியானிப்பது உண்டா? இல்லையே! தியானம் என்பது தனக்கு அன்னியமான பொருளைத் தான் தியானிக்க முடியும். பிரமம் என்பது தன் நிஜ சொரூபத்திற்கு உரிய பெயர். அதை தனக்கு வேறாக்கி எப்படி தியானிக்க முடியும். முடியுமானால் அது தன்னைப் பற்றுதல் என்னும் கிரியைக்கு கர்த்தாவும், கருமமும் (செயப்படு பொருள்) தானேயாதல் ஆத்மாஸ்ரய தோஷமாம். அதாவது தியானிப்பவனும், தியானிக்கப் படுபொருளும் தானேயாதல் ஆத்மாஸ்ரய தோஷமாம். மகா வாக்கிய விசாரம் செய்து, பாகத்தியாக லக்ஷணையினால், தன் சொரூபம் பிரமம் எனக்கண்டு அறிந்தவர்கள், மீண்டும் பிரமத்தியானம் பண்ணு கின்றேன் என்று கூறுவது நகைப்பிற்கிடமாம். இங்ஙனம் தியானிப்பது துவைத சித்தாந்தமேயாம் அல்லது ஐவகைப் பிராந்தியில் ஒன்றாம். சகல சாஸ்திரங்களும், அறிவே பிரமம் என்று கூறியிருக்கும் போது அறிவை, அறிவுக்கு வேறுபடுத்தித் தியானிப்பவன் யார்? இரண்டு அறிவு உளதா? இன்றே. அறிவைத் தியானிப்பது ஜீவன் எனில், அந்த ஜீவத்துவம் பழுதையில் பாம்பு போல், வாஸ்தவ அபேத, கற்பித பேத சம்பந்த முடையது என்றும், அத்தியாசம் என்றும், வேதமும், சான்றோர் களும் கூறியிருக்க, அதை உணராமல் பிராந்தர்களாகி, ஜீவத்தன்மையை

உயர்திணை ஆண்பால் பொருளாக்கி ஜீவன் என்று கூறுவது ஏனோ? இனி அறிவான பிரமத்தில் ஜீவத்துவம் தோன்றுவது தற்கிழமையாகவா? பிறிதின் கிழமையாகவா? இதற்கு விடை தற்கிழமையெனின், முதலும் சினையும் போல், இரண்டிற்கும் முதல் ஒன்றாகும். ஆகுமானால் முற்றும் பிரமமே ஒழிய ஜீவத்துவம் இன்று. இனி பிறிதின் கிழமையெனின், ஜீவத்துவம் தோன்றுவதற்கு பொருள், இடம், காலம் காட்ட வேண்டும் காட்டுமானால் பிரமம் கண்டப் பொருளாய்ப் போம். போகுமானால் கண்டப் பொருள் அழிவு உடையது. பாவம்! இந்தப் பரிதாப நிலையை விட்டு தன்னை உள்ளங்கையில் கனிபோல் காட்ட வல்லவர்களைத் தேடி அடிக்கிற் பிழைக்குதும். இனி பிரமத்தில் ஜீவத்துவம் எவ்வாறு இருக்கிறது எனின், வேதாந்த சூடாமணி 92வது பக்கம் "ஒரு ஆடையில் வரைந்துள்ள சித்திரம் போலும் ஜீவேஸ்வர ஜகத்து" என்றும், பஞ்சதசியின் சித்திர தீபத்தில், "ஜீவேஸ்வர ஜகத்து என்னப்பட்ட சித்திரம் ஆரோபிக்கப்பட்டது" என்றும் கூறியிருப்பதால், ஜீவன் சித்திரம் போன்றது என்றாயிற்று. ஆகுமானால் சித்திரம் ஒரு பொருளும், ஆடை ஒரு பொருளும் ஆக இரண்டு பொருளாகுமா? ஆகுமானால் சித்திரம் ஆடையைத் தியானிக்கலாம். அதுபோல் பிரம்மத்தைவிட ஜீவன் தனிப்பொருள் ஆனால் அன்றோ பிரமத்தைத் தியானிக்கலாம். அங்ஙனம் இன்றே உள்ளது ஓர் பொருள் என்று வேதம் கூறுகிறதை மறுத்து ஜீவனை உள்பொருளாக்கி, தன் சொரூபநிலை மறந்து, கடவுளைத்தேடி அலைவது தான் வேதாந்தம் கற்றறிந்தார்க்கு முடிவாகுமா? மேலும் விசாரசாகரம் சிவராவ் பதிப்பு 294வது பக்கம் "நான் உபாசிப்பவன். அதாவது தியானிப்பவன். தெய்வம் தியானிக்கப்படும் பொருள். இரண்டும் வேறு வேறு என்னும் புத்தியால் தியானம் சித்திக்கிறது. ஞானிக்கு மேற்கூறிய இரண்டு பேதமும் தோன்றுகிறதில்லை. என்னுடைய தேகாதிகளும், தெய்வத்தின் தேகாதிகளும், சொப்பனம் போல் கற்பிதங்கள். சேதனம் ஒன்றே வாஸ்தவம். இது ஞானிகளுடைய நிச்சயம் ஆகையால் ஞானத்திற்கும், தியானத்திற்கும் விரோதமுண்டு" என்று கூறியிருப்பதால் அறியலாம்.

சருவ முத்தியைத் தருகின்ற தியானமும் சத்தியம்அன்று என்றால்
சருவ முத்தியும் சத்தியம் அன்று என்று சங்கியாதே நீ கேள்
உருவம் கேட்டவன் தியானிக்கும் பொழுதில் அவ்வுருவம் வாஸ்தவமன்றே
உருவமாகும் அப்பொழுது கண்ணால் கண்ட உருவம் வாஸ்தவமாமே 84

84. குருதேவா! சாலோகமாதி பதவி முத்தியைத் தருகின்ற மூர்த்தித் தியானமும், சர்வதுக்க நிவர்த்தியைத் தருகின்ற பிரமத் தியானமும் சத்தியமன்று என்று தாங்கள் முன் கவியில் தியான வஸ்துக்கள் பொய் என்றருளிச் செய்தீர் அல்லவா? அங்ஙனமாயின், அதனால் வரும் முத்திகளும் பொய்யாகாதோ? இதை அருளிச் செய்வீராக. அன்பனே! அதற்கு விடையளிக்கின்றேன் கேட்பாய். சங்கு, சக்கர, கதை, பத்மத்தோடு விஷ்ணுவின் மூர்த்தியை தியானம் பண்ணும் போது அது பாவனா ரூபமாயிருப்பதால் அது பொய்யேயாம். தியான பலத்தால், அந்த மூர்த்தியின் சச்சிதானந்த வடிவ உண்மை உருவம் இவன் ஆகும்போது அது உண்மையாம். அதுபோல பிரம்மத்தைப் பற்றி பெரியவர்களாலும், வேதாந்த சாஸ்திரங்களாலும் கேள்விப்பட்ட பின் உண்டாகும் பிரமத் தியானம் சத்தியமன்று. அந்தப் பிரமத்தைத் தன் நிஜ சொரூபமாக அறியும்போது அது உண்மையாகும். இதில் மூர்த்தித் தியானமும், பதவி முத்திகளும், பிரம்மத் தியானமும் பூர்வபக்ஷமாகக் கூறியதாம்.

சடமதாகிய தியானம் மெய்யாகிய சர்வ முத்தியை நல்கும்
திடமதானது எப்படி எனில் அவரவர் தியானமே பிறப்பாகும்
உடலம் ஆசையால் தியானிக்கின் தியானித்த உடல்கள் ஆகுவர் மைந்தா
தொடர் பவம்கெடச் சொரூபமே தியானிக்கில் சொரூபம் ஆகுவர் மெய்யே

85. குருதேவா! தங்கள் முன் கவியில் மூர்த்தித் தியானமும், பிரமத் தியானமும், பாவனா வடிவமாக இருத்தலால் அது பொய்யாம் என்று அருளினீர். அது உண்மைதான். ஆனால் பொய்யான தியானம் மெய்யான முத்தியை அளிக்குமா? இதை அருள்வீராக. அன்பனே! எவரெவர், எதை எதை தியானம் பண்ணுகிறார்களோ, அதன் அதன் வடிவம் ஆவார்கள். சங்கு சக்கரத்தோடு கூடிய மூர்த்தியைத் தியானித்தால், அந்த மூர்த்தியின் உண்மை வடிவமான சச்சிதானந்த வடிவமாவார்கள். பிறவித் துன்பம் தீரவேண்டுமானால் தன் நிஜ வடிவமான பிரம்ம சொரூபத்தை தியானிக்கின் பிரமம் சொரூபமே ஆவார்கள். இது உண்மை. இதில் தியானம் என்பது பூர்வபக்ஷமாய்க் கூறப்பட்டது. அது பொய் என்பதற்கு இப்படலம் 83வது கவியின் உள்ளுரையில் காண்பித்த பிரமாணங்களை இங்கும் கொள்க.

பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமம் ஆகுவர் என்றால்
நர சரீரமாம் குரவனே விசாரம்ஏன் ஞானம்ஏன் என்னாதே
பரம பாவனை பரோட்சமாம் பின்பு அந்தப் பரோட்சமே அபரோட்சம்
திர விசாரமாம் ஞானமாம் முத்தியாம் தீர்வை ஈது அறிவாயே 86

86. குருதேவா! தாங்கள் முன்கவியில், "சொரூபமே தியானிக்கில் சொரூபமாகுவர்" என்று அருளினீர். அது உண்மையானால், சித்து-சட விசாரம் எதற்கு? அதன் பயனாகிய ஆத்மஞானம் எதற்கு? இதை அருளுவீர். அன்பனே! பிரமத் தியானமானது பரோக்ஷம், அபரோக்ஷம் என இரண்டு விதமாம். பிரமத்தின் இலக்கணங்களை குரு முகமாகவும், சாஸ்திர ரீதியாகவும் கேள்விப்பட்டு அதனால் உளவாகும் பிரம சிந்தனை தியானம் எனப்படும். அதுவே பரோட்ச ஞானமாம். பின்பு பரோட்சமாய் அறிந்த பிரம்மத்தைத் தன் நிஜ சொரூபமாக அறிதல் அபரோக்ஷ ஞானமாம். இந்த அபரோக்ஷ ஞானம், சித்து-சட விசாரத் தெளிவால் உண்டாவதால், இந்த அபரோக்ஷ ஞானமே அஞ்ஞானத்தைக் கெடுக்கத் தக்கதாம். இதுவே முத்தியும், மோக்ஷமுமாம்.

85+86 கவிகளின் உள்ளுரை : முன்கவியில் அவரவர் தியானமே பிறப்பாகும் என்றார். இதுவும் பூர்வபட்சமாகக் கூறப்பட்டது. சித்தாந்தப் பக்ஷமாமேல் முரண்படும். எங்ஙனமெனின் உலக சிருட்டியின் ஆரம்ப காலத்தில், யார் எதைத் தியானித்தார்கள்? தியானத்தினால் அன்றோ பிறப்பு வரவேண்டும். அப்போது சூட்சும சரீரங்கள் இருந்தன. அதிலுள்ள ஜீவர்கள் தியானம் செய்ததின் பயனாக தூல சரீரங்கள் வந்தது எனின், சூட்சும சரீரம் தூல சரீரத்தை விடுத்து தனியாக நிற்காது என்பதை கீழ்வரும் பிரமாணங்களால் அறியலாம். பஞ்சதசிப் பிரகரணம் 400வது பக்கத்தில் "தூல சரீரத்தை விடுத்து லிங்க சரீரம் ஓரிடத்தும் காணமுடியாது" என்றும், கோவிலூர் மடத்திலிருந்து வெளியிட்டுள்ள பாஷ்ய ஹிருதயம் 41வது பக்கத்தில் "விசுவ உற்பத்திக்கு முன்னம் ஜீவனில்லை. மகா பிரளயத்திலும் ஜீவனில்லை. மத்தியில் அந்தக்கரணக் கற்பனையினால் கற்பிதனானான்" என்றும், ஞானவாசிட்டம் மானுவேடன் கதை 7வது பாட்டின் ஸ்ரீவீரசுப்பையா சுவாமிகள் உரையில் "பரம சிவத்தினின்றும் முன் காரணமில்லாமலே ஜீவர்கள் யாவும் உண்டாம்" என்றும், சீதாராம-ஆஞ்சனேய சம்வாதம் பக்கம் 248ல், "மனம் முதலிய அந்தக்கரணங்கள் தூல சரீரத்தை விடுத்து தனித்து நிற்காது" என்றும், அனுபவானந்த தீபிகை வசனம் 137வது பக்கம், "நனவில் காணும் சூட்சும தேகம், கனவில் தூல தேகத்தில் அடங்குவதும், சுழுத்தியில் காரண தேகத்தில் அடங்குவதும் அனுபவ மாயிருக்க, இது தனித்து உயிரோடும், பிராணாதி அந்தக்கரணங் களோடும் சென்று சுக துக்கத்தை அடையுமென்று கூறுவது சதுர்

மறையின் அடிப்படைக்கு விரோதமாம். ஏன் எனின் அது அநாதியாகையால்" என்றும், ஆத்ம புராணம் 500வது பக்கத்தில், "தூல சரீரம் இன்றி சூட்சும சரீரம் நிலை பொருந்தாதாம்" என்றும் கூறியிருப்பதை உய்த்துணர்க. இவ்வாறான பிரபல சுருதி வாக்கியங்களை நோக்குவார்க்கு ஜீவத்துவம் இடைக்காலத்தில் தோன்றிய அந்தக்கரணக் கற்பனையாகும். இத்தகைய கற்பனா ஜீவன், தான் செய்யும் மூர்த்தித் தியானமும், பிரமத் தியானமும் மற்றுமுள்ள தியானமும் கற்பனையாகுமன்றி எதார்த்தமாகுமா? ஆயினும் பிரமத் தியானத்தை இரண்டாக விளக்கிக் கூறினார் கீதாசாரியார் "பகர்ந்த சத்த ஞானம் பரோட்சம்; அனுபவத்தால் அகம் பிரமம் எனும் ஞானம் அபரோக்ஷம்" இதன் உரையில், "பிரமம் இருக்கிறது என்று கேள்வியினால் அறிதல் பரோட்சம்; சச்சிதானந்தப் பிரமம் நான் என்று அறிதல் அபரோக்ஷம்" என்று கூறியிருப்பதால், பிரமத்தை எதிரிட்டு அறிவதும், தியானத்தால் அறிவதும் சரிதான் என்று கூறுபவர்களை மறுத்தவாறாயிற்று. மேலும், கர்ணன் தன்னை க்ஷத்திரிய குலத்தவன் என்று அறிவதற்கு தியானம் செய்தானா? தசமன் தன்னை தசமன் என்று அறிவதற்கு தியானம் செய்தானா? இல்லையே. தியானம் செய்தால் தன் எதார்த்த நிலை அறிய முடியாது. அது விசாரத்தால் அன்றோ அறிய வேண்டும். இதுப்பற்றி இந்நூலாசிரியரும், "ஸ்திர விசாரமே ஞானமாம்; இதுவே முத்தியுமாம்" என்றார். இதை விடுத்து தியானம் செய்வதால் அபரோக்ஷ ஞானம் வராது. தன் நிஜ சொரூபத்தை ஐயந் திரிபறத் தெளிதல் அபரோக்ஷ ஞானமாம். இதை திருவாரூர் மடத்துக் கட்டளை வியாக்கியானத்தில் 227வது பக்கத்தில், "திட அபரோக்ஷ பிரம்ம ஞானி யார் என்னில், பொன்னில் பூடணம் போல் தன்னிடத்தில் தோன்றி நின்ற தேகாதிப் பிரபஞ்சம் மித்தை எனவும், பிரம்மமாகிய தான் சத்தியம் எனவும் அறிந்து நிற்பவனேயாம்" என்றும், பஞ்சதசி 321ம் பக்கத்தில், "நான் பிரமம் என்று அறிந்தால் அது அபரோக்ஷ ஞானமாம்" என்றும், பஞ்சதசி 185ம் பக்கம் "நான் பிரமமாயிருக்கிறேன் என்னும் திட நிச்சயமாகிய அபரோக்ஷ ஞானம் ஒரு க்ஷணத்தில் உதயமாகி, இரண்டாவது க்ஷணத்தில் நிலைபெற்று, மூன்றாவது க்ஷணத்தில் அஞ்ஞானத்தைக் காரியத்தோடு நஷ்டமாக்கும்" என்றும் கூறியிருப்பதால், ஒரு கணத்தில் ஞானமுண்டாக வேண்டும். தியானம் பிரட்ட பேஷண நியாயம் போல், அதாவது அரைத்த மாவை மீண்டும் அரைப்பது போல்வதாம். இது இவ்வாறிருக்க, ஸ்திர விசாரத்தால் உதயமான ஞானமே முடிவாம் என்று

இந்நூலாசிரியர் பசுமரத்தாணி போல் கூறியிருப்பதை உணராமல், தியானம் செய்கின்றேன் என்று ஆசனம் கட்டி, சின்முத்திரைப் பிடித்து, கண்ணின் கருவிழியை மேலே செருகி, கல்போல் அசையாமல் இருந்து தவப்பகடியாட்டம் ஆடுபவர்களைப் பார்த்து உலகத்தவர்கள் இந்த ஞானிகளும் தவப்பகடி ஆட்டம் ஆடாமல் சித்து-சட விசாரத்தால் அபரோக்ஷ ஞானம் அடைந்த பெரியவர்களை எல்லாம் இகழ்வாராயினர் பாவம்!

வீடதாம் பரிபூரண சொரூபத்தில் விருத்தி ஞானமும் கூடிச்
சேடமாகினால் அகண்டமாம் அனுபவ சித்தி எப்படி என்றால்
சாடிநீர் மண்ணைப் பிரித்த தேற்றாம்பொடி தானும் மண்ணொடு மாயும்
ஊடி ஞானமும் அறிவிலாமையைக் கெடுத்து ஒக்கவே கெடும்தானே 87

87. குருதேவா! மகா வாக்கிய விசாரத்தால் என் நிஜ வடிவம் பரிபூரணப் பிரமம் என்று நிச்சயம் செய்தேன். அங்ஙனம் நிச்சயமான விருத்தி, அஞ்ஞானம் என்கின்ற அறியாமையைக் கெடுத்த பின்னரும், காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்ற திரிபுடி பேதம் தோன்றுவதால், பிரம்ம சொரூபமான நான் பரிபூரண சொரூபன் என்ற அனுபவம் எங்ஙனம் உண்டாகும்? இதை அருள்வீராக. அன்பனே! ஒரு குடம் தண்ணீரில் உள்ள சேற்றைப் பிரித்த பின் தேற்றாம்பொடி தானும் மண்ணோடு மாயும். அதுபோல், நான் வியாபக சொரூபன் என்ற அகண்டாகார விருத்தியும், அறியாமையைக் கெடுத்த பின்னர் தானும் தேற்றாம்பொடிபோல் பிரமமாய்விடும்.

இதன் உள்ளுரை : விருத்தி அத்தியந்தம் நாசமாகவில்லை. தேற்றாம் பொடியும் அத்தியந்தம் நாசமாகவில்லை. மண்ணோடு கலந்து நிற்கின்றது. அதுபோல, அஞ்ஞானத்தைக் கெடுத்த விருத்தி, தானும் பிரம்மமாய் நிற்கின்றது. பிராரத்துவம் உள்ளளவும் அங்ஙனம் நிற்கும் என்று நிச்சயிப்பதற்கு மாய்தல் அல்லது நாசம் எனப்பெயர் வழங்கு வதைக் காண்க. "சொரூப ஞானமே விருத்தி ஞானமாய்த் தோன்றும்" என்று இந்தப்படலம் 78வது கவியில் கூறியதால் விருத்தி ஞானமும் பிரமமேயாம்.

இந்த நிச்சயம் முத்தருள் அனுபவம் இருப்பது எப்படி என்றால்
சிந்தையற்ற பூமண்டல இராசனும் சிசுவும் போல் சுகமாவர்
பந்த முத்திகள் மறந்து போம் உண்டென்று பலர் சொலின் நகையாவர்
அந்தரத்தை உண்டு உமிழ்ந்தது ஓர்கொசுகு எனும் அவர்களை நகையாரோ

88. குருதேவா! மேற்கூறிப் போந்தபடி, அகண்ட அனுபவம் பெற்ற ஜீவன் முத்தர்களுடைய நிச்சயம் யாதோ? அதை அருள்வீராக. அன்பனே! எவ்வித குறைபாடுகளும் இல்லாத ஏக சக்கரவர்த்தி யானவன், லாப நஷ்டம் கருதாமல் சுகமாயிருப்பதுபோல், இந்த ஜீவன் முத்தர்கள் இருப்பார்கள். மேலும், குழந்தைகள் முக்காலங்களைப் பற்றி நினையாமல் இருப்பது போல் இருப்பார்கள். பந்த, மோட்சங்களைப் பற்றி மறந்து விடுவார்கள். அவைகள் உண்டு என்று பலர் சொன்னாலும் எள்ளி நகைப்பர். ஏன் எனில் தன் சொரூபத்தில் அவைகள் கற்பனையாகையால் எனக்கொள்க. மேலும் பந்த, முத்தி உண்டென்றுக் கூறுபவர்களை எள்ளி நகைப்பர் என்பதற்கு உதாரணம் காட்டுகின்றார். ஒரு கொசு ஆகாயத்தை உண்டு உமிழ்ந்தது என்று கூறுபவர்களை யார் தான் நகைக்க மாட்டார்கள்.

மலடி மைந்தனும் தாணுவில் புருடனும் வான்மலர் முடிசூடி
இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை இரசதம் விலைபேசிக்
கலகமாய் முயல் கொம்பினால் குத்தியே களைத்து இருவரும் மாண்டார்
அலகை ஆயினார் எனும் விவகாரத்தை அறிந்தவன் மயங்கானே 89

89. அன்பனே! ஆத்மானுபவம் பெற்ற ஜீவன் முத்தனுக்கு, உலகம் கற்பனையாகத் தோன்றும் என்பதற்கு ஒரு கதை கூறுகின்றேன் கேட்பாய். மலடி மைந்தனும், கட்டையில் கள்வனும் ஆகாயத்தில் தோன்றும் தாமரைப் பூவை சூடி, கந்தர்வ நகரத்தில் சென்று, கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியை விலைபேசிக் கலகமுற்று, இடையில் முயற்கொம்பினால் குத்தி இருவரும் மாண்டார்கள். இதன் உண்மையை அறிந்தவன் மயங்க மாட்டான்.

மாயை என்பது பொய்எனில் அதுபெற்ற வகைஎலாம் பொய்யாமே
தாயையன்றி மக்களுக்கு ஒருபிறவியும் சாதியும் வேறுண்டோ
சேய சொர்க்கமும் நரகமும் நன்மையும் தீமையும் பாராமல்
தூய சத்துச் சித்தானந்த பூரண சொரூபமாய் இருப்பாயே 90

90. முன்கூறிய கதையில் மயங்காதவனைப்போல, நீயும் ஜீவன் முத்தனுடைய அனுபவத்தை ஒத்து வாழக்கடவாய். மாயையானது ஒன்பது வகையாலும் நிச்சயமான சொரூபம் இல்லாதது. அநிர் வசனீயமான அம்மாயையின் காரியமான தேகாதிப் பிரபஞ்சமும்

அநிர்வசனீயமாம். அது எதுபோல எனின், தாயையன்றி பிள்ளைகளுக்கு வேறு பிறவியும், ஜாதியும் உண்டோ? இல்லை. அதுபோல் மாயை எங்ஙனம் பொய்யோ, அங்ஙனமே அதன் காரியமான உலகமனைத்தும் பொய்யாம். இந்தப் பொய்யை மெய்யாகக் கருதி நீ மயங்க வேண்டாம். ஆகையால் மாயா காரியமான நரகமும்-சொர்க்கமும், நன்மையும்-தீமையும் பொருந்திய பிரபஞ்சத்தை உண்மையாகப் பாராமல், பொய்யென்று உபேக்ஷித்து சச்சிதானந்த நித்திய பூரணப் பிரமமாயிருப்பாய்.

பங்கயாசனன் முதல் பல தேவரும் பாருள பெரியோரும்
கங்கை ஆதியாம் தீர்த்தமும் தேசமும் காலமும் மறைநாலும்
அங்கம் ஆறும் மந்திரங்களும் தவங்களும் அசத்தியம் எனச் சொன்னால்
எங்கள் நாயகனே அதனால் குற்றங்கள் இல்லையோ மொழியீரே 91

91. குருதேவா! தாங்கள் முன்கவியில் மாயையைப் பொய்யென்றும், அதன் காரியமான தேகாதி உலகம் எல்லாம் பொய்யென்றும் கூறினீர். அங்ஙனமாயின் பிரம்ம தேவன் முதல் முப்பத்து மூன்று கோடி தேவர்களும், பூமியில் உள்ள மகாத்மாக்களும் கங்கையாதித் தீர்த்தங்களும், காசி முதலிய தேசங்களும், அர்த்தோதயம் முதலிய புண்ணிய காலங்களும், சாமவேதம் முதல் நான்கு வேதங்களும், சந்தஸ் கற்பம் முதலிய ஆறு அங்கங்களும், பஞ்சாட்சரம் முதலிய மந்திரங்களும், சாந்திராயணாதி தவங்களும் ஆகிய இவைகள் அசத்திய மென்று சொன்னால் அதனால் தோஷமில்லையோ அருள்வீர்.

சொற்பனம்தனில் கண்டதைப் பொய் என்று சொல்வது பிழையானால்
அற்ப மாயையில் தோன்றிய சகங்களை அசத்துஎனல் பிழையாமே
சொற்பனம்தனில் கண்டதைப் பொய்என்று சொல்லலாம் எனின் மைந்தா
அற்ப மாயையில் தோன்றிய சகமெலாம் அசத்தியம் எனலாமே 92

92. அன்பனே! உன் வினாவிற்கு இருகவிகளில் விடை கூறுகின்றேன் கேட்பாய். ஒருவன் தான் கண்ட கனவில் பிரமா முதலிய தேவர்களையும், கங்கையாதித் தீர்த்தங்களையும் மற்றுமுள்ள தேகாதிப் பிரபஞ்சங்களையும் கண்டபின் பொய் என்று சொல்வது பிழையானால், அற்பமான மாயா காரியமாயுள்ள பிரமாதி, கங்கையாதி, தேகாதி முதலியவை

களையும் பொய்யென்று சொல்வது பிழையாகும். மேற்கூறியவன் சொப்பனத்தில் கண்டதை பொய்யென்று சொல்லலாம் எனின், அற்ப மாயையில் தோன்றிய தேகாதிப் பிரபஞ்சத்தையும், தன் சொரூபத்தில் விழித்த ஞானிகள் பொய்யென்று சொல்லலாம் அது குற்றமன்று.

பொய்யை மெய்யென்ற மூடர் புண்ணியர் என்று புராணம் கூப்பிடுமானால்
மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்த சாத்திரம் உண்டோ
பொய் அது ஏதெனின் நாம ரூபங்கள்ஆ(கு)ம் பூதமாகிய மாயை
மெய் அது ஏதெனில் சச்சிதானந்தமாய் வியாபிக்கும் ஆன்மாவே 93

93. அன்பனே! சுருதி, யுக்தி, அனுபவத்திற்கு ஒத்துவரும் அத்வைத சித்தாந்தத்தை பொய்யென்றும், அவை மூன்றுக்கும் ஒத்துவராத துவைத சித்தாந்தத்தை மெய் என்றும், இது புராண சம்மதமென்றும் கூறுபவர்கள் மூடர்கள். இவர்களைப் புண்ணியவான்கள் என்றும், மகா தருமவான்கள் என்றும் புராணங்கள் கூறுகின்றன. அங்ஙனமாயின் சுருதி, யுத்தி, அனுபவத்திற்கு ஒத்துவரும் அத்வைதத்தை சத்தியம் என்று கூறும் ஞானிகளுக்குக் குற்றம் கூறும் சாத்திரம் உளதோ? இல்லை. பொய்யென்பது எது எனின், பஞ்சபூதமாகிய மாயையும், அதன் காரியமான நாம, ரூபமுமாம். சத்தியமானது எது எனின், சத்து-சித்து-ஆனந்த-நித்திய-பூரணமாய் யாவரிடத்திலும் வியாபித்திருக்கும் ஆன்மாவேயாம். இக்கவிக்கு ஸ்ரீபொன்னம்பல சுவாமிகள் அருளிச் செய்த உரையின் 337வது பக்கத்தில் "சுருதி, யுத்தி, அனுபவங்களால் பெரியவர்கள் பொய்யென்று தள்ளிய பிரம்மா முதலிய தேவர்கள் கங்கையாதியாம் தீர்த்தங்கள் காசி முதலிய தேசங்கள், உத்திராயணாதி காலங்கள், வேதங்கள், அங்கங்கள், மந்திரங்கள், தவங்கள் முதலியவற்றை சத்தியம் என்று நிச்சயித்து, தீர்த்தமாடல், சேவை, அர்ச்சனை, தானம், தவம், மகம் முதலியவற்றை செய்யா நிற்கும் பரமார்த்த அறிவில்லாதவர்களை மகா தருமவான்கள் என்று புராணம் துதிக்குமாயின் அவைகளை பொய்யென்று சொன்ன பரம அத்வைத ஞானிகளை வேதங்கள் போற்றுகின்றதே ஒழிய நிந்தை செய்யவில்லையே. இதையும் நீ யூகித்துணரக் கடவாய்." என்று கூறியிருப்பதால், "ஞானிகளுக்குக் குற்றங்கள் விதித்த சாத்திரங்களும் உண்டோ?" என்றார் இந்நூலாசிரியரும். மெய்யதேதெனின் சச்சிதானந்தமாய் வியாபிக்கும் ஆன்மாவே என்பதற்கு மேற்கோள்

வள்ளலார் சாத்திரம் பக்கம் 168 செய்யுள் "பறையர் என்பதும் பண்டிதர் என்பதும்-மறையும் இந்த மலின உடலையே-பறையர் தம்முளும் பண்டிதர் தம்முளும்-அறிவன் ஏகம் என்றார் அறிந்தோர்களே." சைவம், வைணவம் முதலிய சமய நூல்களின் கருத்தும் இதுவேயாம் என்பதற்கு வள்ளலார் சாத்திரம் 168ம் பக்கம் "சமயமே பரம் என்னும் சமத்தராய்ச், சமய சாத்திரம் காட்டும் சழக்கர்காள், சமயம் என்னும் சத்தார்த்தம் உணர்கிலீர், சமயம் என்பது தன்னை அறிதலே." இது காறும் பொய், மெய் இலக்கணம் கூறியவாறு காண்க. மேல் மாயை இலக்கணம் பத்து கவிகளால் கூறி முடிக்கின்றார்.

மாயை என்பது ஏது உடையர்ஆர் எப்படி வந்தது வருவான்ஏன்
மாயை என்பது பிரமத்தின் வேறுஎனின் வஸ்துவும் இரண்டாமே
மாயை என்பதும் பிரமமும் ஒன்றுஎனின் வஸ்துவும் பொய்யாமே
மாயை என்ற மேகங்களுக்கு ஒரு சண்ட மாருத குருமூர்த்தி 94

94. குருதேவா! தாங்கள் முன்கவியில் பொய்யதேதெனில் நாம ரூபங்களாம், பூதமாகிய மாயை என்று கூறினீரே. அங்ஙனமாயின் அந்த மாயையின் சொரூபம் யாது? அந்த மாயையை உடையவர்கள் யாவர்? அது எப்படி வந்தது? அந்த மாயை என்ன காரணத்தால் எனக்கு வந்தது? அந்த மாயையும், பிரமமும் வேறு வேறா? அல்லது இரண்டும் ஒன்றா? வேறு வேறு எனின், அப்போது பிரமம் கண்டப் பொருளாய்ப் போகுமே. இரண்டும் ஒன்று எனின், மாயை எங்ஙனம் பொய்யோ, அங்ஙனம் பிரமமும் பொய்யாமே. மாயை என்ற மேகங்களை சிதறடிக்கக் கூடிய சண்ட மாருதக் காற்று போன்ற சற்குரு மூர்த்தியே! இந்த ஆறு வினாக்களுக்கும் விடையளிப்பீராக.

அதனை இன்னது என்று உரைத்திடப் படாமையால் அவாச்சிய வடிவாகும்
இது தனக்குளது உடல் யான் உலகு மெய் எ(ன்)னும் அவர் உடையோர்கள்
கதையிலாத பொய் வந்தது இப்படி என்று கண்ட பேர் இ(ல்)லை மைந்தா
விதன மாயை ஏன் வந்தது என்றால் புத்தி விசாரம் அற்றதனாலே 95

95. அன்பனே! உன் ஆறு வினாவில் முதல் நான்கு வினாவிற்கு இக்கவியில் விடையளிக்கின்றேன். (1) ஒன்பது வகையினாலும் இன்ன சொரூபம் உடையதென்று நிச்சயிக்க முடியாமையால், அநிர்வசனீயமே மாயையின் ஸ்வரூபமாம். (2) இந்த புத்திர தாராதி சம்பத்துக்கள்

என்னுடையது; இந்த தேகமே நான்; உலகம் சத்தியம் என்று நம்பி இருப்பவர்களே இந்த மாயையை உடையவர்கள் ஆவார்கள். (3) இந்த மாயை உற்பத்தியில்லாத அநாதியாதலின் அது, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தம் ஆகிய பக்ஷங்களால் நிச்சயிக்க முடியாததால், அது வந்தது இப்படியென்று கண்டபேர் இல்லை. (4) அன்பனே! துக்கத்திற்குக் காரணமான மாயை ஏன் வந்தது எனின், சித்து-சட விசாரம் செய்யும் நல்ல புத்தி இல்லாமையால் வந்தது என்று அறிவாய்.

அருவமாகும் மாயாவி வித்தைகள் விளையாடும் முன் தெரியாவே
உருவமாம் பல கந்தர்ப்ப சேனையாய் உதித்தபின் வெளியாகும்
பிரம சத்திகள் அனந்தமாம் அதைக் கண்டு பிடித்திடல் கூடாதே
பரவு பூதங்கள் கண்டு அனுமானத்தால் பலருக்கும் வெளியாமே 96

96. அன்பனே! பாக்கி இரண்டு வினாவில், மாயை பிரமத்திற்கு வேறாகுமா என்ற ஐந்தாவது வினாவிற்கு இரண்டு கவியால் விடையளிக்கின்றேன். ஜால வித்தையைக் காட்டுபவனிடத்தில் உருவமற்ற பல சக்திகள் அடங்கி இருக்கின்றன. அதில் ஒன்றைக் காண்பிக்கின்றேன். ஒரு மாங்கொட்டையை முளைக்க வைத்து, பின் மரமாகி, பூவாகி, காயாகி, கனியாகி வெளிப்படுகின்றது. அந்தப் பழத்தைப் பார்த்து அனுமானத்தால் ஒரு சக்தியுண்டு என்று அறிவது போல், பிரமத்தினிடத்தில் அளவிறந்த சக்தியுண்டு. அதைக் கண்டு அறிதல் ஒருவர்க்கும் முடியாது. ஆகாசாதி பூதங்களும், அதன் காரியமான பிரபஞ்சத்தையும் கண்டு, அனுமானத்தால் ஆற்றல்மிகு சக்தி ஒன்று உண்டு என்று அறிதல் வேண்டும்.

காரியங்களும் சத்தி ஆதாரமும் காணும் மற்றது மாயம்
பாரில் நின்ற மாயாவியும் சேனையும் பார்ப்பவர் கண்காணும்
வீரியம் திகழ் வித்தையாயின சத்தி வெளிப்படாது அதுபோலே
பேரியல் பிரமத்துக்கும் உலகுக்கும் பிறிது சத்திகள் உண்டே 97

97. அன்பனே! மேற்கூறிய மாம்பழம் முதலிய பொருள்களும், அதைக் காண்பிக்கும் புருஷனும், பார்ப்பவர்கள் கண்களுக்குப் புலப்படும். எந்த சக்தி பழம் முதலியவற்றை தோற்றி வைத்ததோ அந்த சக்தி ஒருவர் கண்களுக்கும் தென்படுவதில்லை. அதுபோல், மாயா

சக்தியின் காரியமான நாம, ரூபப் பிரபஞ்சமும், பிரமமும் காண்பவர் களுக்குக் கண்கூடாகத் தோன்றும். ஆனால், அந்த மாயாசக்தி மட்டும் கண்கூடாகத் தோன்றுவது இல்லை. ஆகையால் ஆதாரமான பிரமத் திற்கும், காரியமான பிரபஞ்சத்திற்கும் வேறாக அனந்த சக்திகள் உண்டு.

இதன் உள்ளுரை : ஜால வித்தைகளைக் காண்பிக்கும் காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு மகனைப் பார்த்து, தந்தை "மகனே! ஜால வித்தைக்காரனால் காண்பிக்கப்பட்ட இம்மாமரம் முதலிய முழுமையும் பொய்" என்றார். இப்படிச் சொன்னதனால் ஜாலக்காரனை பொய்யென்று மகன் அறிகிறதில்லை. ஆனால் அவனைச் சத்தியம் என்றே அறிகின்றான். அதுபோல் ஜகத்து முழுவதும் பொய்யென்று சொல்வதனால் ஆத்மா சத்தியமென்று அறிந்து கொள்பவன் விவேகம் உள்ளவனாவான்.

சத்தி சத்தனைத் தவிர வேறன்று காண் சத்தனாம் மாயாவி
வித்தை காட்டிய இந்திர சாலம் பொய் வித்துவான் மெய்போலப்
புத்தி மைந்தனே சத்திமான் ஆகிய பூரண ஆன்மாவின்
வத்து நிர்ணயம் சொன்ன திட்டாந்தத்தின் வழி கண்டு தெளிவாயே 98

98. அன்பனே! மாயையும், பிரமமும் ஒன்றா? என்ற உன் ஆறாவது வினாவிற்கு விடையளிக்கின்றேன். இந்திரஜால சக்தியானது, இந்திர ஜாலக்காரனை விட வேறு அன்று. அவன் காட்டிய இந்திரஜாலம் பொய். அதைக் காட்டுபவனான அவன் மெய். அதுபோல, சர்வ சக்திமானாகிய பரிபூரண ஆத்மாவின் சொரூபம் சச்சிதானந்த நித்திய பூர்ணமானது என அறிவாய். இந்திர ஜாலக்காரனுடைய ஜாலசக்தி எங்ஙனம் அநிர்வசனீயமோ அங்ஙனமே, அநிர்வசனீயமான மாயாசக்தி பிரம்மத்திற்கு வேறல்ல. ஜாலம் பொய்யாகி ஜாலக்காரன் மெய்யானது போல், பிரபஞ்சம் ஓரவஸ்தையில் தோன்றியது மற்றோர் அவஸ்தையில் காணாது மாறுதலின் பொய்யென்றும், பிரமம் பற்றற்றதாதலின் அவைகளோடு மாறுதலடையாமல் சாக்ஷி மாத்திரமாயிருத்தலின் சத்தியமென்றும் அறிவாய்.

இல்லையாகிய சத்தியை உண்டென்பது எப்படி எனக்கேட்கில்
புல்லையாதியாம் அசேதனப் பொருள் எலாம் பூத்துக் காய்ப்பன பாராய்
நல்லையாம் மகனே அதில்அதில் சிற்சத்தி நடந்திடாது இருந்தக்கால்
தொல்லையாய் வரும் சராசர உயிர்க்கெலாம் சுபாவங்கள் வேறாமே 99

99. குருதேவா! தாங்கள் பிரமத்திற்கு வேறாக ஒரு மாயாசக்தி இல்லை என்றீர். அங்ஙனம் இல்லாத ஓர் சக்தி உண்டு என்பதை எங்ஙனம் அறிவது? இதை அருள்வீராக. அன்பனே! உலகத்தில் புல் முதலிய சடப்பொருள்கள் எல்லாம் பூத்துக் காய்ப்பன பாராய். நல்ல அறிவுள்ள சிஷ்யனே! அந்தச் சடப்பொருள்களில் ஒரு சக்தி நடந்திடா விட்டால், அதன் அதன் சுபாவங்கள் அப்படி அப்படியே இருக்க மாட்டாது. மாறுதல் அடையும் என்க.

கருப்பை முட்டையுள் பறவைகள் பலநிறம் கலந்த சித்திரம் பாராய்
அருப்பமாம் சத்தி நியமம் இல்லாவிடில் அரசுஇ(ல்)லா நகர்போலாம்
நெருப்பு நீரதாம் கசப்புமே மதுரமாம் நீசனும் மறைஓதும்
பொருப்பு மேகமாம் கடலெலாம் மண்களாம் புவனம் இப்படிப் போமே 100

100. அன்பனே! மேலும் அந்தசக்தியின் விசித்திர செயல்களைக் கேட்பாயாக. கருவில் இருந்து உருவான முட்டையினிடமாக பலநிறம் கலந்த பறவைகள் வெளிப்படும் விசித்திரத்தையும் நீ பாராய். உருவமற்ற அந்த சக்தியின் நியமமில்லாவிடில் அரசனில்லா பட்டணம் போலவாம். மேலும் உஷ்ண சுபாவமான அக்கினி, குளிர் சுபாவமான ஜலம் ஆகும். கசப்பு மதுரமாய் மாறும். தகுதியற்றவனும் வேதத்தை ஓதுவான். சலனமற்ற மலைகளும், சலனமுள்ள மேகங்களாக மாறும். கடல் களெல்லாம் மண்திடல்களாகும். ஜகத்தானது இப்படி மாறுதல் அடைந்து போகும்.

ஆர்க்கும் காணவும் அறியவும் படாது என்றும் அவாச்சிய வடிவு என்றும்
சேர்க்கும் நாம ரூபப் பயிர் வித்து என்றும் செப்பிய சிற்சத்தி
பேர்க்கும்ஆறு எங்ஙன் பிரித்திடப் படாது எனின் பிரமபாவனை ஒன்றாப்
பார்க்கும்ஆறு எங்ஙன் முத்தியாகுவது எங்ஙன் பரம சற்குரு மூர்த்தி 101

101. குருதேவா! பிரமத்திற்கு வேறாகாமலும், பிரமம் ஆகாமலும் விளங்கும் மாயாசக்தி, ஒருவர்க்கும் காணமுடியாதது என்றும், இத்தகையதென்று அறியமுடியாதது என்றும், அது அநிர்வசனீயம் என்றும், அது நாம, ரூபங்களைத் தோற்றி வைப்பதற்கு மூல காரணம் என்றும் சொன்னீர். இத்தகைய மாயையை நீக்கும் வழி யாது? விலக்க முடியாதது எனின், அகம் பிர்மாஸ்மி என்னும் அத்வைதப் பாவனையால் என்னையும், பிரமத்தையும் ஏகரூபமாக அறிவது எப்படி? சர்வ துக்க நிவர்த்தி; பரமானந்தப்பிராப்தி வடிவ மோக்ஷம் உண்டாவது எப்படி? இதை அருள்வீராக.

வாயுத் தம்பனம் சலத்தம்பனம் மணி மந்திரம் மருந்தாலே
தேயுத் தம்பனம் செய்திடில் அதில் அதில் சிறந்த சத்திகள் எங்கே
நீ அச்சச்சிதானந்தமாய் வேறொன்றும் நினைந்திடாது இருப்பாயேல்
மாயச் சத்தி போம் ஈதன்றி மந்திரம் மறைகளில் காணோமே 102

102. அன்பனே! ஒரு மந்திரவாதியானவன் மணி, மந்திர, மருந்தால் வாயுத்தம்பனமும், அக்கினித்தம்பனமும், ஜலத்தம்பனமும் செய்தால் அதில் அதில் உள்ள சக்தி குறைந்து காட்டுகிறதல்லவா? அதுபோல் நீயும், இந்த மாயைக்கு ஆதாரமான சச்சிதானந்த பிரமமாய் வேறு ஒரு பொருளையும் வாஸ்தவமாக நினைக்காமல் இருந்தால், இந்த மாயாசக்தி ஒழிந்து போம். மாயையொழிவதற்கு "நான் பிரம சொரூபன்" என்ற மந்திரத்தைத் தவிர வேறு மந்திரங்கள் வேதங்களில் காணோம்.

மேவும் மண்ணில் அவ்வியத்தமே வியத்தமாம் விவகரித்திட வேண்டில்
நாவினால் மண்ணைக் குடம் என்பர் அக்குடம் நசிப்பதும் நாவாலே
பாவு நாம ரூபங்களை மறந்து மண் பார்ப்பதே பரமார்த்தம்
சீவபேத கற்பிதங்களை மறந்து நீ சின்மயம் ஆவாயே 103

103. அன்பனே! மண்ணின்கண் முன்பு இல்லாதிருந்தது குடம், பின்பு நாவினால் அந்த மண்ணையே குடம் என்பர். அந்த மண்ணைத் தவிர, குடம் என்பதற்குப் பொருள் முக்காலத்திலும் இல்லை. அந்தக் குடம் அழிந்தது என்பதும் சொல்மாத்திரந்தான். மண் முக்காலத்திலும் மண்ணாகவே இருக்கின்றது. விவகார நிமித்தம் மண்ணைக்குடம் என்பர். ஆகையால் குடமென்ற நாம, ரூபங்களை உபேக்ஷித்து, மண் பார்ப்பதே பரமார்த்தம். அதுபோல் ஜீவேஸ்வர ஜகத்து என்னும் நாம ரூப வேறுபாடுகளைக் கற்பிதம் என்று நீக்கி சச்சிதானந்த வடிவ பிரம்மமாகவே வாழக் கடவாய்.

இதன் உள்ளுரை : மண்ணைத் தவிர குடம் இல்லாமை போல, பிரமத்தைத் தவிர ஜீவேஸ்வர ஜகத்து இல்லை. குடம் மண்ணைத் தவிர இன்மையின், குடம் தோன்றியதென்பதும், ஒடுங்கியதென்பதும் சொல் மாத்திரமாய் இருப்பது போல, ஜீவேஸ்வர ஜகத்து பிரம்மத்தைத் தவிர இன்மையின், ஜகத்து தோன்றியது என்பதும், ஒடுங்கியது என்பதும் சொல் மாத்திரமேயாம். குடத்தின் நாம ரூபங்களை ஒழித்து அதனை மண்ணாய்ப் பார்ப்பது பரமார்த்தமாவது போல், ஜீவேஸ்வர ஜகத்தென்னும்

நாம ரூபங்களை ஒழித்து அதனை பிரம்ம வடிவமாய் காண்பதே பரமார்த்தமாம் என்று அறியத் தக்கதாம். இதுகாறும் மாயையின் இலக்கணம் கூறிமுடித்தார். மேல் மாயாத் தோற்றம் நீக்கி சுகமடைய உபாயம் மூன்று கவியால் கூறுகின்றார்.

பூரிக்கும் கன சச்சிதானந்தத்தில் பொய் சடம் துயர் மூன்றும்
தூரத்தாயினும் தோன்றுபாழ் விபரிதம் துடைப்பது எப்படி என்றால்
நீரில் தோன்றும் தன்நிழல் தலைகீழதாய் நின்று அலையினும் நேராய்ப்
பாரில் தோன்றிய தன்னை நோக்கிடில் அந்தப் பாழ்நிழல் பொய்யாமே104

104. குருதேவா! எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கின்ற சச்சிதானந்த பிரமத்தில், அசத்து, சடம், துக்கமாகிய மூன்றும் பிரபஞ்ச வடிவமாயினும், அவைகள் எனக்குத் தோன்றுகின்றன. அந்த தோற்றம் தோன்றாமலிருப்பதற்கு வழி யாது? அதை அருள்வீராக. அன்பனே! ஜலத்தில் தோன்றும் தனது சாயையானது தலைகீழாகத் தோன்று மானாலும், கரையில் நிற்கும் தன்னை நோக்குவானாயின் அந்தச் சாயை பொய்யாய் அவனுக்குத் தோன்றும். அதுபோல் உனது கற்பித பேதமான நாம ரூபங்கள் தோன்றுமாயினும், பிரம்மமான உன்னை நோக்கினால் அந்த தோற்றம் உனக்கு பொய்யாய்த் தோன்றும். ஜகத்தோற்றத்தை ஒழிக்க உபாயம் இதுவேயாகும். இதற்கு மேற்கோள் மகாராஜத் துறவில் "தோன்றிடும் உலகம் எங்கே தோன்றிடும் என்னை நோக்கில்" என்று கூறியிருப்பதால், பிரமத்தை நோக்க உலகத்திற்கு தனிப்பொருள் இல்லை என்பது தேற்றம்.

இதன் உள்ளுரை : நாம ரூப உலகம் தன்னை அறிந்த ஞானிகளுக்கு சோபாதிகமாம், அதாவது பொய்யென்று அறிந்த பின்னும் அனுபவத்தோடு தோன்றிக் கொண்டு இருப்பதாம். அதற்குத் திருஷ்டாந்தம் யாதோ எனின், ஒரு தடாக நீரில் பார்ப்பவன் தான் தலைகீழாக நிற்பதாகத் தோன்றினாலும், அந்தத் தோற்றம் பொய்யென்றும் தான் நேராகவே நிற்கின்றோம் என்றும் அறிவது போல, தான் ஒரு ஜீவனாகத் தோன்றினும் பேரறிவு சொரூபனேயாம் என்று அறிவது சோபாதிகத்தின் பொருளாம். இக்கவிக்கு கோ.வடிவேலு செட்டியார் அவர்கள் இயற்றியருளிய உரையில் "தெளிந்த குளத்தின் தீரத்தில் இருப்பவன் தான் அங்குள்ள ஜலத்தில் அதோமுகனாகித் தோன்றுவது பொய் என்று நிச்சயித்த காலத்தும், அவ்வதோமுகம் தோன்றுவது போல் ஜீவத்துவம் முதலிய யாவும் மித்தை. சத்தியமான பிரத்தியகாத்மா தான் என்றறிந்த காலத்தும் ஜீவத்துவாதி பிரபஞ்சத்

தோற்றம் இருத்தலால் ஜீவன் முத்தனுக்கு பிராரத்துவ போக விவகாரம் அங்கீகரிக்கப் பட்டுள்ளதாம்" என்று கூறியிருப்பதால், ஞானிகளுக்கு சகல விவகாரமும் உடன்பாடாம். அரசாளுதல் முதலிய எவ்வித விவகாரங்களுக்கும் தகுதியுடையோர்கள் ஞானிகள் தாம் என்பதற்கு மேற்கோள் ஒழிவில் ஒடுக்கம் வெண்பா

"பூசி முடிப்பனவும் பூண்பனவும் பொன்துகிலும்
ஆசை மிகுந்த அரசியர்க்காம் - காசுஇற்ற
முண்டையர்க்காகா சீவன் முத்தனுக்குப் போகமலால்
குண்டை ஒப்பார்க்கு ஏன் இதுவாகும்"

என்று கூறியிருப்பதால் அறியற்பாலதாம்.

ஞானம் காரணம் அறிபொருள் காரியம் நாம ரூபப் பேய்கள்
ஆனதெப்படி அழிந்ததெப்படி என ஆய்குதல் பலனன்றே
மான மைந்தனே தீர்க்க சொர்ப்பன சகம் வந்ததும் பாராமல்
போனதும் நினையாமல் உன்போதமாய்ப் பூர்ணமாய் இருப்பாயே 105

105. அன்பனே! அறிவுப்பொருள் காரணம். அறிபடுபொருள் காரியம். இவ்வாறான காரிய, காரணங்களைப் பற்றி நீ விசாரிக்க வேண்டாம். காரியமான நாம ரூபப்பேய்கள் உண்டாவது எப்படி? அது தோன்றாமல் அழிவது எப்படி? என்று விசாரித்தல் பயனற்றதாம். ஆனால் நாம் செய்யத் தக்கது யாது எனின், நீண்ட சொப்பன சமானமான பிரபஞ்சம் இன்ன காரணத்தால் உண்டாவது என்பதையும், எவ்வுபாயத்தால் போம் என்பதையும் விசாரியாமல், உன்னது ஆத்மாவாய் பரிபூரண பிரமமாய் இருக்கக் கடவாய். இதுவே நீ செய்யத் தக்க உபாயமாம். இதில் காரியம் தத்தபட நியாயம் போல் பொய்யாம் என்பதற்கு மேற்கோள் கீதாசாரம் "தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம் போல்வதல்லால், பரந்த சகம் காரியத்தில் பயன்படாது என்றவரோ." தீர்க்க சொப்பனக் காட்சி போன்றது ஜீவேஸ்வர சகத்து என்பதற்கு மேற்கோள் கீதாசாரம் 85. "சொற்பனத்தில் தனித்து ஒருவன் தோற்றம் வேறில்லை அங்கே, கற்பனையாம் பொருளறிவு காண்பவன் போல் என்றவரோ" என்று கூறியிருப்பதால் இந்நூல் ஆசிரியரும் சொப்பன சமானம் பிரபஞ்சம் என்றார். காரணமான அறிவையன்றி காரியமான அறிபடுபொருள் முக்காலத்தும் இல்லை என்பதற்கு மேற்கோள் சிவஞான வள்ளலார் சாத்திரம் பக்கம் 209. "அறிவையன்றி அறியப்படு பொருள் சிறிதுமில்லை எனத் தெளியா விடின், மறியும் ஐம்புல வரதைத் திரைகளில், பிறவி மைக்கடல் வீழ்வை பெருந்தவ" என்பதனால் அறியலாம்.

அசத்தில் எம்மட்டு உண்டு அம்மட்டும் பராமுகமாகினால் அம்மட்டும்
நிசத்தில் உள்விழிப் பார்வையாம் இப்படி நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தில் உன்மனம் நின்று சின்மாத்திர வடிவமாயிடின் மைந்தா
கசத்த தேகத்து இருக்கினும் ஆனந்தக் கடல் வடிவு ஆவாயே 106

106. அன்பனே! பொய்யான நாம ரூபப் பிரபஞ்சத்தில் எவ்வளவுக் கெவ்வளவு அபிமானம் வைத்திருந்தனையோ அவ்வளவுக்கவ்வளவு அபிமானம் விடப்படுமாயின் அவ்வளவுக்கவ்வளவு அகமுகப்பார்வை உண்டாகும். இவ்வாறு இடைவிடாது பழகி வந்தால் உன் மனம் உன் வசத்தில் நிற்கும். அங்ஙனம் நின்றால் சித்துரூப வடிவமாய் விடும். இங்ஙனம் நீ ஆத்ம சொரூபமான பிறகு, வெறுக்கத் தக்க இந்த சரீரத்தில் இருந்தாலும் நீ ஆனந்தக்கடல் வடிவாவாய். இதில் உள்விழிப் பார்வை என்பது கண்களை உள்ளே திருப்பிப் பார்ப்பது அன்று. கண்ணின் கருவிழிகளை மேலே சொருகிப் பார்ப்பதுமன்று. பின் யாது பொருளோ எனின், அகம் பிரம்மாகார விருத்திக்கே உள் விழிப்பார்வை எனப் பெயராம். இதுகாறும் மாயா நிவிர்த்தி உபாயம் கூறி முடித்தார்.

தானன்றி வேறொன்றும் இல்லாத பூரணச் சச்சிதானந்த குணமாய்
ஊனின்ற உயிர்தோறும் ஒன்றாகும் என்றால் அஃது ஒக்கின்றபடி கண்டிலேன்
நானென்ற சீவன்கள் சத்தான வகைஒக்கும் ஞானங்கள் வெளிகண்டதால்
ஆனந்தம் இதுபோல வெளியாக உதியாத அடைவுஏது குருநாதனே 107

107. குருதேவா! சச்சிதானந்த சொரூபமான ஆத்மாவாய தன்னைத் தவிர, வேறு ஒரு பொருளும் நித்தியமாக இல்லை. அங்ஙனமிருக்க, ஒவ்வொரு உயிராக உடம்பு தோறும் இருப்பது அந்த ஒரே சச்சிதானந்தப் பொருள்தான் என்பது பொருந்தவில்லை. ஏன் எனில், நான் நான் என்று ஒவ்வொரு ஜீவர்களிடத்திலும் இருந்து கொண்டு விவகரிக்கின்ற படியினால் இந்த ஆத்மா சத்து என்பது ஒக்கும். சகல பதார்த்தங்களையும் அறிகின்றபடியினால் சத்தே சித்தென்பதும் பொருந்தும். இதுபோல் எல்லா விருத்திகளிலும் ஆனந்தம் தோன்றாத காரணம் யாது? இதை அருள்வீராக.

உருவங்கள் இரதங்கள் பரிசங்கள் ஒருபூவில் ஒன்றாகும் என்றாலுமே
கரணங்கள் ஓரொன்றில் ஓரொன்று தெரியும் கணக்கன்றி வாராதுகாண்
அருமந்த சச்சிதானந்தச் சுபாவங்கள் ஆன்மாவின் வடிவாகிலும்
பிரபஞ்ச மயமாம் விருத்தி பேதத்தினால் பேதங்களாம் மைந்தனே 108

108. அன்பனே! உன் வினாவிற்கு மூன்று கவிகளால் விடையளிக்கின்றேன். ஒரு புஷ்பத்தினிடமாக கண்ணினால் அறியும் உருவமும், நாவினால் அறியும் ரசமும், தோலினால் அறியும் ஸ்பரிசமும் (ஊறும்), ஆகிய இவை இருக்கின்றன. ஆனாலும், கண்ணினால் கந்தத்தையும், மூக்கினால் உருவத்தையும் அறிய முடியாது. அது அது ஒவ்வொன்றைத்தான் கிரகிக்க முடியும். அதுபோல், சச்சிதானந்தம் ஆத்மாவின் சொரூப குணமானாலும், பிரபஞ்ச மயமான விருத்தி பேதத்தினால் ஆத்மா வேறு, ஆனந்தம் வேறு போல் தோன்றும்.

தாமதம் இராசதம் சாத்துவிதம் முக்குணத்தால் வரும் விருத்தி மூன்றாம்
ஆம் அவைகள் மூடமும் கோரமும் சாந்தமும் அபிதானமாகும் மகனே
ஏமுற இருக்கின்ற சச்சிதானந்தங்கள் என்றென்றும் ஒன்றாகிலும்
நாம் உரைக்கும் விருத்திப் பிரிவினால் சொருப ஞானாதி பிரிவாகுமே 109

109. அன்பனே! மேலும் சச்சிதானந்தங்கள் பேதப்படுவதற்குக் காரணம் கேட்பாய். தமோகுண விருத்தி, ரஜோகுண விருத்தி, சத்துவகுண விருத்தி என விருத்திகள் முக்குணத்தால் உண்டாகும். இதற்கு முறையே மூடவிருத்தி எனவும், கோரவிருத்தி எனவும், சாந்த விருத்தி எனவும் பெயர் பெறும். இன்பமே வடிவமான சச்சிதானந்தங்கள் எப்பொழுதும் ஒரு தன்மை உடையதானாலும், நாம் முன் கூறிய விருத்தி பேதத்தினால் சச்சிதானந்தங்கள் வேறு வேறாகத் தோன்றும். அங்ஙனம் தோன்றினாலும், அது வேறு வேறு அன்று.

சடமான மூடத் தருக் கல்லு மண்களில் சத்து ஒன்றுமே தோன்றுமால்
விடமான காமாதி கோரத்தில் ஆனந்தம் விளையாது மற்றவைகளாம்
திடமான ஒழிவாதி சாந்தத்திலே சச்சிதானந்தம் மூன்றும் வெளியாம்
மடமான மூடங்கள் கோரங்கள் விடு சாந்த மனமாகில் ஆனந்தமே 110

110. அன்பனே! நமது எண்ணங்களுடைய பேதத்தால் சச்சிதானந்தங்கள் பேதப்படுவது போல் தோன்றும். அது எங்ஙன மெனின், அறிவற்ற சடப்பொருள்களான கல், மண் காய்ந்த மரம் முதலியவைகளில் பிரம்மம் சத்தா மாத்திரமாய் விளங்கும். ஏனைய சித்தும் ஆனந்தமும் விளங்காது. காமாதி கோர விருத்தியிலும், மயக்கமான மூட விருத்தியிலும், சத்தோடு சித்தும் விளங்கும். ஆனந்தம் விளங்காது. சாந்தமான விருத்தியில் சச்சிதானந்தமான மூன்றும் விளங்கும். கோரமான விருத்தியும், மூடமான விருத்தியும் விட்டால், சமதமாதி சாதனங்களின் வாயிலாக பிரம்மத்தின் ஆனந்தமும் வெளியாகும்.

இதன் உள்ளுரை : பரம்பொருள் எங்கும் நிறைந்திருக்கும் போது அது கல், மண் முதலியவைகளிலும் இருக்க வேண்டுமே எனின், நெருப்புப் பெட்டியில் நெருப்பிருந்தாலும் அது இருளை நீக்காது. அன்றி சாதக பாதகமுமில்லை. அதைத் தட்டியெழுப்பினவுடன் ஒளி ஏற்பட்டு இருளை நீக்குகின்றது போல் பிரமம் சத்தாமாத்திரமாய் இருக்கும்போது சாதக பாதகமில்லை. அன்றி அஞ்ஞான இருளையும் நீக்கவில்லை. நீக்கு மெனின் சுழுத்தி அவஸ்தையிலுள்ள அஞ்ஞான இருளைப் போக்காதது அனுபவம் அல்லவா? ஆகையால், அது சித்தாக (அறிவாக) வெளிப் படும்போது சாதக பாதகம் உண்டு. அகம் பிரம்மாகார விருத்தி யினால் அஞ்ஞான இருளையும் நீக்கி ஆனந்தம் அடையலாம். எங்கு அந்தக்கரணமுண்டோ, அங்கு தான் சித்து விளங்கும். அந்தக்கரணம் இல்லாத விடத்தில் விளங்காது. இந்த அந்தக்கரணம் ஜீவர்களிடத்தில் தான் காணமுடியும். சடப்பொருள்களில் காணமுடியாது. இக்காரணம் பற்றி சகல நூலாசிரியர்களும் ஜீவனையே கடவுளாகப் பகர்ந்துள்ளார்கள். மேற்கோள் திருமந்திரத்தில் "ஜீவன் பரசிவனாமே" என்றும், சிவஞான வள்ளலார் சாத்திரம் பக்கம் 160ல்,

ஈசன் வேறு யான் வேறு என்று எண்ணுகின்ற பாதகரை
நீசரெனக் கண்டுநினை என்றான் – ஆசையொடும்
வேத முடிவறிந்த வேதியரைக் கூடென்றான்
பேத நிலையெல்லாம் பிரியென்றான்

என்றும் கூறியிருப்பதால் அறியலாம்.

**அவதாரிகை**

முன்கவியில் தொகுத்துக் கூறிய சச்சிதானந்த இலக்கணத்தை இக்கவியில் வகுத்துக் கூறுகின்றார்.

இகமான குருநாதனே சச்சிதானந்தம் எ(ன்)னும் இலக்கணம் அறிகிலேன்
அகலாத சத்தாவது ஏது சித்தாவது ஏது ஆனந்தம் ஏது என்றிடில்
மிகு காலம் மூன்றும் கெடாதிருப்பது சத்து வேறுபாடு அறிதல் சித்தாம்
மகிழ் காமம் நுகர்போது சுகமாகும் அனுபூதி வாழ்வு என்பது ஆனந்தமே 111

111. குருதேவா! சச்சிதானந்தத்தின் இலக்கணம் அறிந்திலேன். சத்தென்பது யாது? சித்தென்பது யாது? ஆனந்தமாவது எது? இதன் இலக்கணத்தை அருள்வீராக. அன்பனே! உன் வினாவிற்கு ஒன்பது கவிகளால் விடையளிக்கின்றேன். மூன்று காலத்திலும் மாறுதலடையாமல்

இருப்பது பிரமத்தின் சத்தா மாத்திரமாம். ஒவ்வொரு விஷயங்களையும் இது இன்னது, இது இன்னது என்று அறிதல் எதுவோ, அது பிரம்மத்தின் சித்து அம்சமாம். இஷ்ட பதார்த்தம் கிடைத்தபோது அதை அனுபவிக்கும் தருணத்தில் உண்டாகும் ஆனந்தம் பிரம்மத்தின் ஆனந்த அம்சமாம். இவை மூன்றும் ஆத்மாவாய பிரமத்தின் சொரூப குணங்களாம்.

நாசச் சரீரத்து இருக்கும் சரீரிதனை நால்வேத மாவாக்கியம்
நீ சச்சிதானந்தம் என்றிடினும் ஆசிரியர் நீ பிரமமாவை எனினும்
மாசற்ற சச்சிதானந்தம் நான்என்ன இவன்மன்னும் அனுபவம் எங்ஙனே
கோசப் புரங்களை இடித்துத் தகர்க்கும் மத குஞ்சரக் குருநாதனே 112

112. குருதேவா! நாசத்தை அடையும் இந்த சரீரத்தை நான் என்று அபிமானிக்கும் சரீரியை அதாவது தேகியை, நான்கு வேதங்களின் முடிவில் கூறிய நான்கு மகாவாக்கியங்களும், நீயே சச்சிதானந்தப் பிரமம் என்று உபதேசிக்கினும், நீயே சுத்தப் பிரமம் என்று சற்குரு உபதேசிப்பினும், குற்றமற்ற அந்த சச்சிதானந்தப் பிரமம் நானே என்ற அனுபவம் இந்த சரீரியான புருஷனுக்கு எப்படி உண்டாகும். இதை அருள்வீராக. பஞ்ச கோசங்களான முப்புரத்தை ஆத்மா அல்லவென்று நேதி செய்து மித்தையாக்கிக் காட்டுவதில் மதயானையைப் போன்ற சாமர்த்தியம் உடைய குஞ்சரக் குருநாதனே!

இதன் உள்ளுரை : நான்கு மகா வாக்கியமாவன :- ரிக் வேதத்தின் ஐதரேய உபநிஷதத்தில் உள்ளது "பிரக்ஞானம் பிரம்மம்" என்னும் மகாவாக்கியம். யஜுர் வேதத்தின் பிருகதாரண்யக உபநிஷதத்தில் உள்ளது "அகம் பிரம்மாஸ்மி" என்னும் மகாவாக்கியம். சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிஷதத்தில் உள்ளது "தத்துவமசி" மகாவாக்கியம். அதர்வண வேதத்தின் மாண்டூக்கிய உபநிஷதத்தில் உள்ளது "அயமாத்மா பிரமம்" என்னும் மகாவாக்கியம். இந்த நான்கு மகாவாக்கியங்களும் பேரறிவே வடிவமான தன் சொரூபத்தையே உணர்த்தி நின்றது எனக்கொள்க.

சென்மாந்தரம் செய்த வினைகள் உடல்தரும் எனில்
செல்காலம் இவன் உண்டலோ
கன்ம அனுபவம் நரக சொர்க்கம் எனில் வருகின்ற
காலத்தும் இவன் உண்டலோ

உன்மாத யாதனா உடல் கடவுள் உடல் மனுட
உடன் மாறிமாறிஅழியும்
தன் மாய உடல் கெடினும் இவன் இருப்பது கொண்டு
சத்து என்பது ஒக்கும் மகனே 113

113. அன்பனே! போன ஜென்மத்தில் செய்த கருமத்தின் பயனாக இந்த சரீரம் வந்தது என்று சொல்லும்போது, சென்ற காலத்தில் இந்த சரீரியான ஆத்மா உண்டல்லவா! இப்போது செய்யும் கருமத்திற்குத் தக்க பலன் வருங்காலத்தில் அனுபவிக்க போகின்றது என்று கூறும் போது, வருகின்ற காலத்தும் இந்த ஆத்மா அழியாமல் இருக்கின்ற தல்லவா. துக்கத்தை அனுபவிப்பதற்கிடமான சூட்சும சரீரமும், சுகத்தை அனுபவித்தற்கிடமான தேவ சரீரமும், சுகதுக்கத்தை கலந்து அனுபவிப் பதற்கிடமான மானிட சரீரமும் ஆகிய இந்த சரீரங்களை விளக்கிக் கொண்டிருப்பதால் நிகழ்காலத்திலும் இந்த ஆத்மா உண்டல்லவா? மேற்கூறிய சரீரங்கள் நசித்தாலும், ஆத்மா நாசமடையாமல் இருப்பதால், அது மூன்று காலத்தும் மாறுதல் அடையவில்லை. ஆகையால் அது சத்து என்பது பொருந்தும். இதில் ஆத்மா அழியாத பொருள் என்பதற்கு போன ஜென்மத்தை எடுத்துக்காட்டியது கிரம சிருஷ்டியை அனுசரித்துக் கூறியதாம். மூன்று காலம் என்பதற்கு ஜாக்கிர, சொப்பன, சுழுத்தி எனக்கொள்க.

இருளாக மூடும் சுழுத்தியில் இராத்திரியில் இரவிசுடர் அற்றபொழுது
மருளாமல் இருளையும் பொருளையும் தெரிகின்ற வகைகொண்டு சித்தாகுமே
பெருவாழ்வு மிக்க தானே தன்னிடத்தினில் பேராத பிரியம் அதனால்
அருகாத பிரியம் சுகத்தில் வரும் ஆதலால் ஆனந்தமாம் மைந்தனே 114

114. அன்பனே! முன்கவியில் சத்து லட்சணம் சொன்னேன். இந்தக் கவியில் சித்து லட்சணமும், ஆனந்த லட்சணமும் கூறுகின்றேன் கேட்பாய். சுழுத்தி அவஸ்தையில் உள்ள அஞ்ஞான இருளையும், இராக்காலங்களில் உள்ள பூத இருளையும், இவ்விருளினால் ஆத்மாவான தான் மறைபடாமல் அவ்விருளைக் காண்பதுவும் அன்றி, பகற்காலத்தில் உள்ள பொருள்களையும் அறிகின்ற காரணத்தால் சத்தே சித்தாகும். எல்லாப் பிரியங்களுக்கும் ஆத்மா மேலான பிரிய சொரூபமாய் இருப்பதாலும், சகல விஷயங்களையும் ஆனந்த மயமாக்குவதாலும், இந்த ஆத்மா ஆனந்தமாம். இதில் சூரியன், சந்திரன், அக்கினி முதலிய எல்லாப் பிரகாசங்களுக்கும் பிரகாசத்தை அளிப்பது ஆத்மாவாய பிரமமாம். அதுவே ஆனந்தமாம். அது தன் நிஜ சொரூபமாம்.

அன்ன பானாதி சுகசாதனமது ஆகையால் ஆர்க்கும் வெகுபிரியமாகும்
இன்னவாறு ஆன்மாவும் ஆனந்த சாதனம் எனக் கருதல் பொருளல்லவே
சொன்ன ஆன்மாவை ஒரு சுகசாதனங்களொடு சொல்லுவாயாகின் மகனே
உன்னது ஆனந்தம் வேறேது அனுபவிப்பது ஆர் உபய ஆன்மாவும் உளவோ 115

115. அன்பனே! மேற்கூறிய ஆனந்த சொரூபமான ஆத்மா, உண்பன, பருகுவன போன்றுள்ள சுகசாதனப் பொருள் அன்றாம். பின்னர் யாது பொருளோ எனின், ஆத்மா சுகப்பொருளாம். அன்னபானாதி முதலிய சுகசாதனப் பொருள்கள் எல்லோருக்கும் பிரியமாகும். அதுபோல் ஆத்மாவையும் சுகசாதனமாகக் கருதுவது கூடாது. மேற்கூறிய ஆத்மா சுகசாதனமானால் உன்னுடைய ஆனந்தம் வேறே ஏது? அனுபவிப்பது யார்? ஆத்மாவாகிய உன்னைத் தவிர அனுபவிப்பதற்குக் கர்த்தா யார்? இரண்டாத்மா இல்லையே! நிரதிசயானந்தம் வேறு; அதை அனுபவிக்கும் ஆத்மா வேறு என்பதில்லை. அந்த ஆத்மாவே ஆனந்தமாம். அது அதற்கு சாதனமாகாது என்பதாம்.

இதன் உள்ளுரை : இதனால் ஆத்மா தன்னைத் தானே அனுபவிக்க முடியாது என்பதாயிற்று. இவ்வாறே பஞ்சதசி 201வது பக்கத்தில் "ஆத்மா தானே அனுபவமென்னும் நித்திய ஞான வடிவமாயிருத்தலால் அதற்கு அனுபவிக்கப்படும் தன்மையில்லை. ஏன் எனின், ஆத்மாவிற்கு அன்னியமாக, ஞாதாவாகிய அறிபவனும், ஞானமாகிய அறிவும் இல்லாமையால் ஆத்மா தன்னைத் தானே அனுபவிக்க முடியாததாம்" என்று கூறியிருப்பதால், ஆத்மா தானே தனக்கு அறிபடு பொருளாய் அனுபவிப்பது கூடாததாம். இக்காரணம் பற்றியே ஆத்மா சுகசாதனமன்று என்று இந்நூலாசிரியர் மறுத்தவாறு காண்க. மேலும் ஆத்ம புராணம் பக்கம் 45ல் "இவ்வஸ்து எனது சுக சாதனம்; இவ்வஸ்து எனது துக்க சாதனம் என்னும் இவ்வகையாய ஞானம் போகம் எனப்படும். அது சேதனமாய ஆன்மாவின் கண்ணேயே கூடும். ஏனெனின், எல்லா ஜடவஸ்துக்களும் சேதனமாய ஆன்மாவின் சுகசாதனமாம். ஜட வஸ்து, ஜடத்தின் சுக சாதனமன்றாம். ஆகையினால், போகத்தின் ஆஸ்ரய வடிவ போக்தா ஆத்மாவாம். போகரூபக் கிரியையின் கர்த்தாவும் ஆத்மாவேயாம். ஜடவஸ்து அன்றாம். ஏனெனின், சுதந்திரன் கர்த்தா எனப்படுபவன். அச்சுதந்திர தன்மை ஆத்மாவின் வேறாய ஜடவஸ்துவில் பொருந்துவதில்லை. ஆகையால், கர்த்தாவும், போக்தாவும் ஆத்மாவேயாம்" என்று

கூறியிருப்பதால் ஆத்மாவே அனுபவிக்க வேண்டும் என்று கூறுபவர்கள் எல்லாம் "அரங்கின்றி வட்டாடியற்றே நிரம்பிய நூலின்றிக் கோட்டிக் கொளல்" என்ற பொய்யாமொழிக்கு இலக்கானவர்கள் என்பதற்கு ஐயமில்லை பாவம்! மேலும் இந்நூல் தத்துவ விளக்கப் படலம் 74வது கவிக்கு ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகளின் உரையின் ஈற்றில் "ஓர் கிரியைக்கு யாது கர்த்தாவாமோ, அது கருமம் ஆகாது. இதனால் பிரகாசத்தின் கர்த்தாவும் தான், பிரகாசத்தின் கருமமும் தானேயென்று சொல்லுதலும் விரோதமாம்" என்று கூறியிருப்பதால் கர்த்தாவும் கருமமும் ஒன்றாகாது என்பதாயிற்று. ஆகுமானால் தியானிப்பவனும் அல்லது அனுபவிப்பவனும், அனுபவிக்கப்படும் பொருளும் ஒன்றாதல் விரோத தருமமாம். ஆகையால் அனுபவிக்க வேண்டும் என்ற பிராந்தியை விட்டு, அனுபவ வடிவமான ஞான சொரூபமாய் எஞ்சி நிற்பாய். இதை விசார சாகரத்தின் ஆறாம் தரங்கத்தில் "சிஷ்யனே தீனத்தன்மையை விட்டு உன் சொரூபத்தைப் பார். நீயோ ஜனனமில்லாத சுத்தப்பிரமம். பார்க்கப்படுவனவற்றை யெல்லாம் பிரகாசம் செய்கின்றாய். உன் அஞ்ஞானத்தால் ஜகத்தை யெல்லாம் நீ சிருஷ்டித்தப் பிறகு மறுபடியும் எல்லாவற்றையும் நாசம் செய்து நாசமற்றவனாயிருக்கின்றாய். மித்தியாப் பிரபஞ்சத்தைப் பார்த்து சிறிது கூட மனவருத்தத்தை அடைய வேண்டாம். நீ தேவர்களுக்கெல்லாம் தேவனாயிருக்கின்றாய். ஆனந்த சொரூபியாயிருக்கின்றாய். மாயையினால் உன்னிடத்தில் ஜீவன், ஈசுவரன், ஜகத்து ஆகிய மூன்றும் விளங்குகின்றன. அது ரஜ்ஜுவில் சர்ப்பமும், கிளிஞ்சலில் வெள்ளியும் விளங்குவது போலாம்" என்று கூறியிருப்பதால், அனுபவிப்பது யார்? உபய ஆன்மாவும் உளவோ? என்றார் இந்நூலாசிரியரும்.

விடயசுகம் அதில்வருதல் பிரியம் மாத்திரமாகும்
வெகுபிரியம் ஆன்மாவிலாம்
விடயசுகம் வருபிரியம் மாறிவரும் ஆன்மாவில்
வெகுபிரியம் மாறாது காண்
விடயசுகம் விடலுமாம் கொளலுமாம் ஆன்மாவை
விடுவதெவர் கொள்வதெவர் பார்
விடயசுக போகங்கள் விடும் அவனை அவனால்
விடப்படாது ஒரு நாளுமே 116

116. அன்பனே! ஆத்மா ஒன்று அந்த ஆத்மாவை அனுபவிக்கும் மற்றொரு ஆத்மா இல்லை என்பதை விளக்கிக் காண்பிக்கின்றேன். விஷயானந்தத்தில் வரும் பிரியமானது அற்பமாம். ஆத்மாவில் வரும் பிரியம் மகத்தானதாம். அதற்கு காரணம் யாதோவெனின், விஷயானந்தத்தில் வரும் பிரியம் மாறி மாறி வரும். ஆத்மாவில் வரும் பிரியம் மாறாது. ஒரு விஷயானந்தத்தை விட்டு மற்றொரு விஷயானந்தத்தை பற்றுவதே, விஷயானந்தம் மாறி மாறி வரும் என்பதற்கு அனுபவமாம். அதுபோல், ஆத்மா தள்ளத் தக்கதும், கொள்ளத் தக்கதும் அன்று. ஆகையால் அந்த ஆத்மாவை விட்டவர் யார்? கொண்டவர் யார்? இதனால் விஷயானந்தத்தை விடத்தக்க ஆத்மா, தன்னை ஒரு காலத்தும் விடத்தக்கதல்ல. எனவே ஆத்மா தன்னைத் தானே பற்றுதலும் விடுதலும் இல்லை. மற்றொன்றைப் பற்றுதலும் விடுதலும் கூடும்.

வேகின்ற கோபங்களால் என்னை நான் கொன்று
விடுகிறேன் என்று சிலபேர்
சாகின்ற படியினால் தன்னையே தான் கொன்று
சாவன் எனல் சங்கையலவே
தேகம்தனைக் கொல்லும் அவனால் விடப்பட்ட
தேகம் அவன் அன்று மகனே
ஆகம்தனில் கோபம் அ(ல்)லது த(ன்)னை ஒருநாளும்
ஆன்மா வெறுப்பது இ(ல்)லையே 117

117. குருதேவா! ஆத்மா பிரிய வடிவமாயின் சிலர் தற்கொலை செய்து கொள்ளுகிறார்களே அது ஏன்? அன்பனே! ஒருவன் தற்கொலை செய்து கொண்டு இறந்தால், அவனால் வெறுக்கப்பட்ட உடல் அவன் அன்று. எனவே ஆத்மா தனக்கு அன்னியமான தேகத்தின்கண் வெறுப்பு ஏற்பட்டதே ஒழிய, தன்னிடத்தில் வெறுப்பு வந்ததில்லை. இதனால் ஆன்மா ஒரு போதும் தன்னை வெறுப்பதில்லை என்று அறிவாயாக. இதனால் ஆத்மாவிற்கு ஆனந்தம் சொரூப குணமாயிருந்தலால், அதற்கு எதிர்மறையான வெறுப்பு அதனிடம் இல்லை என்பதாம்.

தாகப்படும் பொருளிலும் மகன் பிரியமாம்
தனயனிலும் உடல்பிரியமாம்
ஆகத்திலும் பிரியம் இந்திரியமாம் கரணம்
அதனிலும் பிரியம் உயிராம்

*ஏகப் பிராணனிலும் வெகுபிரியம் ஆன்மாவில்*

இந்த ஆன்மா முக்கியம்

*ஊகத்தினால் கௌணம் மித்தை கர்த்தா மூன்றும்*

*ஒரோன்றில் அதிகம் மகனே* 118

118. அன்பனே! ஆத்மா பிரிய சொரூபம் ஆனாலும், அது தனக்கு அன்னியமான வஸ்துக்களையும் பிரியமாக்குவதில் உள்ள ஏற்ற தாழ்வை கேட்பாயாக. தனத்திலுள்ள பிரியத்திலும், புத்திரனிடத்திலே உள்ள பிரியம் அதிகமாம். புத்திரனிடத்திலே உள்ள பிரியத்திலும், தன் ஸ்தூல தேகத்தில் உள்ள பிரியம் அதிகமாம். தன் தூல தேகத்தைப் பார்க்கிலும், கண் முதலிய இந்திரியங்களில் உள்ள பிரியம் அதிகமாம். அதிலும், பிராணனில் உள்ள பிரியம் அதிகமாம். அதிலும், அதிகப் பிரியம் ஆத்மாவிலாம். இக்காரணத்தால் இந்த ஆத்மாவே முக்கியப் பிரிய வஸ்துவாம். யுக்தி வாயிலாகப் பார்க்குமிடத்திலும் கௌணாத்மா, மித்தையாத்மா, கர்த்தாத்மா என மூன்று விதமாம். இந்த மூன்று ஆத்மாவின் விளக்கம் அடுத்த கவியில் தொடரும்.

இதன் உள்ளுரை : யாவரும் பிரியப்படுவது பொருள். அந்தப்பொருளை வைத்து ஆளுவதற்கு மக்கள் பேற்றை விரும்பி மிகப் பொருட்செலவில் புத்திர காமேஷ்டி யாகம் செய்வதால், பொருளிலும் மகன் பிரியமாம். சிலர் அதிகப்பசி வந்த காலத்தில் மகனை விலைபேசி விற்று தம் உடலை பாதுகாப்பதனால், தனயனிலும் தம் உடல் பிரியமாம். காதடைப்பு, கண்ணோய் முதலிய இந்திரியங்களின் நோயை நீக்கிக் கொள்ள மருந்து உண்டு, பத்தியம் இருந்து தம் உடலை வாட்டுவதால், உடம்பைப் பார்க்கிலும் இந்திரியம் பிரியமாம். கை, கால் முதலிய இந்திரியங்களில் ஒன்றைத் துண்டித்தால் உயிர் பிழைக்கும் என்று மருத்துவர் கூறினால் அதற்கு நாம் உடன் படுவதால் இந்திரியங்களைப் பார்க்கிலும் பிராணன் அதிகப் பிரியமாம். சிலர் மோட்சத்தை அடைய விரும்பி கங்கா நதியில் வீழ்ந்து பிராணனை விடுவதால், பிராணனைப் பார்க்கிலும் ஆத்மாவே மிகப்பிரியமாம். இவ்வாறாக ஊகித்து உணருவோமேயானால் இந்தப் பிரியங்கள் எல்லாம் ஒன்றுக்கு ஒன்று அதிகமாகும். மேற்கூறிய பிரியங்களெல்லாம் கௌணாத்மா, மித்தையாத்மா, கர்த்தாத்மா ஆகிய மூன்றில் அடக்கிக் கூறுகின்றார் இந்நூலாசிரியர்.

கெடலான பொழுது இவன்காணிக்கு மகனான கெவுண ஆன்மா முக்கியம்
விடலாத உடலம் பரிக்கும்நாள் உடலான மித்தையான்மா முக்கியம்
திடமான நன்மை கதி வேண்டினால் கர்த்தனாம் சீவ ஆன்மா முக்கியம்
சடம் மாயும் முத்தியினில் ஞான ஆன்மாவான தானே மகாமுக்கியம் 119

119. அன்பனே! பிரியத்தின் ஏற்றதாழ்வை இன்னும் கேட்பாய். ஒருவன் மரண காலத்தில் சகல தனத்தையும் புத்திரனுக்கு உரிமையாகக் கொடுப்பதால், தனத்தைப் பார்க்கிலும் புத்திரனாகிய கௌணாத்மா முக்கியம். ஸ்தூல தேகத்தை போஷிக்கச் செய்வதால், அவனுக்கு தூல தேகமான மித்தையாத்மாவே முக்கியமாகும். பெரிய தவத்தைச் செய்து மோட்சத்தை அடைய விரும்புவதால், அதற்குக் கர்த்தாத்மாவான ஜீவாத்மாவே முக்கியமாம். தத்துவ விசாரம் செய்யும் உத்தம புருஷனுக்கு, இந்த மூன்று ஆத்மாவைப் பார்க்கிலும் சச்சிதானந்த சொரூபமான தானே மிக முக்கியமாம்.

புலியும் அனுகூலம் எனில் இட்டமாம் பகைசெ(ய்)யில்
புதல்வன் எனினும் வெறுப்பாம்
உலகில் இருவகையும் அல்லாத புல்லாதியில்
உதாசீனமாம் ஆதலால்
மலினம்அறு சின்மயன் பலவகையும் இப்படி
மகிழ்ச்சியில் விருப்பம் இகழான்
அலகில் ஆனந்த வடிவாகும் உன் சொரூபத்தை
ஆராய்ந்து பார் மைந்தனே 120

120. அன்பனே! விஷயங்களிலுள்ள பிரியம் நிலைபெறாது மாறி மாறி வருவது போல் ஆத்மாவில் உள்ள பிரியம் மாறாது ஒரு தன்மைத் தாய் இருப்பதால் ஆத்மாவின் சொரூபானந்தம் மாறாது. ஒரு புருஷனுக்கு பிரதிகூலமான புலியாயினும், அவனுக்கு அனுகூல காரியம் செய்யுமாயின் அதனிடத்தில் அவனுக்குப் பிரியம் உண்டாகும். இதுபோல் தன் புத்திரனாயினும் பிரதிகூல காரியத்தைச் செய்தால் அவன்மேல் வெறுப்புண்டாகும் அல்லவா. புல் முதலியவைகளும் ஓர் சமயத்தில் விருப்புக்கும், மற்றோர் சமயத்தில் வெறுப்பிற்கும் காரணமா யிருக்கின்றன. சித்து வடிவமான ஆத்மா இப்படி பலவஸ்துக்களில் தனது பிரியத்தை வெளிப்படுத்தினாலும், தனது சொரூபானந்தத்தை விடாதிருக்கின்றன. ஆகையால் உன் வாஸ்தவ சொரூபத்தை பஞ்ச கோசத்தினும் வேறுபிரித்து ஆனந்த சொரூபம் ஆவாய். இதுகாறும் ஆத்மாவின் பிரியத்தின் ஏற்றதாழ்வைக் கூறி முடித்தார்.

மானம் சிறந்த குருநாதனே ஆனந்த
வகைகள் எத்தனை என்னிலோ
ஞானம் திகழ்ந்த பிரமானந்தம் வாசனா
னந்தம் விடயானந்தம் என்று
ஆனந்தம் மூன்றுவிதம் எட்டுவகை என்பர்சிலர்
அவ்வைந்தும் இதில் அடக்கம்
ஆனந்த வகை சொ(ல்)லக்கேள் மைந்தனே எட்டும்
இஃது இன்னது இன்னது எனவே 121

121. குருதேவா! ஆத்மா ஆனந்த சொரூபம் என்று சொன்னீர் அல்லவா. அந்த ஆனந்தம் எத்தனை விதமாய் இருக்கும் என்பதை அருள்வீராக. அன்பனே! இது முதல் பதினோரு கவிகளால் உன் வினாவான ஆனந்தத்தின் வகை தொகைகளைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. ஞானவடிவான பிரமானந்தம், வாசனானந்தம், விஷயானந்தம் என்று ஆனந்தம் மூன்று விதமாயிருக்கும். இதை எண் வகை ஆனந்தம் என்றும் சிலர் சொல்லுவார்கள். அவை ஐந்தும் இந்த மூன்றில் அடங்கும். ஆக எண்வகை ஆனந்தமும் இன்னது இன்னது என்று கூறுகின்றேன் கேட்பாயாக.

போகத்தில் வருசுகம் விடய சுகம் நித்திரைப் போது உளது பிரம சுகமாம்
மோகத்து அனந்தலில் சுகம் வாசனைச் சுகம் முழுப்பிரியம் ஆன்ம சுகமாம்
யோகத்தில் உளது முக்கிய சுகம் உதாசீனம் உற்ற சுகம் நிசசுகமதாம்
ஏகத்தை நோக்கல் அத்துவித சுகம் வாக்கியம் எழுந்த சுகம் ஞானசுகமே 122

122. அன்பனே! எண்வகை ஆனந்தங்களையும் தொகுத்துக் கூறுகின்றேன் கேட்பாய். 1. ஒருவன் விரும்பிய வஸ்துவை அடைந்த பின் இச்சை நிவர்த்தி வாயிலாக உள்முக மனோவிருத்தியில் உண்டாகும் ஆனந்தம் விஷயானந்தமாம். 2. சுழுத்தி அவஸ்தையில் உள்ள சுயம் பிரகாச ஆனந்தம் பிரமானந்தமாம். 3. நித்திரைத் தெளிவில் சிறிது நேரம் சும்மா அமர்ந்திருப்பதால் உண்டாகுமானந்தம் வாசனானந்தமாம். 4. பிரியங்களில் நானே மிகப்பிரியன் என்று விவேகத்தில் தோன்றும் ஆனந்தம் ஆத்மானந்தமாம். 5.யோகாப்பியாசத்தால் மனோலயமான விடத்தில் தோன்றும் ஆனந்தம் முக்கியானந்தமாம். 6. விருப்பு, வெறுப்பு அற்ற விடத்தில் தோன்றும் ஆனந்தம் நிஜானந்தமாம். 7. நாம, ரூபங்கள் சத்தியம் என்னும் துவைதப் பிராந்தி நீங்கினவிடத்தில் உளதாகும் ஆனந்தம் அத்வைதானந்தமாம். 8. தத்துவ மகாவாக்கிய விசாரத்தால் உளதாகும் ஆனந்தம் வித்தை ஆனந்தமாம்.

இவ்வாறு உரைசெயும் சுகபேதங்களின்
இயல்பாம் அவைசொ(ல்)ல மகனே கேள்
ஒவ்வா நனவினில் உழல்வான் இடர்கெட
உறங்கும் சயனமது உறும்நேரம்
செவ்வா மனம் அகமுகம் ஆ(கு)ம் அதில் ஒளிர்
சித்தின் சுகநிழல் சேரும் காண்
அவ்வாறு இவன் உ(ள்)ளம் மகிழ்வாம் அனுபவம்
அதுதான் விடய சுகானந்தம் 123

123. முன்கூறிய ஆனந்தங்களின் இயல்பை வகுத்துக் கூறுகின்றேன் கேட்பாயாக. விஷயானந்தம் எவ்வாறு உண்டாகும் என நீ வினவின் கேட்பாய். நனவில் அனுகூல பதார்த்தங்களை நாடி அங்கும் இங்கும் அலைந்து, திரிந்து களைப்புற்ற ஜீவன் தான் ஓய்வு எடுத்துக் கொள்ளுதல் பொருட்டு படுக்கையில் படுத்து சிறிது நேரம் உறங்கிய பின், நனவில் மகளிரோடு உற்ற கலவி நுகர்ச்சியின் போது அவனது அந்தக்கரணத்தில் ஆத்மாவின் பிரதிபிம்பம் ஏற்படும். அப்போது அவனுக்கு ஆனந்தம் உண்டாகும். இங்ஙனம் உண்டாகும் ஆனந்தத்தை விஷய சுகானந்தம் என்பர் மேலோர்கள்.

ஈனம்தரு சுகவிடயம் திரிபுடி இடராம் எனமனம் அசையாமல்
சேனம் தனது குலாயம் த(ன்)னில் விழு செயல்போல் நித்திரை செறிசீவன்
தான் அந்தமில் பரனுடன் ஒன்றுவன் ஒரு தனையல்லது பிற நினையாமல்
ஆனந்த மயமாவன் சுகம் மிகும் அதுதான் உயர் பிரமானந்தம் 124

124. அன்பனே! இனி பிரமானந்தத்தைப் பற்றிக் கூறுகின்றேன் கேட்பாயாக. நனவில் உணவுகளைத் தேடி அலைந்த கஷ்ட நிவிர்த்திக்காக, பருந்து என்ற பறவையானது, தனது கூண்டிற்குள் வேகமாக சென்று அடங்கிக் கொள்வது போல், இந்த ஜீவனும் நனவில் விஷயங்களைத் தேடி அலைந்த சிரமம் தீர்த்துக் கொள்வதற்காக சுழுத்தி அவஸ்தையில் ஆதியந்தமற்ற பரனாகிய தன் நிஜரூபப் பிரமத்தோடு ஐக்கிய மாவன் அப்போது தன்னைத் தவிர மற்றொன்றையும் நினையாமல் ஆனந்த சொரூபமாக விளங்குவன் அதுவே பிரமானந்தமாம்.

தூங்கும் சுகமது பிரமச்சுகம் எனல்
சுருதிப் பொருள் விழி துயில்வோர்கள்
தாங்கும் மலரணை நன்றாகச் சிலர்
சம்பாதிப்பது தான் ஊகம்
தீங்கும் நன்மையும் ஆண்பெண் முறைமையும்
தெரியாது அமளிசெய் பொழுதேபோல்
ஆங்கு உள்வெளிகளும் அறியா அனுபவம்
அதனால் அது பிரமானந்தம் 125

125. அன்பனே! சுழுத்தியில் உள்ள ஆனந்தம் பிரமானந்தமாம் என்பதற்கு சுருதி, யுக்தி, அனுபவம் கூறுகின்றேன். சுழுத்தியானந்தம் பிரமானந்தம் என்று அதர்வண வேதத்தில் கைவல்ய உபநிஷதத்தின் தாற்பரியமாம். இது சுருதி வாக்கியம் எனப்படும். நித்திரைக்குப் பங்கம் வராமல் இருப்பதற்காக படுக்கை, கொசுவலை முதலியவற்றை சம்பாதித்துக் கொள்வதே, அந்த சுழுத்தியில் ஆனந்தம் உண்டு என்பதற்கு யுக்தியாம். தனக்குப் பிரியமான மங்கையோடு கலவி செய்யும் காலத்தில் நன்மை-தீமையும், ஆண்-பெண் முறைமையும், உள்-வெளி என்ற பேதமும் தெரியாமல் இருப்பது அனுபவமாம். அதுபோல் சுழுத்தியிலும் அந்தப்பேதம் தெரியாது இருப்பதால் அது பிரமானந்தமாம்.

இதன் உள்ளுரை : இக்கவியில் அமளி என்பது அயர்ந்த தூக்கமான சுழுத்தி அவஸ்தையையும், மகளிர் கூட்டுறவில் வரும் ஆலிங்கனத்தையும் குறிக்கும். இதில் ஆலிங்கனத்தில் உள் வெளி என்ற பேதம் தெரியாதது போல் சுழுத்தியிலும் உள் வெளி பேதம் தெரியாத அனுபவத்தை உவமையாக சில உரை ஆசிரியர்கள் கூறியிருக்கிறார்கள். சிலர், அமளி என்பது ஆலிங்கனத்தைக் குறிக்காது. ஏனெனின், ஆலிங்கனத்தில் உள்-வெளி பேதம் தெரியும் என்று கூறியிருக்கிறார்கள். அதுவும் ஒரு பட்சமாம். எப்படி இருந்த போதிலும் உவமேயமான சுழுத்தியானந்தத்தைத் தான் இக்கவியில் விளக்கிக்கூற இந்நூலாசிரியர் முற்பட்டார் என்பதற்கு ஐயமில்லை. எனவே அமளி என்ற சொல்லுக்கு சுழுத்தியானந்தம் அல்லது பிரமானந்தம் என்று பொருள் கொள்வதே எமது பட்சமாம். பஞ்சதசி 1028ம் பக்கம், "சுழுத்தியில் ஜீவன் இல்லை. பிரம்மமே உள்ளது."

மேற்படி நூல் 1045ம் பக்கம் டிப்பணியில் "சுழுத்தியில் உள்ள ஆனந்தம் நிரதிசயானந்தமாம் என்று விசேஷமாக எப்போது அறிகின்றானோ அப்போதே அஞ்ஞானம் நிவர்த்தியாயிற்று." இதில் விசேஷமென்பது நான் சச்சிதானந்தன் என்ற நிச்சயித்தைக் குறிக்கும். பிரமானந்த யுக்தி ரத்னாகரம் 305ம் பக்கம் "சுழுத்தியில் அந்தக்கரண மில்லை. ஆதலால் சுழுத்தியில் உள்ள சுகம் நிருபாதிக சுகமாம்." ஆத்ம புராணம் பக்கம் 44ல் "சுழுத்தியில் சொரூபானந்தமே உள்ளது." தத்துவானுசந்தானம் பக்கம் 134ல், "சுழுத்தியில் ஓர் விஷயத்தாலும் சுகமுண்டாகின்றதில்லை. ஆனால் தனது சொரூப இன்பமேயுள்ளது" என்றும் கூறியிருப்பதை அனுசரித்து, இந்நூலாசிரியரும் சுழுத்தியில் உள்ள ஆனந்தம் பிரமானந்தம் என்றார். மேலும் சுழுத்தியில் காணும் ஆனந்தம் ஏதாவது ஒரு விஷயத்தில் இருந்து வந்ததன்று. அங்கு விஷயங்கள் ஒன்றுமில்லை. உடம்பில் உள்ள உறுப்புகள் ஏதாவது ஒன்றில் நின்று அந்த ஆனந்தம் வந்ததாகக் கருத இடமில்லை. ஏனெனின் சரீர உறுப்புக்கள் அனைத்தும் சடப்பொருளாகும். சடத்தில் நின்று ஆனந்தம் வரும் என்பது பொருந்தாது. மேலும் சடப்பொருளும், ஆனந்தமும் பேதப்பொருளா? அல்லது அபேதப் பொருளா? இதற்கு விடை பேதப்பொருள் எனின், சடம் ஒரு பொருளும், ஆனந்தம் ஒரு பொருளும் ஆக இரு பொருள்பட்டு கண்டத்துவ தோஷம் வரும். வருமானால் ஆனந்தம் பிரமம் என்னும் சுருதிக்கு விரோதமாம். இனி இரண்டும் அபேதப்பொருள் எனின், முதலும் சினையும்போல் ஒன்றாக வேண்டும். ஆகுமானால் இரண்டிற்கும் முதல் ஒன்றாக முடியும். ஆகுமானால் சரீரத்தின் உறுப்புக்களில் ஒன்றாவது ஆனந்தமாக இருக்க வேண்டும். இருக்குமானால் உறுப்புக்களில் சடத்தன்மை காணக்கூடாது. காணுகின்ற படியினால் சடப்பொருள் வேறு, ஆனந்தம் வேறு என்பதாயிற்று. எனவே சுழுத்தியானந்தம் ஒரு விஷயத்தில் நின்றாவது அல்லது சரீர உறுப்புக்களில் நின்றாவது உற்பத்தியாகின்றதில்லை. இக்காரணத்தால் அந்த ஆனந்தம் நிரதிசய அகண்டமாக நிறைந்துள்ளது. இது பற்றி, "தூங்கும் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப்பொருள்" என்றார்.

உதவும் புவியினில் ஒருவன் அனுபவம் ஒருவன் மனதினில் உதியாதே
மதியும் கெடுகிற துயில் கொண்டு ஆனந்த மயனன்றோ சுகம் உறுகின்றான்
இது விஞ்ஞான மயனாம் சிந்தையில் நினைவாய் வந்திடல் அழகன்றே
சுதை விண்ணோர் புகழ் குருவே நீர்இது சொல்லீர் சகலமும் வல்லீரே 126

126. தேவர்கள் போற்றும் குருதேவா! உலகத்தில் ஒருவனுடைய அனுபவம் மற்றொருவனுக்கு வராதல்லவா. அங்ஙனமிருக்க, பஞ்ச கோசங்களில் ஒன்றான மனோமய கோசம் எனப்படும் மனதும், விஞ்ஞானமய கோசமெனப்படும் புத்தியும், சுழுத்தியில் லயமடைந்த பின் ஆனந்த மயனல்லவா சுழுத்திச் சுகத்தை அனுபவிக்கின்றான். இந்த அனுபவம் விஞ்ஞானமயனான புத்தியில் நினைவு வடிவமாக வருவது பொருந்தாதே. ஏனெனில் சுழுத்திக் காலத்தில் புத்தியும், மனமுமில்லை. இல்லாதிருக்க நனவில் அந்தக்கரணத்திற்கு சுழுத்தி யானந்த அனுபவம் எவ்வாறுண்டாம்? இதை அருள்வீராக.

நெய்யும் வெண்ணெயும் இருபேர்களும் அறி
நினைவில் பிரிவு அறிவினில் இல்லை
செய்யும் நனவினில் இறுகும் மனதொடு
சேரும் சின்மய விஞ்ஞானன்
நையும் துயர் மனம் நழுவும் பொழுது உணர்
ஞானச்சுகம் உ(ண்)ணும் ஆனந்தன்
பெய்யும் துளிகளும் நீரும் குளமொடு
பாகும்போல் இவர் பிரிவன்றே 127

127. அன்பனே! உன் வினாவிற்கு விடையளிக்கின்றேன் கேட்பாய். ஒருதரம் உருக்கி பின் கட்டியான நெய்யும், உருகின நெய்யும் உருவில் வேறு வேறு. சுவையில் ஒன்று. அதுபோல் விஞ்ஞான மயன், ஆனந்த மயன் என்னும் பேதம் மாயா அந்தக்கரண உபாதியால் இரண்டாகச் சொல்லுகின்றதே ஒழிய இரண்டிலுமுள்ள சேதனம் ஒன்றேயாம். நனவில் அந்தக்கரண உபாதியோடு சேர்ந்துள்ள சேதனமே, சுழுத்தியிலும் ஆனந்த வடிவமாயுள்ளது. ஆனாலும் அந்தக்கரணம் லயமான சூட்சும அவஸ்தையை அடைந்து சுழுத்தியில் பிரம்மானந்தத்தை அனுபவிப்பவன் ஆனந்த மயனேயாவன். ஆதலால் ஆனந்தமயன், விஞ்ஞானமயன் என்ற இருவரும் பேதமிலர். எங்ஙனம் மழைத்துளிகளும் ஜலமும், வெல்லமும் பாகும் ஒன்றாகுமோ அங்ஙனமே இருவரும் ஒருவரேயாவர்.

இதன் உள்ளுரை : மாயா விருத்தியெனும் நுண்கரணம் தன்னால் அனுபவித்தல் சுழுத்தியாம் என்று வேதாந்த சூடாமணி கூறுவதால், சூட்சும அந்தக் கரணம் ஒப்பப்பட்டிருக்கிறது. இங்ஙனம் ஒப்பினதுவும்

பூர்வபட்சமேயாம். சித்தாந்த பட்சம் யாதோவெனின், சுழுத்தியில் அந்தக்கரணமில்லை. "அங்கு எந்த ஆனந்தமயன் இருக்கின்றானோ அவனே விஞ்ஞான வடிவம் அடைந்து, ஸ்தான பேதத்தால் சொப்பனத்தையாவது, ஜாக்கிரத்தையாவது அடைகின்றான்" என்று பஞ்சதசி யோகானந்தப் பிரகரணம் கூறுகின்றது. எனவே சுழுத்தியில் எந்தப் பிரமானந்தம் இருக்கின்றதோ, அந்தப் பிரமானந்தம் நனவில் விஞ்ஞான மயனான புத்தியில் விளங்குகின்றது. இதை அறிவிப்பதற்காக வெல்லமும் பாகும் போலும், மழைத்துளிகளும் ஜலமும் போலும் என்ற உவமானத்தைக் காட்டினார். உவமானத்தில் மேற்கூறிய இரண்டிற்கும் முதல் ஒன்றானவாறு போல், உவமேயத்திலும் விஞ்ஞானமயன், ஆனந்தமயன் என்னும் இரண்டிற்கும் முதல் ஒன்றுதான் என்பதற்கு ஐயமில்லை. அங்ஙனமிருக்க மழைத் துளிகளுக்கும் வெல்லத்திற்கும் உயர்வும், ஜலத்திற்கும் பாகுக்கும் தாழ்வும் கூறுவது அறிவுடையாகுமா? ஆகாது. அதுபோல் மழைத்துளிகளும் வெல்லமும் போன்ற பிரமத்திற்கும் அல்லது ஈசுவரனுக்கும் உயர்வும், நீரும் பாகும் போன்ற விஞ்ஞான மயனான ஜீவனுக்குத் தாழ்வும் காணுவது அறிவுடைமையாகுமா? ஆனந்தமயன், விஞ்ஞானமயன் ஆகிய இரண்டிற்கும் முதல் ஒன்றாயிருக்க பேதப்படுத்திக் கூறி நடைமுறைப் பழக்கத்தில் கொண்டு வந்தது பேதைமையிலும் மிகு பேதைமையாம். இதில் விஞ்ஞானமயன், ஜீவன் எனப்படும். எனவே ஜீவர்கள் எல்லாம் பிரம்மமே என்றாயிற்று. ஆகுமானால் ஜீவர்கள் வேறு, கடவுள் வேறு என்று பிரிப்பதற்கு இடமில்லை. மேலும் இக்கவிக்கு ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் உரை பக்கம் 397ல், "கரண ஆபேக்ஷையின்றி பிரம்மானந்தத்தை அனுபவியா நிற்கும் ஆனந்தமயன்" என்று கூறியிருப்பதால் ஆத்மா அந்தக்கரணம் முதலியவற்றோடு கூடியும் கூடாமலும் மூன்றவஸ்தை யிலும் இருக்கின்றது. இங்ஙனமிருக்கும் சேதனமே பரம்பொருளாம். இக்கவியில், "ஞானச்சுகம் உணும் ஆனந்தன்" என்பதில் ஞானச் சுகத்தை உண்ணும் என்று பொருள் கொளல் ஆகாது. ஏனெனின் இரண்டு பொருள் உள்ள இடத்தில் தான் உண்ணுதல் என்ற தொழில் கூடும். இந்தப்படலம் 115வது கவியில் உபய ஆத்மாவும் உளவோ? அதாவது இரண்டு ஆத்மா உண்டோ? என்று இந்நூலாசிரியரே நம்மனோரைக் கேள்வி கேட்டிருப்பதால் ஒன்றை மற்றொன்று அனுபவித்தது என்று பொருள் கொள்ளக் கூடாது. உண்ணல் அல்லது அனுபவித்தல் என்று வரும் இடங்களில் எல்லாம் சொரூப மாத்திரமாக இருந்தது என்று பொருள் கொள்ளுதல் வேண்டும். இது போல் ஐக்கியம் அல்லது இரண்டறக் கலத்தல், ஜீவன் முக்தி, விதேக முக்தி, நிர்விகல்ப சமாதி, நனவில் சுழுத்தி, வரிட்ட நிலை என்று வருமிடங்களில் எல்லாம் அஞ்ஞான நிவிர்த்தி என்றே பொருள் கொள்ளுதல் வேண்டும் என்று சங்கர பாஷ்யம் கூறுவதை இங்குணர்க.

ஒன்றாகிய பிரமானந்தச் சுகம்

ஒழிவான்ஏன் வெளிவருவான்ஏன்
என்றால் முன்செய்த கருமம் வெளியினில்
இழுக்கும் சுழுத்தி விட்டு எழுந்தோனும்
நன்றாயின சுகம் அகலான் வெளியிலும்
நடவான் மறதியும் பெறமாட்டான்
அன்றுஆம் என இருந்து உறங்கும் சிலகணம்
அதுவே வாதனை ஆனந்தம் 128

128. குருதேவா! இந்த ஜீவன் சுழுத்தியில் பிரமத்தோடு கலந்து பிரம்மானந்த மயமாய் இருந்தபின், அதை விடுத்து நனவில் வெளி வருவதற்குக் காரணம் யாது? இதனை அருள்வீராக. அன்பனே! தேகாதிப் பிரபஞ்ச வாசனை இருந்தமையால், மீண்டும் அந்தக் கர்மம் இந்த ஜீவனை வெளியில் கொண்டு வரும். சுழுத்தி அவஸ்தையை விட்டு நனவிற்கு வந்தவன் சிறிது நேரம் விருப்பு, வெறுப்பின்றி சும்மாயிருக்கின்றான். அதுவுமன்றி அவன் அந்நேரம் வெளியிலும் போகான். ஒன்றைப் பற்றவும் இல்லை. மறதியையும் அடைய மாட்டான். உள்ளே அனுபவித்த ஆனந்தத்தை விடாமல், ஒரு விஷயத்தையும் கருதாமல், உதாசீனனாய் இருப்பதால் இதுவே வாசனை ஆனந்தமாம்.

அந்தக் கணம் உடல்அகம் என்று இடர்களில்
அலைந்தே சுகம்தனை மறந்தேபோம்
முந்தைச் செயும் வினை சுகதுக்கம் தரும்
மோனம் உறும் நடுவழிவில் காண்
எந்தப் புருடனும் ஒருசிந்தையும் அற
இருந்தேன் எனல் அனுபவமாகும்
இந்தப் படி தன் உதாசீனச் சுகம்
இதுவே நிசமெனும் ஆனந்தம் 129

129. அன்பனே! அந்த வாசனானந்தத்துடன் அவன் ஏன் இருக்க வில்லையெனின் கேட்பாய். சுழுத்தியில் நின்று வெளியில் இழுக்கச் செய்த கருமம் அத்துடன் நில்லாமல் உடனே தேகமே தான் என்று அபிமானித்து பல்வேறுபட்ட சுகதுக்கங்களில் அலைந்து உழன்ற துக்கத்தால் பிரம்மானந்தத்தை மறந்தேபோம். ஆனாலும் முன்கருமம்

சுகதுக்கம் தரும். இதற்கிடையில் மௌனமான உதாசீன சுகமுண்டாகும். இதற்கு அனுபவம் யாதோவெனின், எந்தப் புருஷனும் நான் யாதொரு சிந்தனையுமில்லாமல் சுகமாயிருந்தேன் என்று கூறுவதே அனுபவமாம். இந்தப்படியான உதாசீன சுகமே நிஜானந்தமாம். இதில் மௌனம் என்பது தன்னையன்றி மற்றொன்றை நினையாதிருத்தல் எனக்கொள்க.

நிசமானது முக்கியமோ குடத்துள நீரன்றே வெளி ஈரம்தான்
வசமா அகங்கரம் மறைந்தால் நிசமது படிந்தால் முக்கிய வகையாகும்
திசையார் திரிசயம் அறியாதே துயில் செறியாதே உடல் தறிபோலே
அசையாதே மதி சமமாகிய நிலை அதுதான் முக்கிய ஆனந்தம் 130

130. அன்பனே! முக்கியானந்தத்தின் இயல்பைக் கேட்பாய். பத்மாசனத்தில் உட்கார்ந்து உடம்பைத் தறிபோல் வைப்பாயாக. அதன் பின்னர் புத்தியை சங்கற்பத்திலாவது விகற்பத்திலாவது செல்ல விடாமல் தராசின் நுனியைப் போல் சமநிலையில் வைத்துக்கொள். புறவிஷயங்களை ஒன்றையும் சுட்டியறியாமலும், தூக்கத்தை அடையாமலும் இருப்பாயாகில் அதுவே சுத்தாத்ம நிலையாகும். இதில் தோன்றும் ஆனந்தமே முக்கியானந்தமாகும். ஜீவனுக்கு நான் கர்த்தா என்னும் அகங்காரம் சகஜமாக இருந்தால் அது நிஜானந்தமாம். அந்த அகங்காரம் லயமானால் முக்கியானந்தமாகும். ஆகையால் நிஜானந்தம், முக்தியானந்தம் ஆகாது என்பதற்கு உதாரணம் கூறுகின்றேன். குடத்திற்குள் ஜலமிருந்தால் வெளிப்புறத்திலுள்ள குளிர்ச்சி ஜலமல்ல; அது குணமாம். ஜலம் குணியாம். அது போல் நிஜானந்தம் குணமும் முக்கியானந்தம் குணியுமாம் எனக் கொள்க.

மனுடன் மனுட கந்தருவன் தேவநல்மாகந்தருவன் ஒண்பிதிரோடே
பனும் ஆஜானர்கள் கருமத் தேவர்கள் பகர்முக்கியர் இந்திரன் ஆசான்
கனமார் பிரஜாபதியென் விராட்டு பொன் கர்ப்பப்பிரமன் என்று இன்னோர்கள்
பின ஆனந்தங்கள் நுரையாம் பிரளய வெள்ளக் கடல் பிரமானந்தம் 131

131. அன்பனே! முன் கூறிய முக்கியானந்தத்தின் பெருமையை இன்னும் கேட்பாயாக 1. சார்வபௌமன் அதாவது ஏக சக்ராதிபதி 2. மனுட கந்தர்வன் 3. தேவகந்தர்வன் 4. பிதிர் 5. ஆஜானதேவன் 6.கருமத்தேவன் 7. முக்கிய தேவர்கள் 8. இந்திரன் 9. பிரகஸ்பதி

10.பிரஜாபாதி என்னும் விராட்டு 11. இரணிய கர்ப்பன் என்னும் பிரமன் ஆகிய இவர்களுடைய ஆனந்தங்கள் ஒன்றுக்கு ஒன்று நூறு பங்கு அதிகமாகும். இவ்வாறாகிய ஆனந்தங்கள் அனைத்தும் பிரமானந்தக் கடலின் நுரை, அலை, திவலை போல்வனவாகும்.

இதன் உள்ளுரை : ஆனந்தம் ஒன்றேயொழிய இரண்டல்ல. அது பெரிதுக்கெல்லாம் பெரிதாயிருப்பதால் பிரமம் எனவும், அதன் சொரூப குணம் ஆனந்தமாயிருப்பதால் ஆனந்தம் எனவும் கூறப்படும். மேற்கூறிய பிரமானந்தமே விஷயானந்தமாகவும், வாசனை ஆனந்தமாகவும், மீண்டும் அதுவே ஐவகையாகவும், அந்த ஐந்தும் இந்த மூன்றில் அடங்கும் எனவும், ஆக ஆனந்தம் எண்வகை எனவும், இதன் விரிவு ஏகசக்கராதிபதி முதல் பதினொன்றாகவும் கூறினார். இவ்வானந்தங்கள் யாவும் கடலின் அலை, நுரை, குமிழியைப் போலவும், பிரமானந்தம் பிரளய காலத்து வெள்ளக்கடல் போலவும் உதாரண முகத்தால் கூறியதை உய்த்துணர்க.

எவனாகிலும் இந்தத் துரியாதீதத்தில் ஏழாம் பூமியில் இருந்தானேல்
அவன் நாரதன் சுகன் சிவன் மால் அயன் முதல் அறிவோர் அனுபவ சுகபோதம்
விவகார திர்சியம் இதுவே அனுபவம் என முன்சொல்லிய விவகாரி
உவமானமும் அறி மகனே அவன்அடி உதிரும் பொடிகள் என் முடிமேலே 132

132. அன்பனே! மேற்கூறிய பிரமானந்தம் உடையவர்களுடைய அனுபவத்துக்கு சான்று கூறுகின்றேன் கேட்பாய். எத்தகைய மனிதனாயினும் ஞானபூமி ஏழினுள் ஏழாவது பூமியில் அதாவது பிரம சொரூபமாக நிலைபெற்று இருப்பானேயாமாகில் அவன் நாரதன், சுகன், சிவன், திருமால் பிரமன் முதலிய அறிஞரது அனுபவமாகிய அறிவானந்த வடிவன் ஆவன். உலக விவகாரம் இல்லாமலும், தூங்காமலும் இருக்கும் இந்நிலையே அறிவானந்த வடிவமாம். இதுவே முக்கிய நிஜானந்த அனுபவமாமென்று முன் கூறிய நாரதன் முதலிய உவமானமுமாம் என அறியக்கடவாய். இத்தகைய பரம புருஷரது திருவடிகளில் உதிரா நின்ற தூளிகள் என்சிரசில் தரிக்கத் தக்கதாம்.

இதன் உள்ளுரை : ஞானபூமியைப் பற்றி பின் கூறப்படும். துரியம் என்பதற்கு நாலாவது எனப்பொருள் கொள்க. அதாவது மூன்று சரீரத்தையும், மூன்று அவஸ்தையையும் விளக்கிக் கொண்டிருக்கும் பொருள் நான்காவதாக இருப்பதால் அதைத் துரியம் என்றார். துரியம்

ஓர் அவஸ்தையில் சேர்ந்ததல்ல. சேர்ந்ததாமாயின் அதற்குத் தத்துவம் சொல்ல வேண்டும். எனவே சொரூபத்திற்கு உரிய பரியாயப் பெயர் என அறிக. இதை ஸ்ரீபொன்னம்பல சுவாமிகள் உரை 205வது பக்கம் "மூவகை ஜீவர்களுக்கு சாட்சி நான்காம் பொருளாதலால், சொரூபம் துரியம் எனப்படும்" என்று கூறியிருப்பதால் அறியலாம்.

இந்தவாறு ஐந்து சுகம் சொல்லினோம் வித்தை சுகம் இனிமேல் சொல்வோம்
முந்த மாயையும் சச்சிதானந்தப் பொருளுமேமொழியும் போதில்
அந்தமாம் அத்துவித சுகம் ஆன்ம சுகம் இரண்டும் அங்கே சொன்னோம்
தொந்தம் மாற்றிய மகனே இன்னம் உனக்கு ஐயம் உண்டேல் சொல்லு வாயே

133. பிறப்பென்னும் பேதைமை நீங்கி சிறப்பென்னும் செம்பொருள் கண்ட சிஷ்யனே! முன் கவியில் ஐந்துவித ஆனந்தத்தைச் சொன்னோம். அதாவது இந்தப்படலம் 123வது செய்யுளில் விஷயானந்தமும், 124 முதல் 127 வரையில் பிரமானந்தமும், 128ல் வாசனானந்தமும், 129ல் நிஜானந்தமும், 130ல் முக்கியானந்தமும் ஆக ஐவகை ஆனந்தங்களும் கூறினோம். இனி வித்தையானந்தத்தை கடைசியில் சொல்லுவோம். முன் மாயையைப் பற்றியும் சச்சிதானந்தத்தைப் பற்றியும் கூறியபோது வேதமுடிவான அத்வைதானந்தமும், ஆத்மானந்தமும் அங்கே சொன்னோம். அதாவது 95 முதல் 106 வரையில் ஆத்மானந்தமும், 114 முதல் 120 வரை அத்வைதானந்தமும் கூறினோம். அன்பனே இதில் இன்னும் உனக்கு ஐயமுண்டேல் சொல்லுவாயாக. இதுகாறும் ஆனந்தங்களின் இலக்கணம் கூறி முடித்தார். மேல் சச்சிதானந்தத்தின் ஒருமை இலக்கணம் கூறுகின்றார்.

குகன்தனையும் எனையும் உலகினையும் ஈன்று
அளித்து அருளும் குருவே கேளீர்
புகன்ற சச்சிதானந்தப் பதங்கள் தனித்
தனியாகிப் பொருள் வேறானால்
உகண்ட மனம் உறைப்பது எங்ஙன் பரியாய
பதங்களைப் போல் உறவு காணேன்
அகண்டமாய் ஒருசுவையாய்த் தேனீக்
கூட்டிய மதுவா அறிவிப்பீரே 134

134. ஜக-ஜீவ-பர கற்பனைக்கு ஆதாரமான குருதேவா! கேட்டு அருள்வீராக. முன் உபதேசித்த சச்சிதானந்தப் பதங்களுக்குள் சத்து வேறு, சித்துவேறு, ஆனந்தம் வேறாக இருக்குமா? அல்லது இம்மூன்றும் ஆத்மாவின் சொரூப குணமாக இருக்குமா? வேறு வேறு எனின், ஒவ்வொரு விஷயத்தைக் கண்டு தாவிச்செல்லும் என் மனமானது ஒரு வழிப்படுதல் எவ்வாறு கூடும். அவை அஸ்தம், கரம், பாணி என்று ஒருகைக்கு பரியாயப் பெயர்போல் ஆத்மாவின் பரியாய நாமமாக அதாவது ஆத்மாவான பிரமத்தையே போதிக்கின்றதா? என்பது எனக்குத் தெரியாமல் இருக்கின்றது. ஆகையால், பல மலரின் மதுக்களை தேனீ ஒன்றாய்ச் சேர்த்த தேன்போல் சச்சிதானந்தங்களின் ஒருமையை அருளிச்செய்வீராக.

இதன் உள்ளுரை : மேற்கூறிய சச்சிதானந்தமே கடவுளாம். இதை அறியாது சிலர் கடவுள் வேறு, ஆத்மா வேறு என்றும், அவையிரண்டும் பிறிது ஒரு காலத்தில் ஒன்று சேர்வதே அத்வைதமாம் என்று கூறுவர். அவர்களைப் பற்றி கோ.வடிவேலு செட்டியார் கைவல்யம் 248வது பக்கத்தில் "சுருதியினுள் ஏகம் ஏவ அத்வைதம் என்ற வாக்கியத்தின் பொருள் உணராதார், சொப்பனம் போல் கற்பனையாக பேதப்பொருள் இரண்டும் தம்முள் அபேதமாவதற்குறிய சங்கற்ப விசேஷணமே அத்வைதமாம் என்று கூறுவார்கள்" என்று கூறி மறுத்திருப்பதால், ஆத்மாவின் சொரூப நிலையே அத்வைதமாம். மேற்கூறிய பேதப்பொருள் இரண்டும் தம்முள் அபேதமானால், மீண்டும் பிரிந்து போகும். அது ஆன்றோர் வாக்கியத்திற்கு விரோதமாம். பட்டினத்துச் சுவாமிகள், "புணர்ந்தன பிரியும், பிரிந்தன புணரும்" என்றும், "கூடுதலுடன் பிரிதலற்று" என்று தாயுமான சுவாமிகளும் கூறியிருப்பதற்கு விரோதமாம். இது பற்றி பாரதியார் பாடல் 340 வது பக்கத்தில், "அத்வைதம் கண்டால் மரணமுண்டோ" என்றும், மேற்படி பாரதியார் பாடல்

சாமி நீ; சாமி நீ; கடவுள் நீயே;
தத்வமஸி; தத்வமஸி; நீயே அஃதாம்;
பூமியிலே நீ கடவுள் இல்லை என்று
புகல்வது நின் மனத்துள்ளே புகுந்த மாயை;
சாமி நீ அம்மாயை தன்னை நீக்கி
ஸதாகாலம் சிவோஹம் என்று ஸாதிப்பாயே

என்றும், மகாத்மா காந்திஜி எழுதியுள்ள ஹிந்து தருமம் என்னும் புத்தகத்தின் 38வது பக்கத்தில், "ஒவ்வொரு உயிரும் ஈஸ்வர சொரூப மாதலால் உயிர்களுக்குத் தொண்டு செய்வதே கடவுள் தொண்டாகும்.

தேசப்பணியே தெய்வப்பணி ஆகும்" என்றும் கூறியிருப்பதால் துவைதப் பிராந்தியை விட்டு அத்வைத நிலையில் இருப்பாயாக. இந்நிலையில் ஜனன மரணம் யாருக்கு?

குளிர்இளகல் வெண்மை என்ற பதங்களினால்
நீர் மூன்று கூறுஆயிற்றோ
ஒளி தவனம் செம்மை என்ற பதங்களால்
அக்கினியும் ஒரு மூன்றுஆமோ
வெளி முதலாம் சகம் அசத்து மூடம் இடர் எனப்
பிரித்து விலக்கி வேதம்
எளிதறிய முரண் மொழிந்த சத்தாதி
எனும் பிரமம் ஏகம்தானே 135

135. அன்பனே! உன் வினாவிற்கு விடையாக சச்சிதானந்தத்தின் ஒருமையையும், அதனது இலக்கணத்தையும் கூறுகின்றேன் கேட்பாய். உவமானமாக குளிர், இளகல், வெண்மை என்ற பதங்களினால் ஜலம் மூன்று கூறானதோ? அவ்வாறே ஒளி, தவனம், செம்மை என்ற பதங்களினால் அக்கினியும் மூன்று கூறானதோ? இல்லை. அதுபோல் ஆகாசம் முதல் அகங்காரம் பரியந்தமான சகல பிரபஞ்சமனைத்தும் பழுதையில் பாம்புபோல் தோன்றி இருப்பதால், அதன் காரியமான தத்துவங்கள் அனைத்தும் அசத்து, சட, துக்க ரூபமெனக் கண்டு, நேதி செய்து பார்த்தால், அவைகளுக்கு விளக்கம் தரும் சத்து, சித்து ஆனந்த சொரூபமான பிரமம் ஏகமாம். இதற்கு மேற்கோள் பிரபோத சந்திரோதயம் பக்கம் 247ல் பிரபோதன் வாக்கியம் "நான் தேவர், மனிதர் முதலிய ஏழுவகைப் பிறப்புமல்லேன்; அசராங்களுமல்லேன்; பஞ்ச பூதங்களுமல்லேன்; ஞானேந்திரியங்களுமல்லேன்; அந்தக் கரண சதுஷ்டயமுமல்லேன்; இவ்வுலகத்தில் காணப்படுகிற எல்லாப் பொருள்களும் என் கண்ணுக்குச் சச்சிதானந்த மயமாகவே காணப் படுகின்றன" என்று கூறுவதால் நீயும் உலகை சச்சிதானந்தமாகப் பார்த்து இன்புற்று இருப்பாயாக.

நித்தியம் பூரணம் ஏகம் பரமார்த்தம் பரப்பிரமம் நிதானம் சாந்தம்
சத்தியம் கேவலம் துரியம் சமம் திருக்குக் கூடஸ்தன் சாட்சி போதம்
சுத்தம் இலக்கியம் சனாதனம் சீவன் தத்துவம் விண் சோதி ஆன்மா
முத்தம் விபு சூக்குமம் என்று இவ்வண்ணம் விதிகுணங்கள் மொழியும் வேதம்

136. அன்பனே! சச்சிதானந்தங்கள் வேறு வேறல்ல என்பதற்கு வேதத்தின் விதி நாம வாக்கிய பிரமாணங்களைக் கேட்பாயாக. உற்பத்தி நாச ரகிதமாதலின் நித்தியம் எனவும், எங்கும் நிறைந்திருத்தலின் பூரணம் எனவும், சஜாதியாதி பேத ரகிதமாதலின் ஏகம் எனவும், உண்மையாதலின் பரமார்த்தம் எனவும், ஞானவடிவமாயிருத்தலின் பிரமம் எனவும், எல்லாவற்றிற்கும் காரணமாயிருத்தலின் நிதானம் எனவும், எப்பொழுதும் ஒரு தன்மைத்தாய் இருத்தலின் சாந்தமெனவும், காரிய காரண ரகிதமாதலின் சத்தியமெனவும், மோட்ச வடிவமா யிருத்தலின் கேவலமெனவும், மூன்றவஸ்தைக்கும் சாட்சியாயிருத்தலின் துரியம் எனவும், விவகாரமற்றதாதலின் சமம் எனவும், திருசியங்களை அறிவதாயிருத்தலின் திருக்கு எனவும், கொல்லனது அடைக்கல்லு போல் விகாரப்படாது இருப்பதால் கூடஸ்தன் எனவும், சர்வ பதார்த்தங்களையும் அறிவதால் சாட்சி எனவும், அறிவு வடிவமாயிருத்தலால் போதம் எனவும், பற்று அற்றதாதலின் சுத்தம் எனவும், இலக்கணையினால் போதிக்கப்பட்ட பொருளாதலின் இலக்கியமெனவும், ஒரே வடிவாயிருத்தலால் சனாதனம் எனவும், சரீர அபிமானியாயிருத்தலின் ஜீவன் எனவும், தற்பத-தொம்பதங்களால் உணர்வதாயிருத்தலின் தத்துவம் எனவும், ஆகாசத்தை போல் பற்று அற்றதாதலின் விண் எனவும், சடமான சூரியாதிப் பிரகாசம் போல் அல்லாமல் சித்தாயிருத்தலால் ஜோதியெனவும், பந்தம் அற்றதாதலின் முத்தம் எனவும், கால தேசம் கடந்ததாதலின் விபு எனவும், காண்பதற்கரிதாகலின் சூட்சுமமெனவுமாம். இவ்வாறு ஆத்மாவைப் பற்றிய விதி வாக்கியங்கள் கூறப்படுகின்றன.

அசலம் நிரஞ்சனம் அமிர்தம் அப்பிரமேயம் விமலம் வசனாதீதம்
அசடம் அனாமயம் அசங்கம் அதுலம் நிரந்தரம் அகோசரம் அகண்டம்
அசம் அனந்தம் அவினாசி நிர்க்குணம் நிட்களம் நிரவயவம் அனாதி
அசரீரம் அவிகாரம் அத்துவிதம் என விலக்காம் அனேகம் உண்டே 137

137. அன்பனே! முன் கவியில் கூறிய இருபத்தைந்து பெயர்களால் குறிக்கப் பெற்ற மெய்ப்பொருள் ஒன்றேயானது போல், சச்சிதானந்தப் பிரமம் ஒன்றேயாம். அந்தப் பிரமத்திற்குரிய விலக்கு நாமங்களையும் கேட்பாயாக. மேற்கூறிய சச்சிதானந்தப் பிரமம் சலனமற்றதாதலின் அசலம் எனவும், மலின சுபாவமின்மையால் நிரஞ்சனம் எனவும், மரணமின்றியதாதலின் அமிர்தம் எனவும், கண் கூடாகக் காண முடியாததாதலின் அப்பிரமேயம் எனவும், பிறத்தல் முதலிய மலமின்றி

யிருத்தலின் விமலமெனவும், வாக்குக்கு எட்டாதாதலின் வசனாதீதம் எனவும், தேகம்போல் ஜடமாகாதிருத்தலின் அஜடம் எனவும், நோயின்றி இருத்தலின் அனாமயம் எனவும், பற்றற்று இருத்தலின் அசங்கம் எனவும், தனக்கு உவமை அற்றதாதலின் அதுலம் எனவும், இடைவெளியின்றி இருத்தலின் நிரந்தரம் எனவும், பிரமாணாதீதம் ஆதலின் அகோசரம் எனவும், கண்டப்பொருளாக இல்லாததால் அகண்டம் எனவும், ஜனனமற்றதாதலின் அஜம் எனவும், முடிவின்றி இருத்தலின் அனந்தம் எனவும், நாசமின்றி இருத்தலின் அவிநாசி எனவும், சர்வஞ்ஞத்துவாதி கல்யாண குணங்கள் அற்பமும் இன்றி இருத்தலின் நிர்க்குணம் எனவும், கை, கால், முதலிய மூர்த்தி வடிவ மாயில்லாததால் நிஷ்களம் எனவும், எவ்வித உருவுமின்றி இருத்தலால் நிரவயவம் எனவும், உற்பத்தி இன்றி இருத்தலின் அனாதியெனவும், எவ்வித சரீரமின்றி இருத்தலின் அசரீரி எனவும், பிறத்தல் முதலிய அறுவகை விகாரமுமின்றி இருத்தலின் அவிகாரம் எனவும், துவைதமின்றி இருத்தலின் அத்வைதம் எனவும் இவ்வாறு விலக்கு நாமங்கள் பல உள. இந்தப் பெயர்கள் யாவும் அவிதவை என்ற சொல் விதவையை நீக்கி மாங்கல்ய ஸ்திரீயை அறிவிப்பது போல் விலக்கு நாமங்களால் பிரமத்தை உன் சொரூபமாக அறிவிக்கின்றது வேதம்.

இன்னவகை விதிவிலக்குக் குணங்கள் நன்றாய்ச்
  சேர்ந்து ஒருமித்து எல்லாம் கூடிச்
சொன்ன பொருள் ஒன்றன்றி இரண்டில்லை ஒரு
  பொருளைச் சொல்லும் சொற்கள்
பின்னபதமாம் அதனால் சத்தாதி குணப்
  பொருளாம் பிரமம் ஏகம்
அன்ன பொருள் ஒருமை அறிந்து அகண்ட
  பரிபூரணமாய் ஆவாய் நீயே 138

138. அன்பனே! முன் இரண்டு கவிகளால் கூறிய விதி நாமமும், விலக்கு நாமமும் ஆகிய இவை, ஒரு பொருளான பிரமத்தையே குறிக்கும். ஒரு பொருளைக் குறிக்கும் பதங்கள் ஒன்றுக்கு ஒன்று வேறுபட்ட பதங்களாம். அதுபோல் அல்லாமல் சத்து, சித்து, ஆனந்தம் என்ற பதங்கள் மூன்றாயிருந்தாலும், அதற்குப் பொருளான பிரமம் ஒன்றேயாம். அந்த பிரமம் சச்சிதானந்த வடிவமாயிருக்கும் ஒருமையை அறிந்து நீ அகண்ட பரிபூரண பிரம சொரூபமாகக் கடவாய்.

நிர்க்குண வஸ்துவின் குணங்கள் உரைப்பது
தாய்மலடி எனல் நிகர் என்னாதே
சற்குணனே வத்துநிலை உரையாமல் அறிய
வல்ல சதுரர் உண்டோ
நற்குண வேதங்கள் இந்தச் சீவன் முத்திபெறப்
பிரமஞானம் தோன்றச்
சொல் குணங்கள் பிரமத்தின் குணங்களன்று
பிரமமாம் சொரூபம் தானே 139

139. குருதேவா! குணரகிதமான பிரமத்திற்கு சச்சிதானந்தாதி குணமுண்டு என்று வேதம் கூறுவது என் தாய் மலடி என்னும் வாக்கியம் போல் அல்லவா இருக்கின்றது. அன்பனே! நீ ஐயப்படல் ஆகாது. ஒரு பொருளை அறிய வேண்டியவன் அப்பொருளின் குணங்களை பிறர் சொல்லக் கேட்டு அல்லவா அறிய வேண்டும். அப்படி ஒருவரும் கூறாமல் அறியத்தக்க விவேகம் உடையவர்கள் இருக்கிறார்களா? இல்லையல்லவா? ஆகையால் உண்மையைக் கூறும் நற்குணமுள்ள வேதங்கள், இந்த ஜீவன் முத்தியை அடையவேண்டி, பிரமஞானம் தோன்ற வேதம் கூறிய சத்து சித்து முதலிய குணங்கள் பிரமத்தின் குணங்கள் அன்று, அவைகள் பிரம சொரூபமேயாம்.

மோக இருள்கெடக் கோடி அருணன் என வருகுருவே மொழியக் கேளீர்
ஏக பரிபூரணமாம் என்சொரூபம் என் உளத்தில் இறுகும் வண்ணம்
ஆகமங்கள் சொன்னபடி என்னை அகண்டார்த்தமா அறிந்தேன் ஐயா
ஊகமும் ஒத்திட உரைத்தால் பசுமரத்தில் ஆணி போல் உறைக்கும் நெஞ்சே

140. குருதேவா! அஞ்ஞான இருள்கெட கோடி சூரியப் பிரகாசத்தைப் போன்ற தாங்கள் என் அபிப்பிராயத்தைக் கேட்டு அருள் செய்வீராக. எங்கும் நிறைந்த பரிபூரண அறிவானந்த சொரூபமே, எனது நிஜ சொரூபமாக நான் அறிந்த நிச்சயம் என் உள்ளத்தில் வைர மலைபோல் உறுதியாயிற்று. வேதமும் கூறியவாறு என்னை அறிவானந்த சொரூபமாக அறிந்தேன். ஆனால் சச்சிதானந்தத்தின் ஒருமையை திருஷ்டாந்த முகத்தில் அனுபவமாகும்படி அருளிச் செய்தால் என்மனம் அதில் பசுமரத்தாணி போல் உறுதியாக அறிவானந்த சொரூபமே நான் எனத் தெளிவு அடைவேன்.

சத்தே சித்தாகும் அயல்எனில் அசத்தாம் அசத்தானால் சாட்சி எங்கே
சித்தே சத்தாகும் அயல்எனில் சடமாம் சடங்களுக்குத் திதியும் இல்லை
ஒத்தே தோன்றிய சத்தும் சித்தும் நல்ல சுகமாகும் ஊகத்துக்கு ஓர்
வித்தே அன்னியமாகில் சடம் அசத்தாம் சுகஅனுபவம் விளைந்திடாதே 141

141. அன்பனே! உன் வினாவிற்கு விடை மூன்று கவிகளால் அளிக்கின்றேன். மூன்று காலத்திலும் கெடாதிருக்கும் சத்தே சித்தாகும். அதாவது ஆனந்தமாயிருக்கும் பிரமமே அறிவாகும். அந்த சத்துக்கு சித்து வேறு எனக் கூறுவாயாகின் அது அசத்தாம். அசத்தானால் ஏற்படும் இழுக்கு யாதோவெனின் சாட்சித்துவம் எங்கே? அதாவது அசத்துப் பொருள்கள் ஜடம். ஜடம் ஒன்றை அறிவதற்கு அதில் அறிவேது? இனி சித்தே சத்தாகும். சித்துக்கு சத்து வேறானால் அது சடமாம். ஏனெனில் அறிவில்லாததால் சத்தும் ஜடமாகும். அங்ஙன மாயின் ஜடப்பொருள்கள் ஒன்றையும் விளக்கி வைப்பதற்கு அறிவில்லையல்லவா? ஆகையால் சத்தும், சித்தும் பொருந்தியதே ஆனந்தமாம். மேலும் சத்துக்கும் சித்துக்கும் ஆனந்தம் வேறாகில் ஆனந்தம் அசத்தாம். அசத்தனால் அது மூடம் எனப்படும். அதனால் ஆனந்தம் உதியாது. எனவே சச்சிதானந்தமாகிய இம்மூன்றும் ஒத்ததே ஆனந்தமாம். இந்த ஆனந்தமே பிரம்மமாம். அதுவே நீயாம்.

வீயாத சத்து முன்னம் விளங்குவது
தன்னாலோ வேறொன்றாலோ
வாயால் வேறெனில் அதுவும் அசத்தோ சத்தோ
அசத்தேல் மலடி மைந்தன்
பேயா காரியம் செயுமோ சத்தென இப்படி
அதையும் பிரித்துச் சொன்னால்
ஓயாத அவத்தையாம் குதர்க்க விகற்பங்களை
விட்டொழிந்திடாயே 142

142. அன்பனே! சச்சிதானந்தங்களின் ஒருமையை மீண்டும் யுக்தி வாயிலாகச் சொல்லுகிறேன் கேட்பாயாக. மூன்று காலத்தும் மாறுதலடையாத சத்தான ஆத்மா விளங்குவது தன்னாலோ? அல்லது மற்றொரு ஜடப்பொருளாலோ? அந்த சத்தர்னது ஜடத்தால் விளங்குகிறது எனின், சத்துக்கு வேறானது அசத்து, ஜடமாய் இருக்க வேண்டும். அது தன்னையும் பிற வஸ்துக்களையும் அறியும் அறிவற்றதாயிற்றே

ஆகுமானால் மலடிமகன் ஒரு காரியம் செய்வதுண்டோ? ஆகையால் அசத்தால் சத்து விளங்காது. அந்த அசத்தும் சத்து என்று நீ கூறினால் முடிவின்றிய அனவஸ்தா தோஷமாம். ஆதலால் பேயைப்போல் அலையும் புத்தியுள்ள சிஷ்யனே! நீ இவ்வாறான சந்தேகங்களை எல்லாம் விட்டொழிப்பாயாக. இதில் அனவஸ்தை தோஷமாவது சத்து விளங்குவது அசத்தாலே. அசத்து விளங்குவது சத்தாலே என மீண்டும் மீண்டும் கூறினால் முடிவேது? இந்த முடிவு பெறாத நிலைக்கு அனவஸ்தா தோஷம் எனப்பெயர்.

சுருதி உத்தி ஒத்ததுபோல் அனுபவமும் கேள்
சுழுத்திச் சுக ஆனந்தம்
மிருதி வடிவாதலில் அவ்வானந்தமே அறிவாம்
வேறு அங்கு இல்லை
கருது பிரளயம் சுழுத்தி இரண்டிலும் நீ இருந்து
இருளைக் காண்கின்றாயே
இருதயத்து இப்படி நோக்கி ஏக பரிபூரணம்ஆய்
இருந்திடாயே 143

143. அன்பனே! சச்சிதானந்தங்கள் ஏகரூபம் என்பதற்கு வேதப் பிரமாணமும், அதற்கான யுக்திகளையும் மேல் காண்பித்தேன். அடுத்த படியாக அனுபவத்தையும் கேட்பாயாக. சுருதி, யுக்தி, அனுபவம் ஆகிய மூன்றும் ஒத்தது அல்லவா ஏற்றுக்கொள்ளத் தக்கது. சுழுத்தி அவஸ்தையில் உளதாகும் சுகம் அல்லது ஆனந்தம் விழித்த பின் நனவை அடைந்தவனுக்கு சுழுத்தியில் நான் சுகமாய் இருந்தேன் என்ற ஸ்மிருதி அதாவது ஞாபகம் உண்டாகின்றது அல்லவா? எனவே அந்த ஆனந்தமே அறிவாம். சுழுத்தி ஆனந்தத்தைத் தவிர, அறிவாவதற்கு வேறு காரணம் அங்கு இல்லை. ஆகையால் அந்த ஆனந்தமே சித்தாம். இந்த அறிவானந்த சொரூபமான நீ சுழுத்தியிலும், கற்பாந்த பிரளய காலத்தும் இருந்து கொண்டு மாயையையும், அதன் காரியமான அஞ்ஞானத்தையும் காண்கின்றாய். உன் இருதயத்தில் இப்படி ஆராய்ந்து சத்தே சித்து; சித்தே ஆனந்தம்; இந்த சச்சிதானந்த சொரூபமே நின் நிஜ சொரூபமாகும். இந்த நிஜ சொரூபமே தான் என்பதற்கு சிவஞான வள்ளலார் சாஸ்திரம் 205 வது பக்கம் செய்யுள் "பல்கலையால் ஆகமத்தால் பகர்கீதை பதினெட்டால் நல்வினையால் கருமத்தால் நான்மறையால் ஞானத்தால் சொல்ஊகத்தால் மறையாத் துணிவால் இல்துறந்தோரால் நல்லோரால் நான் பார்க்கில் நானே அப் பரப்பிரமம்."

பலகலையும் உணர்ந்த குரு மொழிந்தபடி இவனும் அனுபவம் விடாமல்
பலமலரின் மதுப்போலச் சச்சிதானந்தம் ஒன்றாம் பரமார்த்தத்தைப்
பலபொழுதும் கண்மூடிச் சமாதி இருந்தான் விழித்துப் பார்த்தபோது
பலவடிவாம் சராசர சித்திரங்கள் எல்லாம் தோன்றும் ஒரு படமானானே

144. சகல வேதாந்த சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த குரு தத்துவ விளக்கப் படலம் முதல் இதுகாறும் உபதேசித்தருளிய கருத்துக்களை கேட்டறிந்த சீடன் சுருதி, யுக்தி, அனுபவங்களை விடாமல் பல மலரின் மதுக்கள் சேர்ந்து ஒன்றாயினவாறு போல், பல ஜீவர்களாகத் தோன்றினும், அவர்களின் யதார்த்த வடிவமான சச்சிதானந்தங்களின் ஒருமையை சமாதிகூடி தனது அனுபவத்தில் கண்டு சொரூப நிலையில் இருந்தான். அவன் மீண்டும் நேத்திராதி இந்திரியங்களோடு கூடி வெளியுலகை நோக்கிய போது பல சித்திரங்கள் அடங்கிய ஒரு ஆடை அல்லது சுவரைப்போல் இயங்குவன, நிற்பன, நடப்பன, பறப்பன ஆகிய சித்திரங்கள் யாவுமாய் விளங்கும் ஒரு சச்சிதானந்தப் பிரமமாய் விளங்கினான். இவ்வாறு விளங்குவதற்கு மேற்கோள் பட்டினத்தடிகள் திருக்கழுமல மும்மணிக்கோவையில், "எந்தை நின் திருவளர் நாட்டம் கருணையில் பெறலும் யாவையும் எனக்குப் பொய்யெனத் தோன்றி மேவரும் நீயே மெய்யெனத் தோன்றினை ஓவியப் புலவன் சாயல் பெற எழுதிய சித்திர விகற்பம் எல்லாம் ஒன்றில் தவிராது தடவினர் தமக்குச் சுவராய்த் தோன்றும் துணிவு போன்றனவே" என்றும், "சிற்சொரூபம் தானே ஜெகரூபமான வெல்லாம்" என்று சொரூபசாரமும் கூறியிருப்பதால், உலகம் கடவுள் சொரூபம் என்று ஆயிற்று.

இதயமொத்த சற்குருவே நமக்கு இதுவே
விநோதமன்றி இனிவேறு உண்டோ
அதை உரைத்தும் அதை நினைத்தும் இருப்பது
அன்றோ ஞானிகளுக்கான நீதி
முதல் உரைத்த துரியாதீதமும் ஏழாம்
பூமியும் முக்கியமாம் என்ற
பதமும் அதின் வகையும் எனக்கு எளிதாகத்
தெளியும் வண்ணம் பணித்திடீரே 145

145. எனது மனதிற்கொத்த குருதேவா! அகம் பிரமாகார விருத்தி உண்டாவதற்குக் காரணமான வேதாந்த வாக்கியங்களால், ஆத்ம சொரூபமான பிரமத்தைச் சிந்தித்தும், அதை உணர்ந்தும் மகிழ்ச்சி அடைவதே நமக்கு வினோதம் அல்லவா! இதற்கு அன்னியமான ஒரு தொழிலும் செய்யத் தக்கதாயில்லை. இந்தப் பிரமத்தைப் பற்றி உபதேசிப்பதும், அதைப்பற்றிச் சிந்திப்பதும் அல்லவா அறிஞர் களுக்கான நீதி. ஆகையால் முன் 132ம் கவியில் துரியாதீதமும் ஏழாம் பூமியும் முக்கியமாம் என்று அருளிச் செய்தீர். அதன் தொகை வகைகளை எளிதாக உணரும்படி அருளிச் செய்வீராக.

வினவுமிடத்து அஞ்ஞான பூமிகள் ஏழ்
    ஞானபூமிகள் ஏழ் என்பர்
இனி அவற்றுள் அஞ்ஞான பூமிகள் ஏழையும்
    முந்தி இயம்பக் கேளாய்
தனிவித்து சாக்கிரம் சாக்கிரம் மகாசாக்கிரம்
    சாக்கிரத்தைச் சார்ந்த
கனவு கனாக் கனவுசாக்கிரம் சுழுத்தி என்று
    எழுபேர் கணித்தார் மேலோர் 146

146. அன்பனே! நீ வினவிய துரியாதீத பூமியைப் பற்றி கூறுகின்றேன் கேட்பாயாக. இந்தத் துரியாதீதத்தைப் பற்றி அறிய வேண்டுமானால், முதலில் 7 ஞானபூமி, 7 அஞ்ஞான பூமி இவைகளின் விளக்கத்தைத் தெரிந்துக் கொள்ள வேண்டும். இதைப்பற்றிப் பெரியோர்கள் பலர் கூறியிருக்கிறார்கள். இதில் முதல் அஞ்ஞான பூமி ஏழையும் கூறுகின்றேன். கேட்பாயாக. அஞ்ஞான பூமியின் பெயர்களாவன. 1. பீஜஜாக்ரம், 2. ஜாக்ரம், 3. மகாஜாக்ரம், 4. ஜாக்ர சொப்பனம், 5. சொப்பனம், 6. சொப்பன ஜாக்ரம், 7. சுழுத்தி. இவையே அஞ்ஞான பூமிகளின் பெயர்களாம்.

முந்த அகண்டத்து எழும் ஓர் அறிவு மாத்திரம்
    அதுதான் முதல் வித்தாகும்
இந்த அறிவில் பண்டுஇல்லா அகந்தை முளைபோல்
    ஆ(கு)ம் இது நனாவாம்

வந்துவந்து பிறவிதொறும் அகம்மமதை
வளரும்அது மகாநனாவாம்
நந்தும் அகம்கொடு நனவில் மனோராச்சியம்
செயலே நனாக் கனாவே 147

147. அன்பனே! முன்கூறிய ஏழு பூமிகளுள் முதல் நான்கு பூமிகளைப் பற்றி இக்கவியில் கூறுகின்றேன் கேட்பாயாக. சிருட்டியின் ஆரம்ப காலத்தில் அல்லது ஜாக்கிர அவஸ்தையின் ஆரம்பத்தில், பஞ்சபூதம் ஆகிய மாயையில் தோன்றிய அந்தக்கரணத்தில் தோன்றும் பிரம்மத்தின் பிரதிபிம்பமே சிதாபாசன். இந்த சிதாபாசனோடு கூடிய அறிவு ஜீவன். அது பீஜஜாக்ரம் எனப்படும். அந்த அறிவில் முன் இல்லாதிருந்து, பின், நான், எனது என்னும் அபிமானம் சூட்சுமமாக எழுதலே ஜாக்ரமாம். இந்த அபிமானம் பிறவிதோறும் வளர்ந்து வருவதே மகாஜாக்ரமாம். இந்த அறிவுதான் தான் அறிந்து, உள்ள விஷயங்களைப் பற்றி மனோராஜ்யம் செய்தலே ஜாக்ர சொப்பனமாம்.

உண்டு உறங்கி மனோராச்சியம் செயல் சொப்பனம்
எனும் பேருடையதாகும்
பண்டு கனாக்கண்டு மறந்ததை மீண்டும் நினைப்பது
சொப்பன நனாவாம்
மண்டும் இருள் மூடுவது சுழுத்தியாம் அஞ்ஞான
வகைகள் சொன்னோம்
விண்டு நிறைமுத்தி தரும் ஞானபூமிகள் ஏழும்
விளம்பக் கேளாய் 148

148. ஏனைய மூன்றும் இக்கவியில் கூறுகின்றார். உண்டு, உறங்கி, மீண்டும் மனோராஜ்யம் செய்தலே சொப்பனமாம். இந்த அறிவு, முன் சொப்பனத்தில் கண்டு மறந்த விஷயங்களை மீண்டும் சிந்திப்பதே சொப்பன ஜாக்ரமாம். இந்த அறிவு, மேல்கூறிய ஆறு அவஸ்தைகளையும் சிந்தித்து அறிய முடியாதபடி அஞ்ஞான இருளால் மூடப்பட்டுள்ள நிலைமையே சுழுத்தியாம். அன்பனே! இதுகாறும், யாம் அஞ்ஞான பூமிகளின் கூறுபாடுகளைச் சொன்னோம். இனி, அஞ்ஞானத்தில் இருந்து நீங்கப் பெற்று, வியாபக சேதனமான பிரமத்தை அறிந்து, ஜீவனுக்கு மோட்சத்தைத் தருகின்ற ஞானபூமி ஏழையும் பற்றிக் கூறுகின்றேன் கேட்பாயாக.

புலவர் புகழ் முதல்பூமி சுபேச்சை விசாரணை இரண்டாம் பூமியாகும்
நல்ல தனுமானசி மூன்றாம்பூமி சத்துவாபத்தி நாலாம்பூமி (பேரும்
சொல்லும் அசம்சத்திப் பேரும் பதார்த்தாபாவனைப் பேரும் துரியப்
மலினமறு மகனே ஐந்து ஆறு ஏழு பூமிகளா வகுத்தார் மேலோர் 149

149. அன்பனே! ஞானபூமியின் பெயர்களாவன : 1. சுபேச்சை, 2.விசாரணை, 3. தனுமாநசி, 4. சத்துவாபத்தி, 5. அசம்சத்தி, 6.பதார்த்தாபாவனை, 7. துரியமும் ஆகும்

துற்சங்க நிவிர்த்தி வந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சையாகும்
நற்சங்க மொழி வினவி ஞானநூல் பழகல் விசாரணையாம் நம்பி
முற்சங்க ஈடணைகள் விடல் தனுமானசி இந்த மூன்றினாலும்
சற்சங்க மனதில் உண்மை அறிவு உதித்தல் சத்துவாபத்தி தானே 150

150. இவற்றுள் முதல் நான்கு பூமிகளை இக்கவியில் கூறுகின்றார். பிரமஞானத்தை அடைய தீவிரமான இச்சை உண்டாகுதல் சுபேட்சை என்னும் முதற்பூமியாம். சற்குருவை அடைந்து ஞானசாஸ்திரங்களை விசாரித்து, ஜீவப்பிரமங்களின் அபேதத்தை அறிவது விசாரணை என்னும் இரண்டாம் பூமியாம். விசாரணை யினால் தெளிவடைந்து, தனது ஆசைகளைச் சுருக்கிக் கொள்ளுதல் தனுமானசி என்னும் மூன்றாம் பூமியாம். மேற்கூறிய மூன்று பூமியின் அப்பியாசத்தால், அனாத்ம வாசனையில் நின்றும் நீங்கி, ஆத்ம ஸம்ஸ்காரத்தோடு கூடிய மனதில், தன் நிஜசொரூப நிச்சயம் உண்டாதலே சத்துவாபத்தி என்னும் நான்காம் பூமியாம்.

தத்துவத்தில் மனம் உறைத்து மித்தைஎலாம் மறத்தல் அசம்சத்தியாகும்
அத்துவிதானந்தம் வரும் திரிபுடி போம் பதார்த்தாபாவனை அதுஆகும்
வத்துநிலை இருந்தபடி இருந்த மவுன சுபாவம் துரியமாகும்
இத்துரிய பூமியை முன் துரியாதீதப் பதம் என்ற (அ)துவும் கேளாய் 151

151. ஏனைய மூன்று பூமிகளைப் பற்றி இக்கவியில் கூறுகின்றார். ஆத்மாவான பிரம சொரூபமே, தன் நிஜ சொரூபம் என்னும் நிச்சயத்தால், மித்தையான நாமரூபங்களை மறந்து விடுதல் அசம்சத்தி

என்னும் ஐந்தாம் பூமியாம். இந்த ஐந்து பூமிகளின் திட நிச்சயத்தால், அத்வைதானந்தம் மேலிட, அதனால் காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்னும் திரிபுடிபேதம் நீங்குவதே பதார்த்தாபாவனை என்னும் ஆறாவது பூமியாம். சொச்சொரூபமாக நிலைத்தல் துரியமாகிய ஏழாவது பூமியாம்.

முற்புவி மூன்றினும் உலகம் தோன்றுதலால்
சாக்கிரமாம் மூன்றற்கு அப்பால்
சொற்பனமாம் அதுவும் மெள்ள நழுவும்
ஐந்தாம் பூமியே சுழுத்தியாகும்
அற்புதமாம் சுகானுபவம் மிகும் ஆறாம்புவி
துரியம் அதற்கு அப்பால் ஓர்
கற்பனை இலாத இடம் அதீதம் என்று
மவுனமாக் காட்டும் வேதம் 152

152. அன்பனே! இந்தத் துரிய பூமியை, முன்னர் யான் துரியாதீதம் என்று கூறியதற்குக் காரணத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக. சுபேட்சை, விசாரணை, தனுமானசி ஆகிய மூன்று பூமியிலும் இருப்பவர்களுக்கு உலகம் மெய்யாகத் தோன்றுவதால் ஜாக்ரம் எனப்படும். நான்காம் பூமியான சத்துவாபத்தியில் உலகம் சொப்பன சமானமாகத் தோன்றும். ஐந்தாம் பூமியான அசம்சத்தியே சுழுத்தியாம். ஆறாவது பூமியான பதார்த்தாபாவனையே துரியமாம். இந்தக் கணக்குப்படி, ஏழாவது துரியாதீதம் என்று வேதம் மௌனமாய்க் காட்டும்.

இதன் உள்ளுரை : சுபேட்சை, விசாரணை, தனுமானசி ஆகிய மூன்று பூமியில் இருப்பவர்களுக்கு, தேகாதிப் பிரபஞ்சம் சத்தியமாய்த் தோன்றுவதால் ஜாக்ரம் எனவும், நாலாவதான சத்துவாபத்தி என்ற பூமியில் இருப்பவர்களுக்கு உலகம் மித்தையாகத் தோன்றுவதால் சொப்பனம் எனவும், ஐந்தாவதான அசம்சத்தி என்னும் பூமியில் இருப்பவர்களுக்கு மேற்கூறிய இரண்டுவிதத் தோற்றமுமில்லை. அதாவது நாம ரூபங்கள் தோன்றுவதில்லை. முற்றும் பிரமமாகவே தோன்றுகின்றபடியால் அதை சுழுத்தி எனவும், ஆறாவதான பதார்த்தாபாவனை என்னும் பூமியில் இருப்பவர்கள் சொச்சொரூப ஸ்திதியில் இருப்பதால் துரியம் எனவும், இதற்கு மேல் ஏழாவதானவிடம் அதீதம் என்றும், ஒரு கற்பனையும் இல்லாதவிடம் என்றும், "தன்பதியல்லா பேர்கள்தமை அல்லன் அல்லன் என்றாள்" என்னும்

கவிக்கு ஒத்து வேதம் மௌனமாய்க் காட்டும். இதில் பூமி என்று வரும் இடங்களில் விசாரணையினால் உண்டாகும் மனதின் பரிபாகநிலை எனக்கொள்க. ஞானபூமி ஏழும் மூன்றவஸ்தையில் அடக்கிக் கூறுகின்றபோது, முதல் மூன்றும் ஜாக்ரம், நாலாவது சொப்பனம், ஐந்தாவது சுழுத்தி, ஆறாவது துரியமாய் வருவதைக் காண்க.

துரிய நிலம்தனை துரியாதீதம் எனின் மயக்கம்
 என்று கருதி மேலோர்
அரியதொரு விதேக முத்தி அதீதம் என்பார் அது
 கணக்கில் ஆறாம்பூமி
மருவு சுழுத்தியில் காட்சி சுழுத்தி என்பார் என்பது
 நீ மனத்தில் கொள்வாய்
பெருமை தரும் ஞானபூமியின் விகற்பம் இன்னம்
 உண்டு பேசக் கேளாய் 153

153. குருதேவா! துரிய பூமியை துரியாதீதம் என்று சொன்னால் அது சந்தேகத்திற்கு இடமல்லவா? அன்பனே! வேதாந்த நூல் உணர்ந்த பெரியோர்கள், துரிய பூமியை துரியாதீதம் என்று கூறினால் ஐயம் ஏற்படும் என்றெண்ணி விதேகக் கைவல்யத்தை துரியாதீத பூமி என்று கூறுவர். அந்தப் பிரகாரம் எண்ணிப் பார்த்தால், பதார்த்தா பாவனை என்னும் ஆறாவது பூமி கனசுழுத்தி அல்லது காடசுழுத்தி என்றும், ஏழாவது பூமியை துரியம் என்றும், பேதப்படுத்திக் கூறுவது உண்டு. இவ்வாறு பேதமாகக் கூறியதின் பொருளைத் தெரிந்து கொள்வாய். பெருமைமிகு ஞானபூமியின் பிரிவுகள் இன்னமும் உண்டு சொல்லுவேன் கேட்பாயாக.

இதன் உள்ளுரை : இதில் பேதம் யாதோவெனின், முன்கூறிய 152ல் முதல் மூன்று பூமி ஜாக்ரம் என்றும், நாலாவது பூமி சொப்பனம் என்றும், ஐந்தாவது பூமியே சுழுத்தி என்றும் கூறியபின், 153ல் ஆறாவது பூமியே சுழுத்தியென்று கூறுவது பேதமேயாம். இந்தப் பேத நிவிர்த்தி எங்ஙனமெனின் ஐந்து, ஆறு பூமிகளை கனசுழுத்தியாகக் கொள்க. இங்ஙனம் கொண்டால் ஏழாவது பூமி துரியமாகும். அதுவே அதீதமுமாகும். இனி ஏழாவதான துரிய பூமியே அதீதம் என்றால், அது ஐயத்திற்கிடமல்லவா எனின் 153வது கவியில் அரியதொரு விதேக முத்தி அதீதமென்பர் என்று கூறுவதால், விதேக முத்தியே அதீதமென்றார்.

முன் நிலங்கள் ஏறிய மூவரும் அப்பியாசிகளாம் முத்தரல்லர்
பின் நிலங்கள் வரன் வரியான் வரிட்டன் எனும் சீவன்முத்தர் பேதமாகும்
சொன்ன நடுப்பூமி வந்த ஞானிகளே பிரமவித்தாம் தூயமுத்தர்
இன்னமும் அப்பூமிகளின் பெருமைதனை நீயறிய யான் சொல்வேனே

154. அன்பனே! முதல் மூன்று பூமியில் ஏறியவர்கள் அப்பியாசிகளே ஒழிய, ஜீவன் முத்தர்கள் அன்று. மற்ற நான்கு பூமிகளில் ஏறியவர்கள் ஜீவன் முத்தர்கள் எனப்படுவர். இவர்கள் நான்குவிதமாவார்கள். இவர்களில் ஐந்தாவதான அசம்சத்தி என்னும் பூமியில் ஏறியவன் பிரம்மவித்துவரன் எனப்படுபவன். ஆறாவதான பதார்த்தாபாவனை என்னும் பூமியில் ஏறியவன் பிரம்மவித்துவரியான் எனப்படுவன். ஏழாவதான துரிய பூமியில் ஏறியவன் பிரம்மவித்து வரிஷ்டன் எனப்படுவன். இவற்றிற்கு இடையில் உள்ள சத்துவாபத்தி என்னும் நாலாவது பூமியில் ஏறியவனுக்கு பிரம்மவித்து எனப்பெயர். இவர்களில் நடுப்பூமி வந்த ஞானிகளே பிரம்மவித்தாம் தூயமுத்தர் அதாவது தூயமுத்தன் என்று அடைமொழி கொடுத்துச் சிறப்பித்து கூறியதை நோக்குக.

இதன் உள்ளுரை : சத்துவாபத்தி என்னும் நாலாவது பூமியில் இருப்பவன் பிரம்மவித்து எனப்படுவன். இவன் மகாவாக்கிய விசாரத்தால் பிரம்மத்தைத் தன் சொரூபமாக அறிந்தவன். இவனே பிரம்ம நிஷ்டா குருவாக இருந்து அதிகாரி புருஷர்களுக்கு வேதாந்த உபதேசாதிகள் செய்வன். இவனுக்கு உலகம் சொப்பன சமானம். இவனது விவகாரமோ, "மாதவம் செய்யினும் செய்வார், வாணிபம் செய்யினும் செய்வார், பூதலம் புரப்பார், ஐயம் புகுந்துண்பார் ஜீவன் முத்தர்" என்று கூறியது இவனையே குறிக்கும். இவனுடைய பிராரத்த கருமம் அவ்வாறு இருக்கிறது. இவனாலே உலகத்தில் பிரம்ம வித்தியா சம்பிரதாயம் நிலைக்க வேண்டும். இவனாலே சிஷ்யர்கள் சிரவணம் கேட்டு ஞானிகள் ஆகவேண்டும். அதுமட்டுமா? இவனாலேயே மக்களுக்கு உபகாரமான தருமஸ்தாபனங்கள் ஏற்பட வேண்டும். அது மட்டுமா? இவனாலே பொய்யை பொய்யென்றும், மெய்யை மெய்யென்றும் உலகர் உணர வேண்டும். அது மட்டுமா? ஜனகராஜனைப் போல் உலகை ஆளத் தகுதியுடையவன் இவனேயாம். அது மட்டுமா? எங்ஙனம் அலங்காராதிகள் மாங்கல்ய ஸ்திரீக்கு பொருந்துமோ, விதவைக்குப் பொருந்தாதோ, அங்ஙனமே

சகல போக்கிய போகங்களும் இவனுக்கே பொருந்தும். விதவை ஒப்பார்க்குப் பொருந்தாது. இதுபற்றி அன்றோ, 154வது கவியில், "சொன்ன நடுப்பூமியில் வந்த ஞானிகளே பிரம்ம வித்தாம் தூயமுத்தர்" என்று சிறப்பித்துக் கூறினார் இந்நூலாசிரியரும். மற்ற மூவருக்கும் மேற்கூறிய உலகோபகார கருமங்கள் செய்வது பொருந்தாதென்க. ஏனெனின், அசம்சத்தி என்னும் ஐந்தாம் பூமியில் ஏறியவன் வரன். இவனுக்கு உலகம் சுழுத்தியில் இருப்பவனைப் போன்று விஷயங்களைக் கிரகியாதவன். ஆகையால் இவனாலும் உலக உபகாரங்கள் இன்று. அடுத்தபடி பதார்த்தாபாவனை என்னும் 6வது பூமியில் ஏறியவன் வரியான். இவனுக்கு உலகம் கனசுழுத்தியில் இருப்பவனைப் போன்று இருத்தலாலும், இவனாலும் உலகோப காரங்கள் இன்று. ஏழாவதாகிய துரியபூமியில் இருப்பவன் வரிட்டன், இவன் ஸ்வரூப சுபாவ ஸ்திதியில் இருப்பதால் இவனுடைய அந்தக் கரணம் விஷய பரிணாமமாய்ச் சலனமடைவதில்லை. ஆகையால், இவனாலும் உலகோபகார கருமங்கள் இன்று. இதனால் நான்காவதான சத்துவாபத்தியில் ஏறிய பிரம்மவித்தானவன் உலகில் இருமுக நாட்டமாயிருப்பான். இப்படி இருப்பதற்குக் காரணம் அதிகாரி புருஷர்களின் பிராரத்த கரும விசேஷமே காரணமாம் என உணர்க. மேலும் இருமுக நாட்டம் எங்ஙனம் ஆம் எனின், ஏரிக்கரையில் நிற்பவனுக்கு ஏரியின் உள்ளும், வெளிப்புறத்திலும் நடப்பது தெரிவது போலும், பூனையின் கண்களுக்கு இரவும், பகலும் தெரிவது போலும், இவன் பரமார்த்தீக, லௌகீகமாகிய இரண்டிலும் நாட்டமுடையவனாக இருப்பான். இவன் பெருமையைப் பற்றி இக்கவிக்கு (154) துறவாண்டவர் என்னும் பெரியார் அளித்த உரையில் "ஸ்திரீ முதலிய விஷயங்கள் என்னும் பாம்பு கடித்து விடும் என்னும் பயத்தால் வரன், வரியான், வரிட்டன் ஆகிய மூவரும் சமாதி மேடையில் ஏறியிருக்க, இந்த பிரம்மவித்தானவன் அந்தப் பாம்பை தன்மேலே போட்டுக் கொண்டு தனக்கு மயக்க விஷம் ஏறாமலும், அதாவது தனது அசங்க (பற்றற்ற) ஞானத்தால் விஷயத்தோடு கூடி இருந்தும், விஷய வாசனை தன்னைப் பற்றாமலும், விஷயமாகிய பாம்பால் கடிபட்டு மயக்கம் அடைந்த திடபோதமில்லாத ஏனைய முமுட்சுக்களின் மயக்கத்தை நீக்க, பிரம்மோகம் அதாவது பிரமமே நான் என்னும் கருடத் தியானத்துடன் சாட்சி மாத்திரமாயிருப்பதால், நடுப்பூமியில் வந்த பிரம்மவித்தாம் தூய முத்தர் என்றார்" என்று கூறியிருப்பதால் பிரம்ம வித்தின் திட நிச்சயம் தெளிவாகத் தெரிகிறதல்லவா? இந்த நிச்சயத்தை

விட்டு, பேச்சு மூச்சடக்கி மௌன சமாதியிருக்க வேண்டும் என்றும், ஞானிகளுக்கு விவகாரம் கூடாதென்றும், பேசியும், எழுதியும் வரும் இக்காலத்தில் ஞானிகளின் நிச்சயம் தெரியாமல் வாளா போயினர் பலர். நனவில் சுழுத்தி, நிர்விகல்ப சமாதி, வரிட்ட நிலை, சின்முத்திரை, கண்களின் விழிகளை மேலே சொருகி இருத்தல், அமிர்தபானம் பருகல், ஜோதி தரிசனம் செய்தல் முதலியவற்றைப் பற்றி வானளாவப் பேசி விவகார ஞானிகளையெல்லாம் தூற்றுவாராயினர். பாவம்! இவர்களுடைய மயக்க வார்த்தைக்கு கோடாரியாக மேல் காட்டிய துறவாண்டவரின் விளக்கமே போதும் என்க. மேலும், ஞானவாசிட்டம் வீரசேகரர் உரை 1079ம் பக்கத்தில் "ஞானிகளுக்கு அனவரதமும் சமாதியேயாம்" என்றார். மேற்படி உரை 1123ம் பக்கம் "அனுபவித்த சோர நாயகன்மீது மதிபதிந்த நாரியானவள் கிரக கிருத்தியங்கள் செய்வதொப்ப ஞானியும் நுகர்வினை வயத்தால் எய்திய தொழில்கள் செய்யினும் சொச்சொரூப அனுசந்தானத்தை விட்டகலான்" என்றும், மேற்படி வாசிட்டம் 1651ம் பக்கம், "கேயூராதிகளில் கனகமென்னும் ஏகபுத்தி உடையவன் நிர்விகல்பன்" என்றும், மேற்படி நூல் 1726ம் பக்கம் "நனவில் சுழுத்தி நிலைமேவி, அதாவது நிர்விகார சித்தனாய் விவகாரங்களைச் செய்வாய்" என்றும் கூறியிருப்பதால் ஞானிகளுக்கு விவகாரம் உடன்பாடாம். எனவே இனிமேலாயினும் நனவில் சுழுத்தி, நிர்விகல்ப சமாதி, மனோலயம் முதலிய விவகாரங்களை விட்டொழித்து, உலகை பிரம்ம சொரூபமாக பார்ப்பாயாக. விசாரசாகரம் 7ந் தரங்கத்தில் "சமாதி அப்பியாசம் செய்ய வேண்டும் என்று பேசிய மத்திம கனிஷ்ட (கடை) அதிகாரிகளின் பேச்சைக் கேட்டு, இவர்கள் பைத்தியம் பிடித்தவர்கள் போல் பிதற்றுகிறார்கள் என்று நினைத்து உத்தம அதிகாரியானவன் சிரித்தான்" என்று கூறியிருப்பதால், சமாதி பழக வேண்டும் என கூறுபவர்களின் வாய் மூடுவதற்கு தக்க சான்றாம். நான் பிரமம் என்னும் உறுதிக்கு உவமை யாதோ எனின், பஞ்சதசி 1258ம் பக்கம் "ஓர் ஆற்றில் ஜலம் ஓடிக் கொண்டிருக்கிறது. ஆனால் அதன் அடிபாகத்தில் உள்ள பாறாங்கல் அசையாமல் இருக்கிறது. அதுபோல், ஞானியின் புத்தி விவகாரம் செய்யினும், தான் ஆத்ம வடிவமாய் இருத்தலால், அவன் விவகாரம் செய்தும் செய்யாதவன் ஆகிறான். மேலும் ஞானியின் விவகாரத்தில் நியமமில்லை என்பதற்கு பஞ்சதசி 1275ம் பக்கத்தில் "இந்த ஞானி புசிக்கின்றவனாயும், விளையாடு கின்றவனாயும், ஸ்திரீகளோடாவது, வாகனங்களோடாவது, மற்ற ஞானி

முதலியோர்களோடாவது ரமிக்கின்றவனாகி, இந்த ஞானி சரீரத்தைப் பற்றி நினைக்கின்றதில்லை. பிராணன் பிராரத்துவ கருமத்தினால் இவனை ஜீவிக்கச் செய்கின்றது" என்று கூறியிருப்பதாலும் அறியலாம். இவன் உலக உபகார கருமம் செய்யும்போது பயமில்லையோ எனின், புரந்தரன் போர் செய்யினும் அஞ்சான். இவனுக்கு கருமத்தில் பற்றில்லையோ எனின், தண்ணீரில் நெட்டியானது ஆயிரவருஷ காலம் கிடந்தாலும் உள்ளே ஈரம் சேர்வதில்லை. மேலும் இவனைப் பற்றி கீதாசாரியன் 18ம் அத்தியாயத்தின் 17வது சுலோகத்தில் "பிரம்ம வித்தானவன் இவ்வுலகத்தாரை எல்லாம் கொன்றாலும், கொன்ற வனாகமாட்டான்" என்றார். இதற்கு சித்பவானந்த சுவாமிகள் உரையில், "தன் நிஜ சொரூபத்தில் உறுதிகொண்டு இருப்பவன், உடலும் இந்திரியங்களும் செய்கின்ற செயலிலே கட்டுண்டு போவது இல்லை. கொல்லுதல் முதலியன பிரகிருதியின் விவகாரங்களாகக் காண்கின்றான்" என்றார். மேலும் பஞ்சதசி 1274ம் பக்கம் "இந்தப் பிரம வித்தானவனுக்கு தாய் வதையினாலும், திருட்டினாலும், கற்பழித்த தனாலும், சிசுவதையினாலும் பாவமில்லை" என்று கூறுகின்றது. என்னே இவன் பெருமை.

நாலாம் பூமியில் வரும்முன் மூன்றுபூமியும் அடைந்து நடந்து மாண்டோர்
மேலான பதம் அடைந்து பிறந்து மெள்ள மெள்ள வந்து வீடுசேர்வார்
மாலான பவத்தில் விழார் முதல்பூமி கிடைப்பதுவே வருத்தம் மைந்தா
காலான முதல்பூமி கைவந்தால் முத்தியும் கைவந்ததாமே 155

155. குருதேவா! முன் சுபேச்சை, விசாரணை, தனுமானசி என்னும் மூன்று பூமியில் ஏறியவர்கள் முத்தரல்லர் என்றும், அவர்கள் அப்பியாசிகள் என்றும் கூறினீர். அங்ஙனமாயின் அவர்கள் அடையும் கதி யாது? இதை அருள்வீராக. அன்பனே! நான்காம் பூமியான சத்துவாபத்தியில் வருவதற்குமுன் அந்த மூன்று பூமியில் ஏறியவர்கள் மரணமடைவாராயின், சொர்க்காதி போகங்களை அனுபவித்தபின், பூமியில் உத்தமர்களுடைய குலத்தில் பிறந்து மெள்ள மெள்ள வந்து விட்டுப்போன குறைகளைப் பூர்த்தி செய்வார்கள். அதாவது நான்காம் பூமியில் வந்து பிரம ஞானத்தால் மோட்சமடைவார்கள். துன்பத்திற்கு ஏதுவான பிறவியை அடைய மாட்டார்கள். முதற்பூமியான சுபேச்சை கிடைப்பதுவே மிகக் கஷ்டம். எல்லாப் பூமிகளுக்கும் அடிப்படையான முதற்பூமி கிடைத்தால், முக்தியும் கைவந்ததாகும். இதில் சொர்க்கத்தை அடைவதென்பது பூர்வ பட்சமெனக் கொள்க.

இப்புவியில் இஞ்ஞானபூமி ஒன்றில் இரண்டில் அடைந்திருந்தாரானால்
அப்புருடர் மிலேச்சராகிலும் முத்தர் குருபாதத்து ஆணை மெய்யே
தப்புரை என்றவர் கெடுவார் நடுவான மறைகளை நீ சங்கியாதே 156
செப்பும் மொழிவழி திடமாய் அகம்பிரமம் என்று இருந்து தெளிந்திடாயே

156. அன்பனே! ஞானபூமியின் பெருமையை இன்னும் கேட்பாயாக. இந்த ஞானபூமி ஏழினுள் முதல் பூமியான சுபேச்சையிலாவது, இரண்டாம் பூமியான விசாரணையிலாவது ஏறியிருப்பார்களாயின், அவர்கள் ஆசார ஈனர்களாயினும், நற்குணம் இன்றியவர்களாயினும், சற்குரு பாதத்தின் மீது ஆணையாக முத்தர்கள் ஆவார்கள். இது சத்தியமே. இதைக் கபட வார்த்தை என்பவர்கள் கெடுவார்கள். வேதவாக்கியங்களைப் பற்றி நீ சந்தேகப் படாதே. மகாவாக்கிய விசாரத்தின்படி சொரூப நிச்சயத்தில் உறுதியுடையவன் ஆகி இருப்பாயாக.

இதன் உள்ளுரை : "செப்பும் மொழிவழி திடமாய் அகம் பிரமம் என்று இருந்து தெளிந்திடாயே" என்றார். இவ்வாறு வேதாந்த சூடாமணியின் 144வது கவியின் உரையில் "தேகமே தான் எனப் பாவிப்பதுபோல, பிரம்மமே நான் என்ற திடபோதமே ஞானாப் பியாசத்திற்கு அவதியாம்" என்றும், பஞ்சதசி 945ம் பக்கம் "மரண சுபாவமுள்ள தேகத்தை நான் என்னும் அபிமானத்தை விட்டு, தான் மரணமின்றிய பிரம்மமாய், இந்த சரீரத்திலேயே நிஜ வடிவ சச்சிதானந்த பிரம சொரூபமாய் இருக்கின்றேன்" என்றும் கூறியிருப்பதால் அறியலாம். ஆனால் பிரம்மத்தைத் தியானிக்க வேண்டாவோ எனின் வேண்டாம். பஞ்சதசி 901ம் பக்கம் "ஞானத்தின் பொருட்டாவது, மோட்சத்தின் பொருட்டாவது, ஞானிக்கு தியானம் செய்ய வேண்டிய அவசியமில்லை. ஏனெனின் தனக்கு அன்னியமான பொருளைத்தான் தியானிக்க முடியுமே ஒழிய, தன்னைத் தான் தியானிக்க முடியாது. முடியுமானால் தன்னைப் பற்றுதல் என்னும் தொழிலுக்கு கர்த்தாவும், அதை ஏற்கும் பொருளும் நானேயாதல் ஆத்மாஸ்ரய தோஷமாம் என்று முன்னமே கூறியுள்ளோம். இக்காரணத்தால், "செப்பும் மொழி வழி திடமாய் அகம்பிரமம் என்றிருந்திடாயே" என்றார் இந்நூல் ஆசிரியரும். மேலும் பகவத்கீதை ஐந்தாம் அத்தியாயம் 16வது சுலோகத்திற்கு வீரசுப்பையா சுவாமிகளின் உரையில் "யான் பிரம

சொரூபன் என்னும் ஞானம் மகாவாக்கியத்தால் உண்டாயினும், பத்தாமவன் நீ ஆகின்றாய் என்னும் வாக்கியத்தாலும் உண்டாகும் ஞானம் போல் அபரோக்ஷ வடிவமேயாம். இது சர்வ வேதாந்த சாஸ்திரங்களின் நிச்சயம்."

பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தரும் ஞானபூமி என்று
நெல்லாகி முளைக்கும் எனைத் தண்டுலமாக்கிய குருவே நீர் சொன்னீரே
இல்லாளும் குடும்பம் விட்டுச் சந்நியாசம் புகுந்து ஏகாங்கியானோர்
அல்லாமல் முத்திபெறார் என்று சிலர்சொல்லும் மயக்கம் அகற்றுவீரே 157

157. நெல் முளைப்பது போல் ஜெனித்துக் கொண்டிருந்த என்னை அரிசி முளைக்காததைப் போல், மீண்டும் ஜெனிக்காத வழி செய்த குருதேவா! தாங்கள் முன் 153வது கவியில் ,கொடிய செயல் செய்பவர்களும், ஞான பூமியின் வாயிலாக விதேக முத்தியை அடையவார்களென்று சொன்னீரே. ஆனால் மனைவி, மக்கள் முதலிய குடும்பத்தை விட்டு சன்னியாசியாகிப்பின் ஏகாந்தத்தில் வசிப்பவர்கள் தான் முத்தியடைவார்கள் என்று சிலர் கூறும் பிராந்தியை நீக்கி அருள்வீராக.

சிட்டர் புகழ் மகனே நீ சங்கித்த சங்கை நன்று தெரியக் கேளாய்
கட்டழியும் துறவு நால்வகையாகும் அவைகளுக்கு அங்கு ஆகும் பேர்கள்
பட்ட துயர் கெடும் குடீசகம் வெகூதகம் அஞ்சம் பரமஅஞ்சம்
விட்டகலும் துறவுக்கு விராகம் காரணமன்றி வேடமன்றே 158

158. அன்பனே! உன் வினாவிற்கு விடை ஆறு கவியால் கூறுகின்றேன் கேட்பாய். பந்தப் பிராந்தி நீங்கும் சன்னியாசமானது நான்கு வகையாகும். அவைகளின் பெயர்களாவன குடீசகம், வெகூதகம், அம்சம், பரமாம்சம் என்பனவாகும். பந்தத்தை விட்டு நீங்கும் இந்த சந்நியாசங்களுக்கு ஆசையின்மையே காரணமாம். வேஷம் காரணமன்று.

இதன் உள்ளுரை : "துறவுக்கு விராகம் காரணம் அன்றி வேடம் காரணமன்றே" என்று இந்நூலாசிரியர் அருளிச் செய்திருப்பதைச் சற்று ஆராய்வோம். துறவோடு சன்னியாசத்தையும் இணைத்து ஒன்றாகக் கூறியிருக்கிறார். அற்ப சுருதி வாக்கியப்படி பிரம்மசரிய ஆஸ்ரமம், கிரஹஸ்தாஸ்ரமம், வானப்பிரஸ்தாஸ்ரமம், சன்யாஸ்ரமம் என நான்கு . இதன் வரிசைக் கிரமப்படி பார்த்தால் 70 வயதில் தான் சன்யாஸம் பெற

முடியும் என்று சில நூலாசிரியரும், இளமையில் சன்னியாசம் பெற வேண்டும் என சில நூலாசிரியரும் கூறியிருக்கின்றனர். எழுபது வயதில் பெறும் சந்நியாசம் ஆபத் சன்னியாசமாம். இது பயனற்றது என்று வைராக்கிய தீபம் கூறுகிறது. இந்த சன்னியாசங்கள் எல்லாம் ஒருவித சடங்கே ஒழிய உண்மையான சன்னியாசம் இதுவன்று. இனி துறவும், சன்னியாசமும் வேறுவேறு எனக் கொள்ளுதல் வேண்டும். ஏனெனின் துறவே சந்நியாசம் ஆனால் உள்துறவு, புறத்துறவு ஆகிய இரண்டு துறவுகளும் உடையவர்கள் கானகத்திலும், நாட்டிலும் இருக்கிறார்கள். ஆனால் அவர்களிடத்தில் ஆத்ம ஞானம் தினையளவும் இல்லை. இல்லாமையால் அந்தத் துறவு பயனற்றதோ எனின், அங்ஙனமன்று. சற்குருவை அடைந்து கேட்டல், சிந்தித்தல், தெளிதலின் மூலமாக ஆத்ம ஞானத்தை அடைய அந்தத்துறவு அவகாசம் தருகிறது. இவ்வாறாக அந்தத் துறவைப் பயன் படுத்தினால் பயனுண்டு. பயன்படுத்தா விட்டால் அதனால் பயனில்லை. இனி வேஷமே சன்னியாசமானால் ராவணன் சன்னியாசமும், அர்ச்சுனன் சன்னியாசமும் ஏற்க வேண்டும். அங்ஙனம் ஏற்பார் ஒருவருமில்லை. இனி சன்னியாசம் என்ற சொல்லுக்குப் பொருள் யாதோவெனின், சகல தொழில்களையும் விட்டு விடுவது சன்னியாசம் என்றும், எல்லா தொழில்களையும் செய்து கொண்டு இருப்பது சன்னியாசம் என்றும் கீதையின் ஐந்தாம் அத்தியாயம் இரண்டாவது சுலோகத்தில் கூறப்பட்டிருக்கிறது. இந்த இரண்டுவித அபிப்பிராயத்தில் சகல கருமங்களையும் விட்டு பிச்சை ஏற்று உண்டு திரிதல் ஒருவித சன்னியாசமாம். வேதாந்தப் பாடங்களைக் கேட்டு தெளிவடைந்தபின் சகல கருமங்களையும் நிஷ்காமமாக அல்லது பலனை விரும்பாது செய்துக் கொண்டு இருப்பது மற்றொருவித சன்னியாசமாம். ஆத்மஞானத்துடன், உலகோபகார கருமமும் செய்து கொண்டு இருப்பவனுக்கு கருமயோகி என்ற ஒருபெயரும் உண்டு. மேற்கூறிய இரண்டில் ஞானத்துடன் கருமங்களையும் செய்யும் சன்னியாசியைத் தான் பகவான் கீதையில் கருமயோகி என்று சிறப்பித்துக் கூறியுள்ளார். இது கீழ்வரும் மேற்கோளால் விளங்கும். கீதை ஐந்தாம் அத்தியாயம் இரண்டாம் சுலோகத்திற்கு வீரசுப்பையா சுவாமிகள் உரையில் "அருச்சுனா! சகல கருமங்களையும் விட்டுவிடும் சன்னியாசத்தைப் பார்க்கிலும், பற்று இன்றி கருமங்களைச் செய்யும் கருமயோகி அதாவது சன்னியாசியே மேலானவன்" என்றும், மேற்படி சுலோகத்திற்கு சித்பவானந்த சுவாமிகள் அளித்த உரையில் "கர்மத்தை விட்டு விடும் சன்னியாசமும், சகல கருமமும் பலனை விரும்பாது செய்யும் சன்னியாசமும் ஆகிய இரண்டும் சிறப்புடையது. எனினும் பலனை

விரும்பாது கருமம் செய்யும் சன்னியாசமே மேலானது" என்றார். இதில் ஞானமில்லாது கருமங்கள் மட்டும் செய்யும் சன்னியாசமும் சிறப்புடையது என்று கூறியது ஐதீகப் பிரமாணத்தை ஒட்டிக் கூறியதாம். எங்ஙனமெனின் ஓர் ஆல விருக்ஷத்தை முளையிலேயே கிள்ளி எறிவது சுலபம். வளரவிட்டுப் பறிப்பது கஷ்டம். அதுபோல், கருமத்தில் அல்லது ஆண்டான் - அடிமையில் பழகியவர்களுக்கு ஆத்ம ஞானம் புகட்டுவது கஷ்டம். இதை கீதாசாரத்தின் முகவுரையில் ஞானாசாரியர் காசிகானந்த சுவாமிகள், மதாலசாவின் கதையினால் விளக்கி யுள்ளார்கள். சுவாமி விவேகானந்தரும் ஞான தீபத்திலும் எடுத்துக் காட்டியுள்ளார். அதாவது மார்க்கண்டேய புராணத்தில் வரும் மதாலசா என்னும் பெண்மணியானவள் தன் குழந்தைகளுக்கு கருமம், பக்தி, ஆண்டான், அடிமை ஆகியவைகளைப் போதிக்காமல் ஆத்மஞானத்தைப் புகட்டி, திருஞான சம்பந்த சுவாமிகளைப் போல் வளர்த்தாள். திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு இளைமையிலேயே ஞானம் ஊட்டப்பட்டது. மேற்படி சுலோகத்திற்கு மகாத்மா காந்திஜி அளித்த உரையில் அனாசக்தி யோகம் 50ம் பக்கத்தில் "அர்ச்சுனா கரும சன்னியாசத்தைப் பார்க்கிலும், அதாவது கருமங்களை விட்டுவிடும் சன்னியாசத்தைப் பார்க்கிலும், பற்றின்றி கருமங்களைச் செய்து வரும் சன்னியாசமே மேலானது" என்றும், மேற்படி சுலோகத்திற்கு ஸ்ரீவினோபாஜி அளித்த உரையின் 61ம் பக்கத்தில் "சன்னியாசத்தில் இரண்டு தன்மைகள் ஒப்பி இருக்கின்றன. ஒன்று 24 மணி நேரமும் கருமம் செய்து கொண்டே இருந்தும் எதையும் செய்யாமை; மற்றொன்று ஒருகணமும் எதையும் செய்யாத போதிலும் எல்லாவற்றையும் செய்தவனாகின்றது. இந்த இரண்டில் முதலில் கூறியது தான் சுருதி, யுக்தி, அனுபவங்களுக்கு ஒத்த சன்னியாசமாகும்" என்று கூறியிருப்பதால் சன்னியாசம் என்பதற்கு பொருள் கருமத்தை விட்டு விடுவதன்று; உலக உபகாரமாகச் செய் என்று பகவான் கூறியிருப்பதால், சகல தொழில்களையும் ஞானத்துடன் செய்வதே கரும யோகமாம். இதுவே சன்னியாசமுமாம். ஏனெனின் கருமம் செய்யாது எந்த ஜீவனும் உலகத்தில் ஒரு கண நேரமும் வாழமுடியாது. கண் திறப்பதும், மூச்சு விடுவதும் கருமம்தான். அப்படியிருக்க கருமங்களை விடுவது சன்னியாசம் என்பது பொருந்தாது. இந்த சன்னியாசங்கள் அனைத்தும் பூர்வபக்ஷமான கரும காண்டங்களால் சிருஷ்டிக்கப் பட்டவையாகும். வைதீக சடங்குகளால் ஏற்படுகின்ற சன்னியாசங்கள் இவைகள். இந்த சன்னியாசங்கள் பரம்பரை சாதனமாக ஒப்பப்பட்டிருக்கின்றன. இவைகட்கு ஆதாரமான கரும காண்டத்தைப் பற்றி அடுத்த கவியில் "அந்தணர் நூல் மித்தையென விடுதல் தீவிரதரமாம்" என்றார். இதற்கு ஸ்ரீபொன்னம்பல சுவாமிகளின்

உரையில், "அந்தணன் ஊர் அதாவது சொர்க்கலோகம்" என்றும், வேறு உரைக்காரர்கள், "அந்தணர் நூல் அதாவது கரும காண்டம்" என்றும் எழுதப்பட்டு இருக்கின்றது. அது எப்படியாயினும், இரண்டும் தீவிரதர வைராக்கியமுடையவனுக்கு மித்தை தான். இனி உண்மையான சன்னியாசம் யாதோவெனின், கேட்பாய். ஆதி சங்கர பகவற்பாதர் இயற்றியருளிய பஞ்சமாஸ்ரமம் என்னும் நூல் ஒன்றுள்ளது. அதில் ஒரு சுலோகத்தைப் பாருங்கள்.

தேகம் நியாஸோஹி சன்னியாசம் நைவ காஷாய தாரணம் I
நாஹம் தேகோ அகம் ஆத்மேதி ஏதத் ஜ்ஞானம் விதுர் புதா II

இதன் பொருள் : 28 தத்துவமான தூல, சூட்சும சரீரங்கள் நானல்ல; 29வது தத்துவமான கூடஸ்த - பிரமமே நான் என்று அறிவதுவே சன்னியாசமாம். காவியுடை அணிவது மட்டும் சன்னியாசமன்று. தேகம் நானன்று; நான் ஆத்ம ஸ்வரூபி என்று அறிவது ஞானமுமாகும். இந்த ஆத்ம ஞானமுள்ள சன்னியாசிகள் எந்த தேசத்திலும், எந்த ஜாதியிலும், எந்த ஆஸ்ரமத்திலும், எந்தத் தொழிலும் இருக்கலாம். அங்ஙனமிருந்தாலும் அவர்கள் சன்னியாசிகள் தான் என்பதற்கு ஐயமில்லை. இந்த ஞானமில்லாதவர்கள் எந்த ஆஸ்ரமத்திலிருந்தாலும் கால க்ஷேபமே ஒழிய வேறு பேறில்லை. நேதி நேதி வாக்கியமான இந்த தேகம் நியாசம் அதாவது தேகம் தானல்ல எனப்படும் சந்நியாசத்துடன், சந்நியாச ஆஸ்ரமத்தையும் பெற்றுக் கொண்டால் அது போற்றதற்குரியதாகும். ஏன் எனில் ஆத்மஞானத்துடன், ஆஸ்ரமமும் சேர்ந்தால் கர்மகாண்டி, பக்தி காண்டி முதலியோர்கட்கு இவர்களிடத்தில் பூஜிக்கத்தக்க புத்தியுண்டாகும். அதன் வாயிலாக மகாவாக்கிய உபதேசாதிகள் பெற வாய்ப்பு கிட்டும். அதன் மூலமாக இவர்களும் ஞானிகள் ஆவார்கள். இந்த ஞானம் எல்லோருக்கும் பொருந்தும் என்பதற்கு 163வது கவியில் "பந்தமனை துறந்து சிலர் அதிதிகளாயிருந்து அடைவர் பரம ஞானம் அந்தணர் மன்னர், வணிகர் சூத்திரராயிருந்து சிலர் அடைவர் ஞானம்" என்று கூறியிருப்பதால் அறியலாம். இப்படி ஞானம் எல்லோருக்கும் உரியது என்பதற்கு ஐயம் இல்லை. பண்டைக்கால ரிஷிகளும், முனிவர்களும் குடும்பத்தோடு ஞானிகளாக இருந்தார்கள் என்பதற்கு சுவாமி விவேகானந்தரின ஞானதீபம் 6வது சுடரின் 180வது பக்கத்தில் "அனைவருக்கும் ரிஷிகளாக உரிமையுண்டு என்று வாத்ஸாயன சூத்திரம் கூறுகிறது." மேற்படி நூல் 216வது பக்கத்தில் "எவன் ஆத்[illegible] உணரு கிறானோ அவனே ரிஷியாவான். காட்சிப் பொருள்கள் ஒவ்வொன்றிலும்

கடவுளைக் காண்பவன் ரிஷியாவன்" என்றும் கூறியிருப்பதால் தபசி, ரிஷி, முனி என்பதெல்லாம் ஆத்மஞானியைக் குறிக்கும் பரியாயப் பெயர்கள் எனக்கொள்க. மேலும் முனி என்பதற்கு ஆதிசங்கரர் இயற்றி அருளிய அபரோக்ஷானுபூதியின் 50வது பக்கத்தில் "மனனசீலன் முனி அதாவது சேதனாசேதன விசாரத்தால் தன்னை பிரமம் என்று அறிந்தவன் முனி" என்று கூறியிருப்பதால் ஆத்மஞானம் ஒன்றே உண்மையாம். இதைப் புகட்டாமல் தன் சொரூபத்தைத் தனக்கு வேறாக்கிப் போதிப்பது ஏனோ? இந்த ஆத்ம ஞானத்தைத் தவிர வேறு ஒரு மெய்ப்பொருள் உளதாக அறிவாளி உலகத்தில் ஒருவரும் கூறவில்லை. இதோ நமது ஆசியஜோதி, மனிதருள் மாணிக்கம் வரைந்த உலக சரித்திரம் 1ம் பாகம் 302வது பக்கத்தில், "இந்தியா, கிரீஸ் இந்நாடுகளில் புராதன தத்துவ சாஸ்திரிகள் உன்னை உணர் என்று இயம்பினார்கள். இந்த ஞானத்தை அடைய பழைய ஆரிய முனிவர்கள் இடைவிடாது வியக்கத்தக்க முயற்சி வரலாறுகளே நமது உபநிஷத் துக்கள்" என்று கூறியிருப்பதால், தன்னை ஆத்ம ஸ்வரூபி என்று அறியும் பிரம்ம வித்தைக்குமேல் வித்தை கிடையாது. இவ்வாறான கருத்துக்களை மனதில் வைத்துக் கொண்டு இந்த சிஷ்யன் முன் கவியில் "இல்லாளும் குடும்பமும் விட்டு சன்னியாசம் புகுந்து ஏங்காகியானோர், அல்லாமல் முத்தி பெறார் என்று சிலர் சொல்லும் மயக்கம் அகற்றுவீரே" என்று கேள்வி கேட்டு இருப்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

மந்தமும் தீவிரமும் தீவிரதரமும் என மூன்றுவகை விராகம்
வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்து வரும் விராகம் மந்தம்
இந்த உடலளவும் மனை தனம் வேண்டாம் எனவிடல் தீவிரம் என்பார்கள்
அந்தணன்ஊர் மித்தை எனவிடல் அது தீவிரதரமாம் அறிந்திடாயே 159

159. அன்பனே! துறவின் இலக்கணத்தை கேட்பாயாக. துறவு அடைபவர்களுக்குள் மூன்றுவித வைராக்கியம் உண்டு. அவைகளுக்குப் பெயர் மந்தம், தீவிரம், தீவிரதரமுமாம். இவற்றுள் தனக்குரிய குடும்பத்திற்கு ஏதாவது கஷ்டம் வரும்போது அதன் காரணமாக இந்தக் குடும்பம் வேண்டாம் என்று வரும் வைராக்கியம் மந்தமெனப்படும். பெரிய துக்கம் வரும்போது இந்த உடல் இருக்கும் வரையில் மனைவி, தனம் வேண்டாம் என்றும், இந்த சம்சாரத்தை விட்டகல வேண்டும் என்றும், அப்பொழுது மாத்திரம் உண்டாகும்

வைராக்கியம் தீவிரம் எனப்படும். சொர்க்காதி புவனங்களிலும் சண்டையும், துக்கமும் உளதாகக் கேள்விப்படுவதால் அது கிடைத்தாலும் வேண்டாம் என்று வரும் வைராக்கியம் தீவிரதரம் எனப்படும். இதில் வைராக்கியம் என்பது நிராசையைக் குறிக்கும் எனக் கொள்க.

பாவி மந்த விராகத்தில் சந்நியாசங்கள் ஒன்றும் பலித்திடாதே
தீவிரத்தில் குடீசகமும் வெகூதகமும் என்று இரண்டு திறங்கள் உண்டாம்
தாவி நடந்திடத் திடமிலாதவர்க்குக் குடீசகமும் சகங்கள் எங்கும்
மேவி நடந்திடத் திடமுள்ளவர்க்கு வெகூதகமும் என விதித்தார் மேலோர்

160. அன்பனே! மேற்கூறிய வைராக்கியங்களில், மந்த வைராக்கியத்தில் துறவியானவனுக்கு குடீசகம், வெகூதகம், அம்சம், பரமஹம்சம் என்ற நான்குவித சன்னியாசங்களில் ஒன்றுகூடப் பலிக்காது. இரண்டாவதான தீவிர வைராக்கியம் உள்ள துறவிக்கு குடீசகம், வெகூதகம் என்று இரண்டவித சன்னியாசம் சித்திக்கும். இந்த இரண்டுவித சன்னியாசத்தின் தாற்பரியத்தைக் கேட்பாய். உலகமெங்கும் யாத்திரை செய்ய திடமுள்ளவர்களே வெகூதக சன்னியாசி என்றும், அங்ஙனம் திடமில்லாமல் ஓரிடம் பற்றிக் கொண்டு இருப்பவர்களை குடீசக சன்னியாசி என்றும் அழைப்பார்கள்.

இருவகை தீவிரதரத்தும் அஞ்சன் என்றும் பரமாஞ்சன் என்றும் சொல்வார்
வரும் அஞ்சனுக்கு முத்தி சத்தியலோகத்தன்றி வாராது என்பார்
பரமாஞ்சனுக்கு முத்தி இவ்வுலகில் ஞானத்தால் பலிக்கும் என்பார்
திரம் மருவும் பரமாஞ்சன் தானும் இருவகையாகும் செப்பக் கேளாய் 161

161. அன்பனே! மந்தமும் தீவிரமும் ஆகிய இருவித சன்னியாசத்தின் இலக்கணம் சொன்னோம். இனி தீவிரதர சன்னியாசத்தின் இலக்கணமும் கேட்பாயாக. தீவிரதர வைராக்கியம் உடையோர்களுக்குள் இரண்டுவிதமுண்டு. அதில் ஒன்று அம்சன் என்றும், மற்றொன்று பரமஹம்சன் என்றும் கூறுவர். இந்த இரண்டில் அம்ச சன்னியாசிக்கு மோட்சம் சத்திய லோகத்தில் கிடைக்குமே அன்றி இவ்வுலகத்தில் கிடையாது. பரமஹம்ச சன்னியாசிக்கு மோட்சம் இங்கே சித்து-சட விசாரத்தால் உண்டாகும் என அறிக. அந்த பரமஹம்ச சன்னியாசமும் இருவகையாகும். அதையும் நீ கேட்பாயாக.

இதன் உள்ளுரை : இதில் அம்சனுக்கு முத்தி சத்தியலோகத்து அன்றி வராது என்று கூறியதற்குக் காரணம் யாதோவெனின், அவன் பிரணவம் முதலிய மந்திர ஜபமும், மூர்த்தி உபாசனையும் உடைய வனாதலால் அங்ஙனம் கூறினார். இதுவும் பூர்வ பட்சமேயாம். ஏனெனின் மோட்சம் ஒருவர் கொடுப்பதுவும் வாங்குவதுவும் அன்று. வாங்குவதாயின் அர்ச்சுனனுக்கு கண்ணன் மோட்சத்தைக் கொடுத்திருக்கலாம். கீதையின் 700 சுலோகத்தை உபதேசிக்கத் தேவையில்லை. அங்ஙனமே ஸ்ரீராமனுக்கு வசிட்டமாமுனிவர் மோட்சத்தைக் கொடுத்திருக்கலாம். ஞானவாசிட்டத்தில் 6000 சுலோகம் உபதேசிக்கத் தேவையில்லையல்லவா? இதனால் சத்தியலோகத்தில் மோட்சம் கூறுவது கருமகாண்டத்தின் சிருட்டியான பூர்வபட்சமாம். பரம ஹம்சனைப் போல் எவ்வித துறவியானாலும் சித்து-சட விசாரம் செய்து தன் யதார்த்த சொரூபம் பிரமம் என்று அறிவது மோட்சமாகும் என்பது சிதையாத சித்தாந்தமாம்.

சிஞ்ஞாசு ஞானவான் என்று இரண்டு பேர்கள் அவரில் சிஞ்ஞாசு
மெய்ஞ்ஞான பூமியின் முன்மூன்று பூமியுள் நடக்கும் விவேகியானோன்
சுஞ்ஞானவான் என்போன் சீவன்முத்தி அடைந்திருக்கும் தூய மேலோன்
அஞ்ஞானம் அகலும் அந்தச் சிஞ்ஞாசும் இருவகையாம் அதுவும் கேளாய் 162

162. அன்பனே! மேற்கூறிய பரமஹம்ச சன்னியாசம் இரண்டு விதமாயிருக்கும். அவர்களுக்குரிய பெயர்களாவன : ஒன்று ஜிக்ஞாசு, மற்றொன்று ஞானவான். இதில் ஜிக்ஞாசு என்பவன், முன்கூறிய ஞானபூமி ஏழினுள் முதல் மூன்று பூமியில் நடப்பவனாவான். இரண்டாவதான ஞானவான் என்பவன், ஞானபூமி ஏழினுள் நான்காவதான சத்துவாபத்தி என்னும் பூமியில் நடக்கும் ஜீவன் முத்தனாவான். இவன்தான் முன் பிரமவித்தாக வருணிக்கப்பட்டவன். அஞ்ஞானமில்லாத மேற்கூறிய ஞானவான் இரண்டு விதமாவார்கள். அவர்களின் இலக்கணத்தையும் நீ கேட்பாயாக.

இதன் உள்ளுரை : இதில் ஞானவான் என்பவனை உயர்வுபடுத்த வேண்டி சுஞ்ஞானவான் அதாவது நல்ல ஞானமுள்ளவன் என்று பொருள் படும்படி முன் கவியில் கூறி இருக்கிறார். இவன் நான்காவது பூமியான சத்துவாபத்தியில் நடப்பவனாவான். இவனே தூய மேலோன் என்றார். இவ்வாறு முன் 154வது கவியில் பிரமவித்தாம் தூயமுத்தன்

என்றார். இவனைத்தான் சுஞ்ஞானவான் என்று சிறப்பித்து இருக்கிறார். இவன் உலக விவகாரத்துடன் இருப்பவன். இனி அஞ்ஞானம் நீங்கக் கூடிய ஞானபூமியில் முதல் மூன்று பூமியை அப்பியாசித்துக் கொண்டு இருக்கும் ஜிக்ஞாசு என்பவன் இரண்டுவிதமாக இருப்பார்கள்.

பந்த மனை துறந்து சிலர் அதிதிகளாய் இருந்து அடைவர் பரமஞானம்
அந்தணர் மன்னவர் வணிகர் சூத்திரராய் இருந்து சிலர் அடைவர் ஞானம்
இந்தவகை சாத்திரத்தும் உலகத்தும் நடப்பது கண்டிருந்தும் மைந்தா
சிந்தனையின் மயக்கமென்னே சுருதி உத்தி அனுபவத்தால் தெளிந்திடாயே

163. அன்பனே! அந்த இரண்டுவிதம் யாதோவெனின், பொன் நிலம் மாதராசையை முற்றும் துறந்து, சற்குருவை அடைந்து, சன்னியாச ஆஸ்ரமத்தைப் பெற்றபின், சேதனாசேதன விசாரம் செய்து பிரம்ம ஞானத்தை அடைவது ஒருவிதம். மற்றொருவிதம் யாதோவெனின் பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரராயிருந்து தத்தம் வருணா சிரமத்திற்குரிய கருமங்களை நிஷ்காமமாய் செய்யும். மானச சந்நியாசம் உடையவர்களாகி அதாவது மனதில் நிராசையுடையவர் களாகி குருவை அடைந்து சேதனாசேதன விசாரம் செய்து பிரம்ம ஞானத்தை அடைவார்கள். இந்தப்படி சாஸ்திரத்திலும், உலகத்திலும் கண்டும், கேட்டும் இருந்தும் அன்பனே! சிலருடைய பிராந்தி வசனத்தால் உன் மனத்தின்கண் மயக்கம் ஏன்? சுருதி, யுக்தி, அனுபவத்தால் நானே பிரமமெனத் தெளிந்து ஐயம் நீக்குவாயாக. இதில் சிலருடைய பிராந்தி வசனமாவது, "இல்லாளும் குடும்பமும் விட்டு சந்நியாசம் புகுந்து ஏகாங்கி யானோர் அல்லாமல் முத்தி பெறார் என்று சிலர் சொல்லும் மயக்கம் அகற்றுவீரே" என்று சீடன் கேட்டதற்கு, மேற்கூறிய ஆறு கவிகளால் மயக்கத்தை நீக்கி தெளிவடையச் செய்ததைக் காண்க.

பிறந்தது உண்டானாலன்றோ பிறகு சாவதுதான் உண்டாம்
பிறந்ததே இல்லை என்னும் பிரமமாவதுவும் நானே
பிறந்தது நானென்றாகில் பிரமமன்று அந்த நானே
பிறந்ததும் இறந்ததற்ற பிரமமாம் நானே நானே 164

164. அன்பனே! முன் 133வது கவியில் கூறிய வித்தியா னந்தத்தை இப்போது கூறுகின்றேன் கேட்பாயாக. உலகில் எது உற்பத்தியாகின்றதோ அது அழியும். எது அழிகின்றதோ அது மீண்டும்

உற்பத்தியாகும். இது இயற்கையின் நியதி. இதுபோல் அறிவாகிய ஆத்மா ஒன்றில் நின்றும் தோன்றியதில்லை. அதனால் அது பிறந்தது மில்லை. இத்தகைய அறிவான பிரமமே என் நிஜவடிவமாய் இருத்தலால் நான் அந்த பிரமமாகவே இருக்கின்றேன். அதனால் நான் பிறப்பு, இறப்பு அற்றவன். ஆனால் நான் பிறந்தேன், வளர்ந்தேன் என்ற அனுபவமிருப்பதால் நான் பிறப்பு, இறப்பு அற்றவன் என்பது எப்படி கூடுமெனில், நான் பிறந்தேன் என்று கூறும் போது, தேகத்தை நான் எனக்கொண்டு கூறுவதால் அது அகங்காரம். அந்த அகங்காரம் ஜடம். அது நான் என்ற சொல்லுக்கு வாச்சியார்த்தமே யன்றி லட்சியார்த்தம் அன்றாம். நான் என்னும் சொல்லுக்கு லட்சியார்த்தம் பிரம்ம சொரூபம். அது எனது நிஜவடிவமாயிருத்தலின் பிறப்பு, இறப்பு அற்ற பிரமமாகிய நானே நானாயிருக்கின்றேன். இதில் ஐயம் சிறிதுமில்லை.

இதன் உள்ளுரை : இதில் ஆத்மா பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை. இருப்பு மாத்திரமாம். அதற்கு வேறாக மாயா பிரபஞ்சம் இருப்பது என்பது சொல்மாத்திரமாம். முக்காலத்தும் உள்ளது ஆத்மாவேயாம். ஆத்மா எனினும், கடவுள் எனினும், பிரமம் எனினும், அறிவு எனினும், ஆனந்தம் எனினும் ஒக்கும். இவ்வாறான ஆத்மா பிறக்கும் பொருள் அன்று. ஏனெனின் பிறக்கும் பொருள் அழிந்தே தீரவேண்டும். தோன்றுதலும், மறைதலும் நாமரூபங்களின் செயலாகும். நாமரூபத்தை (உடலை) நான் எனக்கொண்டால் அது அழியும். பிரமத்தை நான் எனக்கொண்டால் அது அழியாது. இதற்கு மேற்கோள் கைவல்ய உபநிஷத், "நித்தியமாயிருக்கின்ற பிரமமே நீ; நீயே அது" என்றும், அமிர்தபிந்து உபநிஷத், "அந்தப் பிரமமே நான் என்று அறிந்தால் பிரமமேயாகின்றான்" என்றும், ஆத்மபோத உபநிஷத், "நான் பிரமத்தைவிட வேறல்லாத உத்தமன்" என்றும், ரிபுகீதை 15ம் அத்தியாயம், "ஆத்மாவே துரியபர சொரூபமாகும்" என்றும் கூறியிருப்பதால், ஆத்மாவே பிரம்ம சொரூபமாம். இனி ஆத்மா பிறப்பதும் இல்லை, இறப்பதுமில்லை. ஆனால் ஜீவன் பிறந்திருக் கின்றதே எனின்? நன்று கூறினாய்! ஜீவன் இறந்து போனால் மறுபிறவி எடுப்பது யார்? இறப்பு என்பது இன்மையையே குறிக்கும் அங்ஙனமாயின் இல்லாத பொருள் எங்ஙனம் பிறக்கும். இது பிராந்தியாம். இந்தப் பிராந்தி நிவிர்த்திக்கு வழி கூறுகின்றேன் கேட்பாய். ஆத்மாவே பிரமம் இதில் சந்தேகமில்லை. இந்த ஆத்மாவில் ஜீவன் எவ்வாறு இருக்கிறது பேதமாகவா? அபேதமாகவா? இதற்கு விடை அபேதமெனின்,

இரண்டிற்கும் முதல் ஒன்றாய்ப் பிரமமாய்ப் போகும். போகுமானால் ஜீவனுக்குரிய ஜனன, மரணம் முதலிய இழிகுணங்கள் பிரமத்திற்கும் ஏற்படும். இதற்குப் பயந்து பேதம் எனின், ஜீவனும் பிரமமும் கண்டப் பொருளாய்ப்போம். போகுமானால் பிரமம் பரிபூரணம் என்ற வேத வசனத்திற்கு விரோதமாகும். இனி இந்த ஜீவாத்மாவானது தானே ஒரு தனி முதலாயும், சத்துப் பொருளாயும் இருக்குமா? அல்லது தனக்கு முதலாக ஒரு சத்துப் பொருள் இருந்து அதில் தான் போலியாயிருக்குமா? எனின், பிரமமான சத்துப் பொருளினிடத்தில் போலியாய் நிற்பதுவே ஜீவனாம். எங்ஙனம் பழுதையில் பாம்பு போன்றும், சொப்பன உலகு போன்றும் தோன்றுகின்றதோ அங்ஙனமே ஜீவத்துவமாம் என அறிக. ஜீவத்வம் பிரமத்தில் போலியாய்த் தோன்றும் என்பதற்கு உதாரணம் வீரசைவ பரம்பரையில் வந்த குமாரதேவ சுவாமிகள் இயற்றியருளிய அத்வைத உண்மை 91வது கவியில் "இந்த ஜீவன் கற்பிதமே அன்றி வேறு ஓர் பொருளன்று" என்றும், 78வது கவியில் "தன்னை ஜீவனெனத் திரிவாய் தான் நின்று உணர்தல் அஞ்ஞானம், தன்னை பிரமமெனத் துணிவாய் தான் நின்று உணர்தலே ஞானம்" என்றும், 18வது கவியில் "இங்காம் ஜீவத்வமோகம் இரியும் தன்னைத் தேர்ந்த அக்கணமே" என்றும் கூறி இருப்பதால் ஜீவத்துவம் பிராந்தி மோகம் என்பதாயிற்று. அது ஒரு கணத்தில் தீரக்கூடியவாறாம். மேலும் வேதாந்த சூடாமணி 111வது கவியில் "புன்னெறி கொள் குடும்பியாய் வலியறுமோர் சித்துப் போலியாம் ஜீவன் உயர் சுருதி விசாரத்தின் முன்னமொரு தன் சொரூபமாகிய பேரொளி அமுத துரியநிலை அறியாதிருத்தல் அஞ்ஞானம்" இதன் உரையில் "போலிச்சித்தான ஜீவன் தன் நிஜ சொரூபமான ஆத்மத் தன்மையை அறியாதிருத்தல் அஞ்ஞானம்" என்று கூறியிருப்பதால், ஆத்ம ஸ்வரூபத்தில் ஜீவத்துவம் போலி என்பதாயிற்று. மேலும் சிவஞான சித்தி 8ம் சூத்திரம், "மன்னவன் மகன் வேடரிடத்தே தங்கி வளர்ந்து அவனை அறியாது மயங்கி நிற்ப பின் அவனும் என் மகன் நீ என்று அவரில் பிரித்து பெருமையொடும் தானாக்கிப் பேணுமாபோல்" என்று கூறியிருப்பதால், அரச குமாரன் வேடரிடத்தில் வளர்ந்து மீண்டும் அரசனாகிறான். அப்போது அவன் ஒருவனா? அல்லது இருவரா? உலகத்தில் யோக்கியன் அயோக்கியன் ஆகிறான். அயோக்கியன் யோக்கியன் ஆகிறான். அப்போது இருவரும் ஒருவன் தானே. அதுபோல் ஜீவனாய் இருப்பதும், பிரமமாயிருப்பதுவும் சந்தர்ப்ப பேதத்தால் ஒருபொருள் என அறியக் கடவாய். இவ்வாறே ஆதி சங்கரரும் தாமியற்றி அருளிய ஆத்மபோதம் 27வது சுலோகத்தின்

உரையில் "பழுதையில் பாம்புபோல் தன்னை ஜீவன் என்று அறிந்து பயத்தை அடைகின்றான். வேதாந்த விசாரத்தால் நான் ஜீவன் அல்ல பரமார்த்த சொரூபி என்று அறிந்தானாயின் பயமற்றவன் ஆகிறான்" என்றும், அதன் 45வது சுலோகத்தின் உரையில் "கட்டையில் கள்வன் போல் பிரம்மத்தில் ஜீவத்வம் தோன்றுகிறது. ஜீவனது உண்மை வடிவமான கூடஸ்தனே பிரமமென அறிந்த காலத்தில் ஜீவத்வம் நீங்குகின்றது" என்று கூறியிருப்பதால், பிரம்மத்தில் ஜீவத்துவம் தோற்றமே ஒழிய அது தனிப்பொருள் அல்ல. மேலும் திருமந்திரத்தில் "மரத்தை மறைத்தது மாமதயானை" என்றும், "பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்" என்றும் கூறிப் போந்துள்ள பிரமாணங்கள் யாவும் ஒன்று மற்றொன்றாகத் தோன்றுவது என்று அறிவிப்பதற்கல்லவா அங்ஙனம் கூறிற்று. இதில் ஒன்று வாஸ்தவமும், மற்றொன்று போலியும் ஆகவேண்டுமே! மரம் வாஸ்தவமும், ஆனை போலியும், தங்கம் வாஸ்தவமும், பணிகள் போலியுமானவாறுபோல் பிரமமான ஆத்மா வாஸ்தவமும், ஜீவத்வம் போலியுமாம். இங்ஙனம் இருக்க இந்த ஜீவத்வத்தை தனிப்பொருளாக்கி உயர்திணை ஆண்பால் பொருள் எனவும், அது வேறு; பரம்பொருள் வேறு எனக் கூறியும், எழுதியும் வரும் அறியாமை கடலினும் பெரிதாம் என்பதற்கு ஐயமில்லை. இது எதுபோல் எனின், பொன்னிற்கும் பணிக்கும் தனித்தனி விலை பேசியதற்கு ஒப்பாம் என்க. மேலும் அனுபவானந்த தீபிகை கவி "மண் நீர் அனல் வளி வான் திரிபவையே மாந்தர்கள் முதல் எழுவகை தோற்ற நசிப்பும் உள் நாடில் இல்லை இறப்பும், பிறப்பும் உடலுக்கு முதல் கெடலின்மையினால்". இதன் பொருள் - மக்கள் முதல் ஏழ்வகைப் பிறவிகளும் ஐந்து பூதத்தின் காரியமாம். பிறப்பதாகவும், இறப்பதாகவும் தோன்றுவது இந்த பூதங்களினுடைய மாறுதலாம். பஞ்சபூத அணுக்களான முதற்காரணம் கெடாமையால் உடலுக்கும் பிறத்தல், இறத்தல் காணமுடியாது என்றால் ஆத்மாவிற்குப் பிறத்தல் இறத்தல் ஏது? இல்லை என்பதாயிற்று.

நானென்ற பிரமமான நானே நான் அறியேன் என்றால்
நானென்பது ஏது பின்னை நம்முடைப் புந்தி என்னில்
தானது மயக்கம் தன்னில் சாகுமே சாவாதாகி
நானென நிறைந்திருந்த ஞானமாம் நானே நானே 165

165. அன்பனே! நான் என்ற சொல்லுக்குப் பொருளாய் ஜாக்ர, சொப்பன, சுழுத்தி ஆகிய மூன்று காலத்திலும் மாறுதல் அடையாமல் இருக்கின்ற அறிவானந்த சொரூபமான பிரம்மமே நானாகும். அப்படி

யிருந்தும், அந்தப் பிரமத்தை நான் அறியேன் என்றால் அப்பொழுது நான் என்பது எது? புத்தி முதலிய அந்தக்கரணந்தான் அங்ஙனம் கூறுகின்றது எனின், சுழுத்தி, மூர்ச்சை முதலிய அவஸ்தைகளில் இந்தப் புத்தி லயமாகின்றதே! அங்ஙனம் அவை லயமான காலத்தும், தான் லயமாகாமல், சுழுத்தியில் ஆனந்தமாகவும், ஜாக்ர, சொப்பனங்களின் சாட்சியாகவும், அறிவானந்த சொரூபமாகவும் உள்ள பிரமம் எதுவோ, அதுவே நான் என்பதின் உண்மைப் பொருள் ஆகும். மேற்கூறிய நான் அவஸ்தை வயப்பட்டவனாயினும் பிரமமேயாம் என்பதற்கு மேற்கோள் :

சொரூபசாரம் வெண்பா - 16

"சாயையென வாழ் குடும்பந்தன்னைச் சுமந்தாலும்
மாயையெனும் மேகம் மறைத்தாலும் - தூயவொளி
தானா விளங்கிச் சகசாட்சியா இருக்கும்
ஞானாதித்தன் தானே நாம்"

என்று கூறியிருப்பதாலும் அறியலாம்.

நிறைந்தவாறு எந்தவாறு நிலை தெரிந்திலன் என்றாயேல்
அறிந்ததாம் சுழுத்தி தன்னில் ஆனந்தம் அதுவேயாகும்
குறைந்ததற்கு ஆனந்தம்தான் குவலயம் தன்னில் இல்லை
நிறைந்ததே இந்த ஆன்மா நிதானம் இவ்வறிவுதானே 166

166. குருதேவா! ஞான சொரூபமான நான் எங்கும் நிறைந்திருப்பது எக்காரணத்தால் என்பதை அருள்வீராக. அன்பனே! ஆத்மா பரிபூரண மாய் எங்கும் நிறைந்த பொருள் என்பதற்கு தினசுழுத்தியின் அனுபவத்தைச் சொல்லுவது முக்கிய சித்தாந்தமாகும். ஏனெனில், சுழுத்திச் சுகம் எந்தக் கருவியில் நின்றாவது அல்லது சரீரத்தில் நின்றாவது உற்பத்தி ஆகாததாய் இருத்தலின் அது அகண்டமாம். ஆகையால் அந்த ஆனந்தமே நிறைந்ததாம். நிறைந்த பொருள் எதுவோ அதுதான் ஆனந்தமாயிருக்க முடியும். குறைந்த வஸ்துக்களுக்கு ஆனந்தம் உலகத்தில் இல்லை. உள்ளதாகத் தோன்றினாலும் அது கணப்பொழுதில் மாறுதல் அடையும் தன்மை உள்ளதாய் இருக்கும். ஆனதால் அறிவானந்த சொரூபமான இந்த ஆத்மா நிறைந்த பொருளாம் என்பதற்கு ஐயமில்லை. மேற்கோள் :

சொரூபசாரம் வெண்பா - 29

"ஏது சிவானந்தமோ ஏது சிவாகாரமோ
ஏது சிவன் செயலோ என்னாதே - ஏதும்
பிறவாகா ஒன்றாகப் பேதமாகாத
அறிவாம் நிறைவே அது"

என்று கூறியிருப்பதால் நிறைந்ததே இந்த ஆத்மா எனக்கொள்க.

மனத்தினால் எண்ணித்தானே வந்தது இவ்வுலகமாகும்
நினைத்திடில் அனேக லோகம் நிற்பது அவ்வறிவிலன்றோ
அனைத்தையும் கடந்து அப்பாலும் அந்தமற்ற அறிவுஇதாம் என்று
எனைத் தனி விசாரித்திட்டால் ஏகமாய் நிறைந்தோன் நானே 167

167. அன்பனே! மனோ சங்கல்பத்தினாலே சகல தேகாதிப் பிரபஞ்சமும் தோன்றுகின்றன. ஆராய்ந்து பார்க்குமிடத்து அனேக உலகங்கள் தோன்றுவது இவ்வறிவிலல்லவா! சொர்க்கலோகம் என்றால் அங்கு உள்ளவர்களிடத்திலும் இந்த அறிவு இல்லாவிட்டால், நலம், தீது எங்ஙனம் தெரியும்? ஆகையால், எல்லா உலகமும் அதாவது ராமலிங்க அடிகளின் திருவுள்ளத்தில் கண்ட 2500 உலகங்களையும் கடந்து நிற்பதும், ஆதி-அந்தமற்றதும் இந்த அறிவு சொரூபமாம் என்பதை சித்து-சட விசாரம் செய்தால் காணலாம். ஒரு குடம் மண்ணென்று அறிந்தால் எல்லாக் குடங்களும் மண்தான் என்று அறிவது போல், நானே எல்லாமாய் எங்கும் நிறைந்தவன் என்பது தேற்றம்.

அந்தவாறு இருந்து கொண்டே ஆனந்தம் அனுபவிக்க
எந்தவாறு இருந்து கொண்டால் எனக்கு இது தெரியும் என்னில்
இந்த மூன்று அவத்தை தம்முள் எழுந்திடும் விருத்தி நீக்கில்
அந்தவாறு இருந்து நீயும் ஆனந்தம் அடையலாமே 168

168. குருதேவா! தாங்கள் முன்கூறியது போல் நான் பரிபூரணனாய் இருந்து கொண்டு என் சொரூபானந்தத்தை அனுபவிக்க எப்படியிருந்தால் முடியும் என்பதை அருள்வீராக. அன்பனே! ஜாக்ரத்தில் இந்திரியங்களால் ஏற்படுகின்ற எண்ணங்களும், சொப்பனத்தில் இந்திரியங்கள் இன்றி ஏற்படுகின்ற எண்ணங்களும், சுழுத்தியில் ஒன்றும் தெரியவில்லை என்ற அவித்யா விருத்தியும் ஆகிய இவைகள், சாட்சியின்றி சித்திக்காமையின், அந்த சாட்சி, அவஸ்தைகள் மாறினும் தான் மாறாமல் இருப்பதால் அது நித்தியமெனவும், அந்த

நித்தியமே தனது சொரூபமெனவும், அதுவே ஆனந்தமெனவும் அறிவது ஆனந்தமல்லவா? இவ்வாறு நீயும் ஆனந்த சொரூபமாக இருப்பாயாக. இதில் நிறைந்த பொருளான ஆத்மா, அந்தக்கரண உபாதியால் தன்னை அகண்டத்திலிருந்து வேறு பிரித்ததுபோல் கருதி தான் தனிப்பட்டது போல் தோன்றுகின்றது. அப்படித் தோன்றினும் தான் அகண்ட சொரூபமேயாம். இதற்கு மேற்கோள் - சொரூபசாரம் வெண்பா - 13

"நனவில் தசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போம்
கனவில் மனக்கூத்தும் காண்போம் – நினைவுஇல்
சுழுத்தியிலே இல்லாத சூனியக் கூத்தாடி
விழுப்பொருளா நாம் இருப்போமே"

என்று கூறியிருப்பதால், இந்த ஆத்மா அவஸ்தாத்திரய சாட்சியாய் விளங்குவதைக் காண்க.

வாதனா வசத்தினாலே வருகிற விருத்தி எல்லாம்
ஏதினால் அடக்கலாகும் என்றுதான் விசாரம் செய்யில்
போதமாம் இராசன் தானாய்ப் புந்தி ஐம்புலன்கள் எல்லாம்
தாதராய் இருக்கப் பெற்றால் சகலமும் அடங்கும்தானே 169

169. குருதேவா! மூன்று அவஸ்தையிலும், மணிகளுக்குள் நூல்போல் வியாபித்திருக்கின்ற ஆத்மாவானது, மூன்றவஸ்தையின் கண்ணும் உளதாகும் எண்ணங்களுக்கு சாட்சியாயிருப்பது அறிந்தேன். ஆனால் பழக்க வாசனையினால் வருகின்ற எண்ணங்களை அடக்கி சொரூபாகாரமாய் இருப்பதற்கு உபாயம்யாது? இதை அருள்வீராக. அன்பனே! அறிவே அரசனாகவும், புத்தி முதலிய அந்தக்கரணங்களோடு ஐம்புலன்களையும் மேற்கூறிய அறிவிற்குத் தாசனாக இருக்கும்படிப் பழக்கினால் சகலமும் அடங்குந்தானே.

இதன் உள்ளுரை : இதில் மனதை அடக்குவதின் பொருள் இருவகையாகும். அதில் ஒன்று மனம் அத்தியந்தம் லயமாதல். மற்றொன்று பண்படுத்தி தாசராக அதாவது அடிமையாக்கிக் கொள்ளுதல் இந்த இரண்டு விதத்தில் தாசராயிருத்தல் என்பது இந்நூல் ஆசிரியருக்கு உடன்பாடு. அத்தியந்த லயம் உடன்பாடன்று. மனதின் ரஜோ தமோ குணங்களை மாற்றி சத்துவ குணமாய் இருத்தலே பொருந்தும். இதன்றி மனோநாசம் முத்தியாயின், தத்துவ விளக்கப்

படலம் 55வது கவியில், "சுழுத்தியில் பிரளயத்தில் தோற்றமாம் சகங்கள் மாண்டும், அழுத்திய பவம்போய் முத்தி அடைந்தவர் ஒருவருண்டோ?" என்று இவரே நம்மைக் கேட்டிருப்பதால், மனோலயம் முத்தியன்று. பிரளய காலத்தில் மனம் இருக்கிறது ஆனால் முத்தியில்லையே என்னில், பிரளய காலத்தில் மனமில்லை என்பது திண்ணம். இதை கோவிலூர் மடத்தில் நின்று வெளிப்பட்டுள்ள பாஷ்ய இருதயம் 41வது பக்கம் "விசுவ உற்பத்திக்கு முன்னம் ஜீவன் இல்லை. மகாபிரளயத்திலும் ஜீவன் இல்லை. மத்தியில் அந்தக்கரணக் கற்பனையினால் கற்பிதனானான்" என்று கூறியிருப்பதால், பிரளயத்தில் மனதும், ஜீவனும் இல்லை என்பதாயிற்று. மேலும் மனம் என்பது சூட்சும சரீரத்தின் ஒரு பகுதி. சூட்சும சரீரம் இல்லாவிட்டால் ஜீவன் இல்லை. எனவே, பிரயளத்தில் ஜீவன் இல்லாமையால் மனமுமில்லை. மனம் இல்லாமையால் முத்தியுமில்லை. ஆகையால், இப்போது மனதோடு கூடியிருக்கும் போது 28 தத்துவத்தின் பேதாபேதம் அறிவதே முத்தியாகும் என்று கட்டளை கூறியிருப்பதை மறவற்க. எனவே மனோ நாசமென்ற பிராந்தியை விட்டு உலகம் தனது சொரூபமெனக் கண்டு பலனை விரும்பாது கருமத்தைச் செய்க. பாஷ்ய இருதயத்தின்படி ஜீவத்துவம் கற்பிதம் என்றாயிற்று. ஆகுமானால் பழுதையில் பாம்பு கற்பிப்பதுபோல் மனதால் ஜீவத்துவம் கற்பனை செய்வதாகும். இங்ஙனம் கற்பிதப் பொருள் தனிப்பொருள் ஆகுமா? ஆகுமானால் பாம்பு தனிப்பொருள் ஆகவேண்டுமே! ஆகாது. இங்ஙனமாய கற்பிதப் பொருளை வேத விரோதமாய் ஜீவனென்று கூறுவது அறிவுடைமையாகுமா?

விருத்திகள் அடக்க இன்னம் வினோதமாம் யோகத்தாலே
துருத்திபோல் ஊதும் மூச்சைச் சுகமுடன் அடக்கில் நிற்கும்
கருத்து அதற்கில்லை என்னில் காரண சரீரமாகிப்
பெருத்ததோர் அவித்தை தன்னைப் பிடுங்கிடில் அடங்கும்தானே 170

170. அன்பனே! இதுவரையிலும் சித்து-சட விசாரத்தை பற்றிய ஞானமே முக்கியமென்று சொன்னேன். இந்த விசாரம் புத்தியில் ஏறாதவர்கள், மனோலய சாதகம் செய்து பழகினால், அதன்பின் சித்து-சட விசாரம் உண்டாய்விடும். மனதை அடக்குவதால் மட்டும் பயனில்லை. இதைப் பற்றி யோக சாஸ்திரங்களில் பல உபாயங்கள் கூறப்பட்டு இருக்கின்றன. பிராண வாயுவோடு, மனதையும் சேர்த்து அடக்கிப் பழகினால் விருத்திகள் அடங்கும். இது உனக்குப் பிடிக்காவிட்டால் காரண

சரீரமான அஞ்ஞானத்தை விசாரத்தினால் போக்கினால் விருத்திகள் தானே அடங்கும். இந்த அஞ்ஞானம் நீங்க வேண்டுமானால், மீண்டும் சித்து-சட விசாரம் செய்து தான் ஆகவேண்டும். இது முக்கியமான சித்தாந்தமாம். பிராண வாயுவோடு, மனதையும் சேர்த்து அடக்கும் உபாயம் மத்திம பக்ஷமாம்.

இதன் உள்ளுரை : யோகமென்பது மூச்சடக்குவது அல்ல. ஜீவப்பிரமங்களின் ஏகத்துவமே யோகமாம், யோகம் என்பது ஞானத்திற்கு மற்றொரு பரியாயப் பெயராம். இனி யோகமென்பது ஹடயோகம், ராஜயோகம் என இருவகைத்தாம். இதில் சித்து-சட விசாரம் இல்லாத பிடிவாத புத்தியுள்ளவர்களுக்கு, மூச்சையடக்கி இருக்கச் சொல்வது ஹடயோகமாம். சித்து-சட விசாரம் உள்ளவர் களுக்கு உரியது ராஜயோகமாம். இந்த ராஜயோகம் எட்டு அங்கமுடைய தாக இருக்கும். இந்த எட்டுக்கும் வெளியர்த்தமும், உள்ளர்த்தமுமாக இருவகை தாற்பரியங்கள் நூல்களால் கூறப்பட்டிருக்கின்றன. அதில் மூச்சடக்குதல் முதலியன வெளியர்த்தமான ஹடயோகமாம். அதன் உள்ளர்த்தமான ராஜயோகத்தைக் கேட்பாய். இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என எட்டு விதமாம். இதன் பொருள் சர்வமும் பிரமம் என்னும் விசேஷ ஞானம் இயமம் எனப்படும். சகலமும் தன்னம்சமாகக் காணுதல் நியமம் எனப்படும். கர்த்ருத்வ போக்த்ருத்வாதிகள் தோன்றாதிருத்தல் ஆசனமாம். அடுத்தபடி பிராணாயாமம். இது ரேசக, பூரக, கும்பகம் என மூன்று விதமாம் இதில் ஜட வஸ்துக்களான தேகாதிப் பிரபஞ்சத்தை நேதி செய்தல் ரேசகம் எனப்படும். நான் பிரமம் என்னும் விருத்தி பூரகமாம். பிரமமாக நினைத்தல் கும்பகமாம். விஷயானந்தங்கள் அனைத்தும் சொரூபானந்தமே என அறிவது பிரத்தியாகாரமாம். எங்கு எங்கு மனம் செல்லுகின்றதோ, அங்கு அங்கு பிரமத்தைக் காணுதல் தாரணை எனப்படும். வேறு பற்றின்றி, பிரமத்தையே மீண்டும் மீண்டும் சிந்தித்தல் தியானம் எனப்படும். ஆத்ம சொரூபமமாக நிலைத்தல் சமாதியாம். இதுவே ராஜயோகத்தின் பொருளாம். இஃது ஆதிசங்கர பகவத்பாத ஆசாரிய சுவாமிகள் இயற்றியருளிய அபரோக்ஷானு பூதியிலும், விசாரசாகரம் சிவராவ் மொழி பெயர்ப்பின் 350வது பக்கத்திலும் காணலாம். இதைவிட்டு மூச்சை அடக்குதல், மூக்கு நுனியை நோக்குதல் முதலியன, தன் நிழலோடு போராடுவது போலாம். ஜடப்பொருளான வாயுவோடு போராடுதலால் பயனில்லை. இதை

சொரூபசாரத்தின் 55வது வெண்பா.

"மூலக்குளே இருந்து மூச்சடக்கிப் பேச்சடக்கிச்
சாலக் கனயோகம் சாதிப்பார் - மேலுணர்வு
கண்டிருக்கச் சாதனை ஏன் காயத்தையே வலித்து இங்கு
உண்டிருக்க எண்ணுகிறாரோ"

என்று கூறியிருப்பதால் ஹட யோகத்தை மறுத்தவாறாயிற்று.

காரண சரீரம் தன்னைக் களைவது எவ்வாறு என்றோதில்
ஆரணம் பொய்சொல்லாதே அதன்பொருள் அகத்தில் உய்த்துப்
பூரணமாகும் என்மேல் புவனங்கள் தோற்றம் என்று
தாரணை வந்ததாகில் தரித்திடும் அவித்தை எங்கே 171

171. குருதேவா! காரண சரீரமாகிய அவித்தையைப் பிடுங்கிடில் விருத்திகள் அடங்கும் என்று அருளிச் செய்தீரே. அங்ஙனமாயின், காரண சரீரத்தைக் களைவது எவ்வாறு என்பதை அருள்வீராக. அன்பனே! வேதம் பொய் சொல்லாது. அதன் பொருள் அகத்துள் உன்னி, சர்வம் பிரமமயம் என்னும் வேதவாக்கியத்தை யுக்தி, அனுபவத்தோடு ஆராய்ந்து பார்த்து, பரிபூரணமாய் எங்கும் நிறைந்த ஆத்ம சொரூபமான என்னிடத்தில் சகல தேகாதிப் பிரபஞ்சங்களும் பழுதையில் பாம்புபோல் கற்பிதமாகத் தோன்றும் என்ற உறுதி உண்டானால், அவித்தையாகிய காரண சரீரம் எங்கு தேடினாலும் காண முடியாது.

இதன் உள்ளுரை : "பிரம்மமாம் தனை மறந்த பேதைமையே அஞ்ஞானம்" என்று இந்நூலாசிரியர் அஞ்ஞானத்திற்கு இலக்கணம் கூறியிருப்பதால், உண்மையில் தான் பிரமமாயிருந்தும், தான் பிரமமல்ல என்று ஏற்படுகின்ற பேத நிச்சயமே அஞ்ஞானம். இதுவே காரண சரீரமுமாம். இது மற்றிரண்டு சரீரத்திற்கும் காரணமாயிருக்கிறது. இது இருக்கும் வரையில் பிறவி தோன்றும். இது நசித்தால் பிறவி தோன்றாது. இந்தக் காரண சரீரம் நாசமடைய உபாயம் யாதோ வெனின், தன்னை பிரமம் என்று அறிந்தால், அதுவே நாசமாம். வேறு உபாயத்தால் நாசமாகாது. இங்ஙனமாய அவித்தை அனாதியாதலின் நாசம் எங்ஙனம் ஆகும் எனின், ஜீவன், ஈசுவரன், வித்தை, அவித்தை முதலியன அனாதியாகலின் நாசம் சொல்லக் கூடாது. பின்னை யாது சொல்ல வேண்டும் எனின், கற்பித அனாதி என்றே சொல்ல வேண்டும். எனவே நாசம் என்ற சொல்லுக்குக் கற்பிதத்தைக் கற்பிதமாய்க் காணுதல் எனப்

பொருள் கொள்க. இதுபற்றி அன்றோ இந்நூலாசிரியர் இந்தக் கவியில், "பூரணமாகும் என்மேல் புவனங்கள் தோற்றம் என்று தாரணை வந்ததாகில் தரித்திடும் அவித்தை எங்கே" என்று நம்மைக் கேட்டிருக்கிறார். எனவே பாம்பிற்கு பழுதையைவிட தனிப்பொருள் இல்லாதவாறு போல் இந்த அவித்தைக்கு பிரமத்தை விட தனிப்பொருளில்லை. அவித்தை வாஸ்தவமாயிருந்தால் சித்து-சட விசாரத்தால் நீங்காது. நீங்கிப் போகின்றபடியால் தோற்றமேயாம். பிரம்மத்தைத் தன் சொரூபமமாக அறிந்தால் அவித்யாத் தோற்றம் ஏது? இல்லை என்றவாறாயிற்று.

அப்படி இருக்கச் சித்தம் அலைதலால் விவகாரத்தில்
எப்படிக் கூடும் என்னில் என்னைவிட்டு ஒன்றும் இல்லை
இப்படிக் கண்டவெல்லாம் என்மயம் என் கனாப்போல்
கற்பிதம் என்று தானே காண்கின்ற சித்து நானே 172

172. குருதேவா! நான் பிரம்ம சொரூபன் என்ற உறுதி வைரமலை ஒப்ப பலப்பட்டிருக்கிறது. ஆனாலும், மனம் உலக விவகாரத்தில் சென்று அலைகின்றது. இப்படி அலைகின்ற மனதிற்கு, நான் பிரமம் என்கின்ற நிச்சயமும், உலக விவகாரமும் ஆகிய இரண்டும், ஏக காலத்தில் எங்ஙனம் பொருந்தும் இதை அருள்வீராக. அன்பனே! நீ எத்தகைய நிச்சயத்தோடு இருக்க வேண்டுமெனின், பிரம்மமாகிய என்னைவிட வேறாக ஒரு அணுவும் கூட இல்லை. தோன்றுகின்ற தோற்றங்கள் அனைத்தும் என் அம்சமேயாம். அது எங்ஙனமெனின், கனாக் காண்பவனுடைய காட்சிப் பொருள் முழுவதும் அவனை விட வேறாக இல்லையல்லவா. அதுபோல் சகல நாம, ரூபப் பிரபஞ்சங்களையும் அறியும் அறிவானந்த சொரூபன் நானே என்றிருப்பாயாக. இதில் சொப்பன சாட்சியை விட, சொப்பனக் காட்சிப் பொருள் வேறாக இன்மையானவாறுபோல், தேகாதிப் பிரபஞ்சம் சேதனனான உன்னை விட வேறாக இல்லை என்பதாம். இதை சொரூபசாரம் 27வது வெண்பாவில் காணலாம்.

"என்னைத் தவிர மற்று இங்கு ஏதுமில்லை என்னாணை
பொன்னைத் தவிர இ(ல்)லாப் பூடணம்போல் – பொன்னை உரு
வேறாக்கிப் பேருரைத்த வேற்றுமை போல் நம்மையும் அவ்
வாறாய்ப் பகுத்துரைத் தோமால்"

என்று கூறியிருப்பதால் உலகம் மெய்ப்பொருள் வடிவே. நீயும் அதுவாயிருக்கிறாய்.

சித்து நான் நிறைந்தோன் என்ற திடம் மறவாதிருந்தால்
எத்தனை எண்ணினாலும் ஏது செய்தாலும் என்ன
நித்திரை உணர்ந்த பின்பு நிற்கின்ற கனாவே போல
அத்தனையும் பொய்தானே ஆனந்த வடிவு நானே 173

173. அன்பனே! நான் அறிவானந்த சொரூபன்; எங்கும் நிறைந்தவன் என்ற திட நிச்சயம் மறவாதிருந்தால், எத்தனை எண்ணினாலும், எத்தொழிலைச் செய்தாலும், அதனால் ஆத்ம சொரூபமான எனக்கு எவ்விதக் குறைபாடுமில்லை. தூங்குகின்ற போது நிகழும் கனவில், பல நிகழ்ச்சிகளைக் கண்டபின் விழித்துப் பார்த்தபோது அத்தனையும் பொய்யாய்க் கழிந்தவாறுபோல், என் நிஜ சொரூபத்தை நோக்க தேகாதிப் பிரபஞ்சங்கள் அத்தனையும் பொய். நான் ஆனந்த சொரூபன் என்ற நிச்சயம் மறவாதிருப்பாயாக.

இதன் உள்ளுரை : ஞானத்தின் பலன் நான்கு விதம் 1. துக்க அபாவம், 2. சர்வ காமாப்தி 3. கிருத கிருத்தியத்துவம், 4. பிராப்தி பிராப்பியம் என்பனவாம். இதில் 164 கவி முதல் துக்க அபாவம் அதாவது ஞானிக்கு இகலோக, பரலோக துக்கமில்லை என்றும், 168 கவிமுதல் சர்வகாமாப்தி அதாவது ஆனந்தானுபவமும் கூறினார். 172 கவிமுதல் கிருத கிருத்தியத்துவம் அதாவது எல்லாம் செய்து முடிந்தமை கூறி, 174 கவிமுதல் பிராப்தி பிராப்பியம் அதாவது அடையத் தக்கனவெல்லாம் அடைந்தோம் என்பதையும் கூறி முடித்தார். இனி சித்து சொரூபனான ஞானி எதைச் செய்தாலும் அதன் பலன் அவனுக்கில்லை. ஏனெனின், அவன் பிரம்மமாகிய தன்னைக் கண்டவன், பற்றற்றவன். அவன் செய்யும் நன்மை தீமைகள் அவனைச் சாராது. ஆனால் தீமை செய்வானோ எனின் செய்யமாட்டான். ஏனெனின், அவன் எல்லாம் தன்னம்சமாய் கண்டவன் ஆகையால் தீமை செய்யமாட்டான். எனினும், பிராரத்த கருமம் எங்ஙனமோ, அங்ஙனமே அவன் செயல் இருக்கும். மரத்தின் சருகுகள் காற்று எந்தப் பக்கம் அடிக்கின்றதோ அங்கு செல்லுமே ஒழிய தன்னிஷ்டப்படி செல்லாது. அதுபோல் இந்த ஞானியும் எனக்கொள்க. இக்காரணத்தால் தீமைகள் செய்த ஞானிகளும் அனந்தம் பேர்கள் இருந்தார்கள். அதற்கும் ஞானத்திற்கும் சம்பந்தமில்லை. பரசுராமன் தாயாரைக் கொன்றான். அந்த பாவம் அவனைச் சேரவில்லை. தேவேந்திரன் நூறு அசுவமேத யாகம் செய்தான். அந்தப் புண்ணியம்

அவனைச் சாரவில்லை. ஞானவாசிட்டத்தில் வரும் கற்கடி என்னும் இராட்சஸி அனேக கொலைகளைச் செய்தாள். அந்தப் பாவம் அவளைச் சாரவில்லை. இவ்வாறாக வரலாறுகளை நோக்கும்போது, அவர்கள் அடைந்த ஞானம் வேறு; நாம் அடைந்த ஞானம் வேறா? இல்லையல்லவா. எனவே கூடுமானவரையில் உலக உபகார கருமமே செய்க. இந்தப் பிரம சொரூபமான அறிவு தன் சொரூபமாக அறிந்த ஞானியினுடைய திருஷ்டியில் பிராரத்துவ கருமமில்லை. அவனுக்கு விதி-நிஷேதமும் இல்லை. அவனது விதேக முக்தி காலத்திலும் விதி-நிஷேதமில்லை. இதை விசாரசாகரம் சிவராவ் மொழிபெயர்ப்பின் 364ம் பக்கத்தில், "இந்த ஞானிக்கு தேச, கால, ஆசனாதிகளின் அபேகைஷயில்லை. காசியிலாவது அல்லது மலின ஸ்தலங்களிலாவது அவன் சரீரம் விடக்கூடும். எவ்விதத்திலும் அவன் முக்தனே. ஒருக்கால் பிரம்ம சிந்தனை செய்து கொண்டாவது அல்லது வியாதியினால் ஆகா ஊஹு் என்று சொல்லிக் கொண்டாவது அவன் சரீரம் விடக்கூடும். எவ்விதத்திலும் அவனுக்கு ஆத்மாவில் ஜனன மரண பிராந்தியில்லை. அதனால் அவன் முக்தன். உபாசகனுக்கு தேச, கால, ஆசனாதிகளின் அபேகைஷ உண்டு. இந்த விதிமுறைகளை அறிந்து, பிரம்மமே தான் என்று அறிந்த உத்தம அதிகாரியானவன் தன் சொரூப நிலையில் இருந்தான். அவனுடைய பிராணனும் லயமாய் விட்டது" என்று கூறப்பட்டிருப்பதால் சிஷ்யனே! கால, தேச, ஆசனாதி அபேகைஷயின்றி கடமையைச் செய்வாயாக. இந்நிலையில் உனக்குப் பிரியம் எதுவோ அதைச் செய்வாயாக. இதைக் கீழ்வரும் செய்யுளால் காணலாம். வாசிட்டம் கடைசிச் செய்யுள்.

எனக்கு ஈது என்னும் உணர்வுடைமை இடர்விட்டு அகலாது உணர்வின்மை
அனர்த்தமில்லா வீடளிக்கும் ஆசையேது இங்கு அது செய்வாய்
சனிப்பில் சிவம் எங்கணும் உளது சாந்தம் சுபம் சித்துரு என்னும்
கனத்த அந்தவொரு நினைவே கருமத்தியாகம் இராகவனே.

இதற்கு வீரசுப்பையா சுவாமிகளினுரையில் "நான் உபசாந்த சொரூபன், மங்கள சொரூபன், அறிவு சொரூபன் என்னும் கனமான ஒரு நினைவே சர்வ சங்க பரித்தியாகமாம்" என்றும், மேலும் இக்கவிக்கு பிறையாறு அருணாசல சுவாமிகள் உரையில் "மங்களகரமாகிய அறிவானந்த சொரூபன் நான் என்னும் ஒரு கனத்த நினைவே சர்வசங்க பரித்தியாகமாம்" என்று வசிட்டமாமுனிவர் இராகவனை

நோக்கிக் கூற, இராமனும் ஆத்மாவே தான் என்று அறிந்து, பின் துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்து அனேக நாள் அரசாண்ட பிறகு விதேக முத்தி நிலையை அடைந்தார். அதுபோல், சிஷ்யனே! நீயும் சொரூப நிலையில் இருப்பாயாக. சரீரம் கருமத்திற்கீடாக எப்படியோ அப்படி செயலாற்றட்டும். அதனால் உனக்கு ஹானியில்லை.

நானென உடலைத் தானே நம்பினேன் அனேக சன்மம்
ஈனராய்ப் பெரியோராகி இருந்தவை எல்லாம் இப்போது
கானலில் வெள்ளம் போலக் கண்டு சற்குருவினாலே
நானென என்னைத் தானே நம்பி ஈடேறினேனே 174

174. குருதேவா! ஜடமான சரீரத்தையே நான் என நம்பி இருந்ததின் விளைவாக, அனேகாயிரம் சென்மங்கள் தோன்றி மறைந்தன. கீழ் மேலாகத் தோன்றிய அத்தனை ஜன்மங்களும், கானலில் தோன்றும் வெள்ளம் போல பொய்யென்று, இப்போது தங்கள் திருவருளால் அறிந்தேன். இத்தகையப் பொய்த்தோற்றத்திற்கு அதிஷ்டானமான பிரமமே என் நிஜ சொரூபம் என்று அறிந்து தன்னம்பிக்கையோடு கடைத்தேறினேன். அதாவது ஈடேறி விட்டேன்.

என்ன புண்ணியமோ செய்தேன் ஏது பாக்கியமோ காணேன்
நன்னிலம் தனில் எழுந்த நாரணன் கிருபையாலே
தன்னியன் ஆனேன் நான் உத்தரீயத்தை வீசுகின்றேன்
தன்னியன் இன்னும் நானே தாண்டவம் ஆடுகின்றேன் 175

175. இவ்வாறான பரமானந்தம் எனக்கு ஏற்படுவதற்கு என்ன புண்ணியம் செய்தேனோ? ஏது பாக்கியமோ? அதாவது அதிர்ஷ்ட பலமோ அறியேன். நன்னிலமென்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளி யிருந்த நாராயண தேசிகர் என்னும் சற்குரு கிருபா விசேஷத்தால் நான் தன்னியனானேன். அதனால் உண்டான பரமானந்தத்தால் உத்தரீய மான மேலாடையை ஆகாயத்தில் எறிந்து விளையாடுகின்றேன். நான் இன்னும் ஆனந்தக் கூத்தாடுகின்றேன். இதில் நன்னிலமென்பது துரிய சொரூபமான பிரமத்தையும், நன்னிலம் என்ற ஊரையும் குறிக்கும்.

அவதாரிகை

மாதா பிதாவைப் புகழுதல்

தத்துவ ஞானம் வந்த சந்தோட அதிசயத்தால்
நித்தம் ஆடுவன்காண் என்ற நிலை முன்னமே அறிந்த
சத்தியம் அதனாலன்றோ தாண்டவா என்றழைத்தார்
அத்தனை மகிமையுள்ளோர் அன்னையும் பிதாவும்தாமே 176

176. மகாவாக்கிய விசாரத்தால் உண்டாகும் நித்தியானந்தம் என்னும் பிரமானந்தம் பெற்ற சந்தோஷத்தால் ஆனந்தக் கூத்தாடுவான் என்னும் நிச்சயத்தை நான் பிறந்த அன்றே அறிந்த உண்மையினால் அன்றோ பெற்றோர் என்னைத் தாண்டவா என்று பெயரிட்டு அழைத்தனர். அதனால் அவர்கள் மிகவும் மகிமையுள்ளோர் ஆவர்.

வந்ததோர் இவ்வானந்த மகிழ்ச்சி யாருடன் சொல்வேன் யான்
சிந்தையில் எழுந்து பொங்கிச் செகமெலாம் நிறைந்து தேங்கி
அந்தம் இல்லாததாயிற்று அப்படிக் குரு வேதாந்த
மந்திரம் அருளும் ஈசன் மலரடி வணங்கினேனே 177

177. எனக்குண்டான பிரமானந்தத்தால் விளைந்த ஆனந்த மகிழ்ச்சியை யாருடன் சொல்வேன். இவ்வானந்தம் சத்துவாம்சமான அந்தக்கரணத்தில் தோன்றி பிரபஞ்சம் முழுவதும் வியாபித்து பரிபூரணமாயிற்று. இவ்வாறான நிரதிசயானந்தம் எனக்குண்டாகுமாறு குருவாகவும், வேதாந்த சாஸ்திரமாகவும் இருந்து அருள்செய்த பரம்பொருளின் பத்மபாதத்தை அனுதினம் பணிகின்றேன்.

வித்தியானந்தம் இந்தவிதம் என விளம்பினோமே
பத்தியாய் இந்த நூலைப் பார்த்து அனுபவித்த பேர்கள்
நித்திய தரும நிட்டை நிலைதனை அறிந்து சீவன்
முத்தியை அடைந்திருந்த முனிவரர் ஆகுவாரே 178

178. மகாவாக்கியத்தின் பொருள் துக்க அபாவம், சர்வகாமாப்தி, கிருத கிருத்தியத்வம், பிராப்தி பிராப்பியம் என்னும் நான்கு வகையாக இருக்கும் என்று அதன் விளக்கத்தை இதுகாறும் கூறினோம். இனி

கூறத்தக்கது ஒன்றும் இல்லை. அன்புடன் கைவல்ய நவநீதமென்னும் இந்நூலை சற்குரு வாயிலாகக் கேட்டு ஆராய்ந்து, தன் நிஜ வடிவப் பிரமத்தை உள்ளவாறு அறிந்து, உறுதியுடன் நிஷ்காம கருமம் செய்து ஜீவன் முத்தரான முனிவர்களாவீர்களாக.

ஆரணப் பொருளாம் வித்தியானந்தம் விளங்க ஏதும்
காரணம் குறைவில்லாமல் கைவல்ய நவநீதத்தைப்
பூரணமாக்க வேண்டிப் பூர்வமாம் நன்னிலத்தில்
நாரணகுரு நமக்கு நவின்றனர் யோகில் வந்தே 179

179. வேதாந்தமான சாதன சதுஷ்டயம் முதல் வித்தியானந்த பரியந்தம் அதிகாரிகளுக்கு விளங்கும்படி கூறவேண்டிய காரணங்கள் எதுவும் குறைவுபடாமல் கைவல்யமென்னும் இந்நூலை பூரணமாக்க வேண்டி, நன்னிலமென்னும் திவ்யக்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருந்த நாராயண தேசிகரென்னும் சற்குரு மூர்த்தி என் தியானத்தில் தோன்றிக் கூறவேண்டிய அனைத்தையும் கூறி இந்நூல் முற்றுப்பெறுமாறு செய்தருளினர்.

குலவு சற்குருவின் பாதக்குளிர் புனல் தலைமேல் கொண்டால்
உலகினில் தீர்த்தம் எல்லாம் உற்ற பேறு அடைவார் போல
நலமெய்யாகிய கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்த ஞானிகளாய் வாழ்வார். 180

180. சற்குருவின் திருவடியில் அபிஷேகம் செய்த தீர்த்தத்தை தமது சிரசில் தெளித்துக் கொண்டவர்கள், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தம் அனைத்திலும் சென்று முழுகினோர் அடையும் பயனெலாம் அடைவார்கள் போல கைவல்ய நன்னூல் என்னும் இந்த மெய்ஞ்ஞான சாத்திரத்தை சற்குரு வாயிலாக விதிமுறையில் கற்றறிந்தவர்கள் ஞான சாத்திரங்கள் பலவற்றினையும் படித்து உணர்ந்த ஞானிகளாய் வாழ்வார்கள். இதில் "குலவு சற்குருவின் பாதக்குளிர்புனல் தலைமேற் கொண்டார் உலகினில் தீர்த்தமெல்லாம் உற்றபேறு அடைவார் போல" என்று கூறினமையால் இது குரு-சிஷ்யர்களின் அன்பின் மிகுதியை உணர்த்தி நின்றது. இவ்வாறே மாநந்தி பராயணரும் தமது சீடனாகிய சசிவர்ணனுக்கு தமது பாத உதக தீர்த்தத்தால் அபிஷேகம் செய்தருளியது விருத்தாசல புராணத்தில் காணலாம். இது சசிவர்ண போதம் 85வது கவி

"தமரக் கலைக்கு அளவு தெரிவற்ற தற்பொருளதனை ஈகுவான்
அமரர்க்கு அளப்பரிய பதநற்புனற் கொடு செய்து அபிடேகமே"

இதன் உரையில் தன் சொச்சொரூபமாகிய பிரமத்தை சீடன் அடைந்துய்ய வேண்டி தேவர்களாலும் அளவிட்டுக் கூறுதற்கு அரிய பெருமையுடைய தனது நல்ல பாத உதக தீர்த்தத்தைக் கொண்டு சீடனுக்கு அபிஷேகம் செய்தருளினார் என்று கூறி இருப்பதால் பண்டைக் காலம் தொட்டு குரு-சிஷ்ய சம்பிரதாயத்தில் பரமார்த்தீக அன்பின் பிரவாகத்தைக் காட்டும் பொருட்டு குருவின் பாத உதக அபிஷேகத்தை சிஷ்யன் பரமானந்தமாக ஏற்றுக் கொள்வான். இது குருவானவர் சிஷ்யனிடத்தில் வைத்த அன்பின் பெருமையைக் காட்டுகிறது. அவ்வாறே சிஷ்யன் குருவினிடத்தில் வைத்த அன்பினால் அந்த பாத உதக தீர்த்தம் அவனுக்குப் பரமானந்தமாக தோன்றிற்று. அங்ஙனம் தோன்றுமோ எனின், தோன்றும். எங்ஙனமெனின் அன்பானது இரண்டுவிதம். அதில் லௌகீக இன்பத்தை நோக்கிச் செய்யும் அன்பு ஒன்று. பரமார்த்தீக இன்பத்தை நோக்கிச் செய்யும் அன்பு மற்றொன்று. அப்படி இருந்த போதிலும் அன்பு ஒன்றுதான். இதில் லௌகீக இன்பத்தை நோக்கிச் செய்யும் அன்பைப் பற்றி சிறிது காட்டுதும். திருக்குறள் 1121, "பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி, வால் எயிறு ஊறிய நீர்" இதன் உரையில் மெல்லிய சொல்லை உடையவளது தூய்மையான பற்களின் இடையில் ஊறிய நீரானது பாலொடு தேனைக் கலந்த கலவை போலும் என்றார். இதனால் மங்கையரது வாயில் ஊறும் உமிழ் நீரானது தேனும் பாலும் கலந்துண்ணும்போது உண்டான இனிமையைப் போன்றது என்பதாயிற்று. ஏன் அங்ஙனம் தோன்றியது எனின், அவளிடத்தில் வைத்த அன்பே அதற்குக் காரணமாம். இதுபோல் பரமார்த்தீகத்தில் அன்புள்ளவர்களுக்கு அதை அறிவிக்கும் குருவின் பாதோதகத் தீர்த்தம் உயர்வாகத் தோன்றும். இந்த பாதோதகத் தீர்த்தம் கிட்டினவர்களுக்கு குருவின் ஞானோபதேசமாகிய பிரமானந்தத் தீர்த்தமும் கிட்டும் என்பதற்கு ஐயமில்லை. இதை சிவஞான வள்ளலார் சாத்திரமும் கூறுகின்றது.

"தீர்த்தம் தேடித் திகைத்துத் திரிவீர்காள்
தீர்த்தமாவது தேசிகன் வாசகம்
தீர்த்தம் ஈதெனத் தேர்ந்து கொளாதவர்
தீர்த்தமாடியும் தேரை ஒப்பார்களே."

இதன் பொருள் வெளிப்படை. குரு-சிஷ்ய சம்பிரதாயத்தில் அஸ்த தீக்ஷை, திருவடி தீக்ஷை, ஸ்பரிச தீக்ஷை, நயன தீக்ஷை, பாதோதக தீக்ஷை எனப்படுவதெல்லாம் குருவின் அனுக்கிரகத்தையும், பெருமையையும் குறிக்கும் சொற்களாம். இதை சுவாமி விவேகானந்தர் சரித்திரம் 2ம் பதிப்பின் 102வது பக்கத்தில் "விவேகானந்த சுவாமிகள் பி.ஏ. படித்து இருந்தும், ஆத்ம ஞானத்தை அறியாது தட்டுக்கெட்டு தடுமாறிய காலத்தில், இராமகிருஷ்ண தேவரை அடைந்தார். இவர் மேல் பரமார்த்தீக அன்போடு விவேகானந்தருடைய மார்பில் குருதேவர் தமது வலக்கரத்தைப் பரிபூரண மனதுடன் வைத்து வாழ்த்தினார்" என்று கூறியிருப்பது அஸ்த தீக்ஷையின் பெருமையை அறியலாம் அல்லவா! இதுவும் குருவின் பெருமையை காட்டுகின்றது அல்லவா! மேற்படி சரித்திரம் 454வது பக்கத்தில், "சுவாமி விவேகானந்தர் மேற்கு நாடுகளின் விஜயம் முடித்துக்கொண்டு தாய்நாடு திரும்பும் வழியில் பாம்பனில் வந்து இறங்கினார். அப்பொழுது இராமநாதபுரம் ராஜா பாஸ்கர சேதுபதியவர்கள் அங்கு தயாராக வைத்திருந்த குதிரை வண்டியில் ஸ்வாமிகள் ஏறினார். உடனே பாஸ்கர சேதுபதியவர்கள் குதிரைகளை அவிழ்த்து விட்டு தாமும் தமது பரிவாரங்களும் சேர்ந்து வண்டியை இழுத்துக் கொண்டு போய் சபா மண்டபத்தில் இறங்கச் செய்து சுவாமிகளை வித்வத் சபையில் அக்ராசனாதிபதியாக அமரச் செய்தார்கள்" என்று கூறியிருப்பதால், இதுவும் பரமார்த்தீகத்தில் செல்லும் அன்பின் பிரவாக ரூபத்தை காட்டுகின்றதல்லவா! மேலும் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ச தேவரின் திவ்யசரித்திரம் ஸ்ரீவில்லிபுத்தூர் A.சீனிவாசாச்சாரியார் B.A., L.T., அவர்கள் எழுதிய சரித்திரம் 516வது பக்கத்தில், "சுவாமி விவேகானந்தரை ஒரு கட்டிலின்மீது உட்கார வைத்து ராமகிருஷ்ண தேவர் தமது வலது காலை விவேகானந்தர்மீது ஊன்றினார். திருவடி தீண்டப் பெறுதலும் புத்தம் புதியதோர் அனுபவம் உண்டாயிற்று என்றார் விவேகானந்தர்" என்னே குரு சிஷ்ய சம்பிரதாயத்தின் பெருமை. மேலும் ஞானவாசிட்டம் நிர்வாணப் பிரகரணம் 26, 27 கவிகளின் சாரம் வருமாறு :

தசரதச் சக்ரவர்த்தியின் ராஜ சபைக்கு விசுவாமித்திர ரிஷி விஜயம் செய்தார். உடனே அரசன் தக்க ஆசனத்தில் அமரச் செய்து விதிமுறைப் படி பாத பூஜைகள் செய்தார். வஸ்திரம், தட்சிணை, பழம், தாம்பூலம், பால் பொழியும் உயர்தரக் கறவை மாடுகள் முதலியவைகள் அளவிறந்தனவானச் சமர்ப்பித்த பின் கீழ்வருமாறு தமது மகிழ்ச்சியை தெரிவித்தார்.

"குருதேவா! உங்கள் வருகையினால் எனக்கு ஏற்பட்டுள்ள உவகைக்கு அளவில்லை. தேகத்தோடு ஆகாய கமனம் பண்ணினவன் போலும், உடலை விட்டு நீங்கிய ஜீவன் மீண்டும் உடலுக்கு வந்தது போலும், பாற்கடலில் தோன்றிய அமிர்த கும்பம் என்கையில் வந்தது போலும், குளிர்ந்த கங்கையில் முழுகினவன் போலும், சூரியனைக் கண்ட தாமரை மலர் போலும், குருடன் அடைந்த கண்ணைப் போலும், எனக்குண்டான இதுபோன்ற இன்பம் எக்காலத்தும் நான் அடைந்ததில்லை" என்று கூறியிருப்பதால், சான்றோர்களிடத்தில் ஏற்படும் பரமார்த்தீக அன்புக்கும் உண்டோ அடைக்குந்தாழ்? இல்லை என்பதாயிற்று. மேலும் ஆதிசங்கரர் காசியில் ஒரு வீதியின் வழியாக வரும்போது ஒரு ஹரிஜனப் பெரியார் அவர் எதிரே தோன்றினார். உடனே, "கெச்ச கெச்சேதி" என்றார். அதாவது, "விலகிப்போ, விலகிப்போ" என்பதாம். இதைக் கேட்ட ஹரிஜனப் பெரியார், "உனக்கும் எனக்கும் அன்னமய கோசமான சரீரத் திரயத்திற்கு உபாதான காரணம், குடத்திற்கு மண்போல் ஒன்றுதான். அதை விலகிப்போகச் சொல்ல முடியாது. சைதன்ய சொரூபமான ஆத்மா எனக்கும் உனக்கும் ஆகாயம் போல் ஒன்றுதான். அதையும் விலகிப்போகச் சொல்ல முடியாது. அப்படி இருக்க நீ எதை விலகிப்போகச் சொல்லுகின்றாய்" என்று கேட்டார். உடனே ஆச்சாரியர், "நீரே எனக்கு குரு ஆவீர்" என்று கூறி, மனீஷா பஞ்சகம் என்ற ஐந்து சுலோகத்தால் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்தார். இதனால் பரமார்த்தீக அன்பின் வாயிலாக குரு-சிஷ்ய சம்பிரதாயமின்றி உலகில் முத்தி பெற்றவர் யார். இதனாலன்றோ ஞானிகள் பெருமையைப் பற்றி பிரம்மகீதை கேன உபநிஷத அர்த்தம் பிரம்ம தேவன் கூறுகின்றான்.

ஈசனாம் ஞானி இருந்துள இடத்தே இருப்பது முத்திதான் அந்த
தேசிகன் ஏவல் செய்பவன்கால் என் சென்னியில் இருப்பது மன்னி
மாசிலாப் பரம ஞானியாம் முனிக்கு மகேசனும் ஒப்புஅலன் மதிக்கில்
ஆசிலா அரியும் ஒப்புஅலன் நானும் ஒப்புஅலன் ஏவர் ஒப்பாரே

இதன் பொருள் வெளிப்படை. மேல் காட்டிய ஆன்றோர் வாக்கியங்களின் பொருளை மனதிற்கொண்டு இந்நூலாசிரியரும், "குலவு சற்குருவின் பாதக்குளிர் புனல் தலைமேல் கொண்டார் உலகினில் தீர்த்தமெல்லாம் உற்றபேறு அடைவார் போல" என்று கூறி சற்குருவின் பெருமையை உணர்த்தினார். ஆனால் நித்திய வஸ்துவின் இலக்கணம் இன்னதெனவும், அநித்திய வஸ்துவின் இலக்கணம்

இன்னதெனவும் அறியாதார்க்கு இஃது ஒரு கதை போலும்! அங்ஙனமாயின் நித்திய வஸ்துவின் இலக்கணம் தெரிந்தவர்கள் இலரோ எனின் பலர் உளர். எக்காலத்தும் உளர். இந்நூல் நித்திய வஸ்துவின் இலக்கணம் கூற வந்ததே ஒழிய வேறன்று. எங்ஙனமெனின், ஒருபானை சோற்றுக்கு ஒருசோறு பதம் பார்ப்பதுபோல், நித்திய வஸ்துவின் இலக்கணம் தெரிந்த ஒருவரை எடுத்துக் கொள்வோம். ஆத்மபுராணம் 552ம் பக்கத்தில்,

"மிதிலாபுரிக்கு அரசனான ஜனகராஜன் தமது குருவாகிய யாக்ஞவல்கியரை நோக்கி ஹே! பகவன்! எனது மிதிலாபுரி எனப்படும் நாடு, நகரம், எனது மனைவி, மைந்தன், தாசன், தாசி, சதுரங்க சேனை மற்றுமுள்ள உடைமைகள் யாவும் தங்களுக்கு குரு தட்சிணையாகக் கொடுப்பினும், தாங்கள் எனக்கு கொடுத்தருளிய ஆத்மஞானத்திற்குச் சமானமாகாது. ஏனெனில் இவையாவும் அநித்தியப் பொருளாம். அதாவது அழியும் பொருளாம். தாங்கள் எனக்கு அளித்த ஆத்ம ஞானம் நித்தியப் பொருளாம். அதாவது அழியாப் பொருளாம். நித்தியப் பொருளுக்கு அநித்தியப் பொருள்களைக் கொடுப்பது ஈடாகாது. அதாவது சமானம் ஆகாது. பின் நான் யாது கொடுப்பேன்? ஆயினும் இவை யாவும் தங்களுக்கு குருதட்சணையாக ஜலத்தை விட்டு உண்மையாக கொடுத்து விட்டேன்" என்றார். இதைக்கேட்ட யாக்ஞ வல்கியரும், "நீ கொடுத்தவை யாவும் பெற்றுக் கொண்டேன். ஆனால் இவை யாவும் உன்னிடமே இருக்கட்டும். நீ ஆத்ம சொரூப நிச்சயத்தோடு இருந்து கொண்டு உலக விவகாரக் கருமம் செய்துவரக் கடவாய்" என்று ஆசீர்வதித்து தனது ஆஸ்ரமத்திற்கு ஏகினார் என்று கூறி இருப்பதால் நித்திய வஸ்துவின் இலக்கணம் தெரிந்து கொண்டவர்களின் நிச்சயம் தெரிந்து கொள்ளலாம் அல்லவா?

இந்த கைவல்ய நவநீதமென்னும் பிரபல நூலின் கருத்து யாவும் ஆதியந்தம் வரையில் ஆராய்ந்து பார்த்தால் தன் சொரூப சுபாவமாயுள்ள அகம் பிரமமென்னும் ஞானமே முடிவாகக் காணமுடியும். சர்வ வேதாகம இதிகாச புராணாதிகளில் கூறியுள்ள உண்மைப் பொருளும் இதுவேயாகும் என்பதை உத்தரகீதை இரண்டாம் அத்தியாயம் 48வது சுலோகத்தில் பகவான் அர்ச்சுனனை நோக்கி அருளிச் செய்திருப்பதைப் பாருங்கள். "எவன் வேத சாஸ்திரங்களை நன்றாய் ஓதியும் கேட்டும், தான் பிரமமென்று அறியவில்லையோ அவனுக்கு படித்த பிரயாசை மட்டும்தான் பலன்"

என்று கூறியிருப்பதால் அறியலாம். "சித்து நான் நிறைந்தோன் என்ற திடம் மறவாதிருந்தால்" என்று கூறும் அரைக்கவியே போதும் என்பதற்கு, பாலபோதம் 213வது பக்கத்தில் உள்ள ஒரு கவியைப் பாருங்கள்.

திருத்தகு கோடிநூலால் தெரித்திடு பொருள்கள் எல்லாம்
அரைச் செய்யுள் தன்னால் யானும் அறைகுவன் சாரமாகப்
பெருத்ததோர் பிரமம் மெய்யே பேசிடும் உலகு பொய்யாம்
அருத்தியல் சிவனே ஜீவன் அந்நியம் இல்லை சற்றும்

இக்கவியில், "பெருத்ததோர் பிரமம் மெய்யே" என்பதும், "பேசிடும் உலகு பொய்யாம்" என்பதும், "பிரமமே (சிவன்) ஜீவன்" என்பதும் ஆகிய இவை ஒருகோடி கிரந்தங்களின் உண்மைப் பொருளாம் என்பது உய்த்துணர்க. மேலும் இந்நூலின் கருத்து யாவும் ஞானவாசிட்டத்தின் ஒரு கவியால் அடங்கும் என்பதை கீழ்வரும் கவியில் காணலாம்.

வைராக்கியப் பிரகரணம் 24வது கவி

இறப்பிலா இந்த மோகம் இறையும் ஈட்டு எண்ணமின்றி
மறப்பதே நல்லதென்று மதித்து உயர் மனத்தினுக்குத்
திறப்படக் காணப்பட்டது இல்லெனச் சித்தினாலே
உறப்பெறும் எப்போது அப்போது உயர் பரசுக்மதாமே

இதன் பொருள் : தோன்றுகின்ற தேகாதிப் பிரபஞ்சம் அனாதியாகையால் இது எக்காலத்திலும் தோன்றிக் கொண்டேயிருக்கும். அங்ஙனம் தோன்றும் தோற்றப் பொருள்கள் யாவும் சத்தியம் என்ற எண்ணம் எள்ளளவும் வராமல் மறந்து விடுவதே நல்லது. அப்படி மறந்துவிட முடியாவிட்டால் அறிவையன்றி அறிபடுபொருள் அணுவளவும் இல்லையென்ற உறுதி உன்னிடத்தில் எப்பொழுது வைரமலை போன்று திடம் உண்டாகின்றதோ அப்போதே நீ ஆனந்தக் கடல் வடிவம் ஆவாய் என்பதாம்.

"சித்து நான் நிறைந்தோன் என்ற திடம் மறவாதிருந்தால் எத்தனை எண்ணினாலும் ஏது செய்தாலும் என்ன" என்பது இந்நூலாசிரியர் கண்ட முடிவாகும். அதுமட்டுமா நீ அச்சிச்சிதானந்தமாய் வேறொன்றும் நினைந்திடாது இருப்பாயாகில் மாயச்சத்திபோம் ஈதன்றி மந்திரம் மறைகளில் காணோமே. அதுமட்டுமா? ஆலமர்க்கடவுளாணை அவைக்

கெலாம் சாட்சி நீயே. அதுமட்டுமா? பிறந்ததுண்டானால் அன்றோ பிறகு சாவதுதான் உண்டாம். பிறந்ததேயில்லை என்னும் பிரமமாவதுவும் நானே. அதுமட்டுமா? நிறைந்ததே இந்த ஆன்மா நிதானம் இவ்வறிவுதானே. அதுமட்டுமா? பூரணமாகும் என்மேல் புவனங்கள் தோன்றுமென்று தாரணை வந்ததாகில் தரித்திடும் அவித்தை எங்கே. அது மட்டுமா? விஷயானந்தம் முதல் பதினோரானந்தமும் பிரமானந்தக் கடலின் நுரைகளாம். அதுமட்டுமா? ஆனந்த மயனே விஞ்ஞான மயனாம். அதுமட்டுமா? சுழுத்தியில் காணும் நிருபாதிக ஆனந்தமே விஞ்ஞானமயனாம். அதுமட்டுமா? தானன்றி வேறொன்றும் இலாத பூரண சச்சிதானந்தமாம். அதுமட்டுமா? சுசத்த தேகத்தில் இருந்திடினும் ஆனந்தக்கடல் வடிவாவாயே. அதுமட்டுமா? உன் போதமாய்ப் பூரணமாய் இருப்பாயே. அதுமட்டுமா? ஜீவபேத கற்பிதங்களை மறந்து நீ சின்மயமாவாயே. அதுமட்டுமா? விதன மாயை ஏன் வந்ததென்றால் புத்தி விசாரம் அற்றதினாலே. அதுமட்டுமா? மெய்யதேதெனில் சச்சிதானந்தமாய் வியாபிக்கும் ஆன்மாவே. அதுமட்டுமா? கண்ட வஸ்து மெய் தியான வஸ்துக்கள் பொய். அதுமட்டுமா? கனத்த கருமங்கள் நூறுயுகம் செய்யினும் காணுமோ காணாதே. அதுமட்டுமா? அரிய சமாதிகள் பழகுவனேல் அவன் ஆருடனுமன்றே. அதுமட்டுமா? ஆய்ந்து அறிவுற்றவன் அப்படி செப்பினும் ஆபாசனுமாகான். அதுமட்டுமா? விரதமிம் மூன்றுடையவரே வீடுள்ளோரே. அதுமட்டுமா? ஞானம் மெய் மகனே உன்னை நம்மாணை மறந்திடாதே. அதுமட்டுமா? திடமாக சுவானுபூதி சிவோகம் என்று இருந்திடாயே. அதுமட்டுமா? அறி பொருளாகும் உன்னை அனுபவித்து அறிவாய் நீயே. அதுமட்டுமா? ஞானத்திரம் என்றும் பிரமமென்றும் தெளிவதே அபவாதம் காண். அதுமட்டுமா? விமலபோத சொரூபத்தைப் பணிகின்றேனே. அதுமட்டுமா? காண்பவையெல்லாம் சொப்பனம் போல எண்ணித் துணிந்தவன் ஞானியாவான். அதுமட்டுமா? சொன்ன நடுப்பூமி வந்த ஞானிகளே பிரமவித்தாம் தூயமுத்தர். அதுமட்டுமா? இப்படிக் கண்டவெல்லாம் என்மயம் என்கனாப்போல் கற்பிதம் என்றுதானே காண்கின்ற சித்து நானே. அதுமட்டுமா? நான் என என்னைத்தானே நம்பி ஈடேறினேனே. அதுமட்டுமா? அந்தணர் நூல் மித்தையென விடல் தீவிரதரம். இன்னும் இவை போன்ற பல அரிய மகாவாக்கியங்கள் இந்நூலாசிரியரின் திருவாயில் நின்றும் வெளியாய் இருப்பதை துருவி ஆராய்ந்து தன் சொச்சொரூப ஸ்திதியில் இருப்பாயாக. இங்ஙனம் பிரம்மமே தன்

சொரூபமாக அறிந்தவர்களில் ஒருவரைப் பாருங்கள். ஆதிசங்கரர் வடநாடு திக்கு விஜயம் செய்யும்போது, ஸ்ரீவலி என்னும் கிராமத்தை அடைந்தார். அங்கு வசிக்கும் பிரபாகரர் என்பவர் தன் மைந்தனான பதிமூன்று வயதுள்ள சிறுவனை அழைத்துக் கொண்டு வந்து ஸ்ரீசங்கரரைத் தரிசித்து கீழ்வருமாறு கூறினார். சுவாமி இந்த சிறுவன் ஒருவரொடும் பேசுவதில்லை. விருப்பு வெறுப்பு ஏதும் இல்லை. மானாபிமானமும் இல்லை. ஒன்றிலும் முயற்சியும் இல்லை என்றார். இதை கேட்ட ஆசார்ய சுவாமிகளும் அந்த சிறுவனை நோக்கி நீ யார் என்று ஒரு கவியினால் வினவினார். அந்தக் கவி வருமாறு :

இங்குறு நீ யார் பிள்ளாய் யாருடை மைந்தன் நீதான்
எங்கு செல்கின்றாய் உன் பேரென்ன நீ எங்கிருந்து
இங்கு வந்தனை என்னுள்ளம் இன்புற இசைப்பாய் என்று
சங்கரன் நவிலப் பாலன் சாற்றிட வாய்திறந்தான்.

இதன் பொருள் வெளிப்படை. உடனே அந்தச் சிறுவனும் வாய் திறந்து கீழ்காணும் கவியால் பதிலளித்தான்.

நரன்அலன் சுரன் இயக்கன் நான்அலன் அந்தணன் மற்று
அரசனும் வணிகன் சூத்ரன் அல்லன் நற்பிரமசாரி
கிரகியும் வானப்பிரத்தன் கேடகல் சன்னியாசி
நிரையினில் ஆரும் அல்லேன் நிசபோத வடிவனாமே.

இதன் பொருள் வெளிப்படையாயினும் கடைசி அடியில் தன்னை போத சொரூபன் அதாவது அறிவு சொரூபன் என்று பதில் கூறி இருப்பதைக் கண்டு கொள்க. இந்த ஆச்சர்யகரமான பதிலைக்கேட்ட ஆச்சார்ய சுவாமிகளும் அந்த சிறுவனை நோக்கி, உத்தமனே! நீ கண்டு கொண்டுள்ள உண்மையான போத சொரூபத்தை தங்கள் தங்களுடைய ஆத்மாவாக அறிந்து உயர்வதற்கு அறியாத மக்களுக்கும் அறிவிக்க வேண்டி நீ என்னுடன் வருகின்றாயா? என்று வினவினார். சிறுவனும் அதற்கு இசைந்தான். குருநாதரும் அந்த சிறுவனின் தாய்தந்தையர்களிடம் விடைபெற்று வரும்படி அவனுக்குக் கட்டளையிட்டார். இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அந்த சிறுவனின் பிதாவானவர் ஆச்சர்யமும், ஆனந்தமும் அடைந்தார். அந்தச் சிறுவனும் மாதா பிதாக்களிடம் சென்று நமஸ்கரித்து கைக் கூப்பிக் கொண்டு, அம்மா எனக்கு அன்னம் அளிப்பாய். நான் வேதாந்தத்தைப் பரப்புவதற்காக உலகம் எங்கும் சென்று வருகிறேன்.

எனக்கு அனுமதி அளிப்பாயாக என்றான். இதைக் கேள்வியுற்ற தாயானவள் அன்பு மேலீட்டால் மகனைத் தழுவி முத்தமிட்டு என் கண்ணே! நீ இவ்வளவு காலமும் பேசாமல் இருந்துவிட்டு, இப்பொழுது மிக அழகாகவே பேசுகின்றாய். இதற்குக் காரணம் யாது எனக்கேட்டாள். அதற்குத் தனயனும் தனது தெய்வத்தாயை நோக்கி, அம்மா எல்லா மனிதர்களும் ஞானசொரூபிகளாய் இருந்த போதிலும், அதை அறியாதவர்களாய் இருக்கின்றார்கள் அதை அறிவிக்கக் கூடிய ஞானாச்சாரிய ஜகத்குரு வந்து விட்டார். அந்த மகாத்மாவோடு, நானும் சேர்ந்து உலகில் வேதாந்தத்தைப் பரப்ப வேண்டும். இதற்கு நீ அனுமதி அளித்தால், நீயும் முத்தியடைவாய் என்றார். இதைக் கேட்ட தாயும் அன்னமளித்து ஆசிகூறி அனுப்பினாள். சிஷ்யனும்-குருவும் உலக உபகார நிமித்தம் அவ்விடம் விட்டு ஏகினார்கள். பிற்காலத்தில் இந்தச் சிறுவனுக்கு அஸ்தாமலகர் என்ற தீக்ஷாநாமம் சூட்டி, வடதிசையில் உள்ள ஒரு மடத்திற்கு மடாதிபதியாக்கி, வேதாந்தத்தைப் பரப்பும்படி கட்டளை இட்டுவிட்டு, சங்கரர் பிறநாடுகளுக்கு விஜயம் செய்யச் சென்றார். ஆதிசங்கரருடைய நான்கு சிஷ்யர்களுள் இவர் ஒருவர் என்பது உலகப் பிரசித்தமாம். இவருக்கு அஸ்தாமலகர் என்று பெயர் வந்ததற்குக் காரணம் கீழ்வரும் கவியால் விளங்கும்.

அத்தத்தின் நெல்லி போல ஆன்மாவைக் காட்டலால் ஈது
அத்தாமலகத் தோத்ரம் ஆகும்பேர் பெற்றதன்றி
அத்தாமலகன் என்று அவ்வறிவினில் பெரிய பாலன்
இத்தரை யாவராலும் ஏத்திடப் பட்டானம்மா.

இதன் பொருள் வெளிப்படை. இவ்வாறு தன்னை உணரக் கூடியவர்கள் கோடிக்கு ஒருவர்தான் இருக்கக் கூடும் என்பதாயிற்று. சிஷ்யனே! மேலே காண்பித்த அஸ்தாமலகர் என்ற சிறுவன், தன்னை அறிவு சொரூபன் என்று அறிந்தது போல், நீயும் உன்னை பேரறிவு சொரூபனாக அறி. இந்த அறிவு சொரூபத்தைத் தான் பகவான் என்றும் கடவுள் என்றும் சகல சாஸ்திரங்களும் கூறுகின்றன.

ஞானவாசிட்டம் சுரகு கதை 29வது கவியில், "பகவானாகிய இந்த ஆத்ம தத்துவம் என்னும் ஞானமானது" என்றும், மேற்படி நூல் 28வது கவியில் "இந்த அறிவான சொரூபமே திருமால், பிரமன், ருத்ரன், தேவேந்திரன், யமன் முதலியவர்களிடத்தில் பல மணிகளுக்குள் ஒரே நூல் போல் எங்கும் நிறைந்து இருக்கின்றது" என்றும், மேற்படி நூல்

ஜனகராஜன் கதையின் 10வது கவியில் "அறிவும், அறிபடு பொருளும் கூடிய கூட்டுறவில் உண்டாகும் அறிவானந்தம் ஆத்மாவின் சொரூபமேயாம்" என்றும், 11வது கவியில் "நான் நான் என்று இடைவிடாமல் சொல்லிக் கொண்டிருக்கின்றதாயும் ஞானசொரூப மாயும், ஒவ்வொருவர் உள்ளத்திலும் இருக்கின்ற இந்த ஆத்மாவான தெய்வத்தை விட்டு, மற்றொரு தெய்வத்தை தேடுவது, தன்கையில் இருக்கும் இரத்தினத்தை எறிந்து விட்டு உடைந்த சிறு வளையலின் துண்டைத் தேடும் அறிவிலிக்கு ஒப்பாகும்" என்றும், மேற்படி நூல் மாபலிச் சக்கரவர்த்திக் கதை 45வது கவியில், மாபலிக்கு குரு உபதேசித்ததாவது, "சிஷ்யனே! சுருக்கமாகச் சொல்லுகின்றேன் கேட்பாய். இவ்விடத்தில் உள்ளதுவும் அறிவேயாம். தோன்றி விளங்குகின்ற யாவும் அறிவு சொரூபமேயாம். எல்லையுள்ளதுவும் எல்லையற்றதுவும், உள்ளிலும், வெளியிலும், நானும், நீயும் எல்லாம் அறிவேயாகும். உலகம் முழுவதும் நிறைந்து விளங்குவதும் இந்த அறிவேயாகும்" என்றும் கூறியிருப்பதால் பேரறிவே தெய்வம் என்பதாயிற்று. சிஷ்யனே! நீயே அந்த தெய்வ சொரூபமாம். அறிவற்ற எப்பொருளும் தெய்வமாகாது. பஞ்சபூதமும், அதன் காரியமான தேகாதிப் பிரபஞ்சமும் இந்த அறிவாலேயே விளங்குகின்றது என்பதை மகாகவி கம்பரும் தனது ராமாயண சுந்தர காண்ட காப்புச் செய்யுளில் கூறி உள்ளதைப் பாருங்கள். "அலங்கலில் தோன்றும் பொய்மை அரவெனப் பூதமைந்தும்" என்றார். இதில் ஐம்பூதமும் பழுதையில் தோன்றும் பாம்புபோல் பொய்யென்றார். இதில் அக்கினியும் ஒன்றாகும். இங்ஙனம் பொய்யான அக்கினியைத் தெய்வமாக மதித்து வழிபடுவது எவ்வளவு அறியாமையாகும் என்பதை யோசித்துப் பாருங்கள். சிஷ்யனே! உண்மையான தெய்வம் எது தெரியுமா? வசிட்டமாமுனிவர் தம் சிஷ்யனை நோக்கிக் கூறியிருப்பதை பாருங்கள். ஞானவாசிட்டம் தேவபூஜை கதை 20, 21, 23ன் சாரம் "நலத்தைத் தருகின்ற தெய்வம் யாதோவெனின், சரீரத்தோடு கூடிய விஷ்ணுவும் தெய்வமல்ல, சிவனுமல்ல, படைக்கும் பிரமனுமன்று, மனதுமன்று, ஆதியும், அந்தமும் அற்று உற்பத்தி நாச ரகிதமான செயற்படா அறிவே தெய்வமாம். இங்ஙனமாய தெய்வம் தேகம் முதலிய சடப்பொருள் களாக எங்ஙனமாகும்? ஆகாது. இந்த அறிவான தெய்வத்தை விட்டு பஞ்சபூதமாகிய சடப்பொருள்களைத் தெய்வமாகக் கருதுவது எதைப் போன்றது எனின், 15 மைல் தூரம் போகவேண்டிய ஒருவன், கூப்பிடு தூரம் போவதற்கு ஒப்பாம் என்பதாம். சிஷ்யனே! உண்மையான

தெய்வத்தைப் பற்றி மேலும் கேட்பாய். மேல் காண்பித்த வாசிட்டத்தின் கருத்தை ஸ்ரீவீரசுப்பையா சுவாமிகளின் உரையில், புண்டரீகாட்சனாகிய விஷ்ணுவும், திரிலோசனனாகிய பரமசிவனும் உண்மையான தெய்வம் அன்று. கமலோற்பவனாகிய பிரமனும், தேவேந்திரனும் உண்மையான தெய்வங்களல்ல. வாயுவும், சூரியனும், சந்திரனும், அக்கினியும், பிராமணனும், புவியை ஆளும் ராஜாக்களும் உண்மையான தெய்வமன்று. மேற்கூறிய விஷ்ணுவாதியோரிடத்திலும், நம்மனோரிடத்திலும், சர்வ உலகங்களிலும் நிறைந்திருக்கின்ற அறிவு சொரூபமே உண்மையான தெய்வமாகும். அந்த தெய்வ சொரூபமே நின் சொரூபமாம். சிஷ்யனே! இந்த ஞானத்தை ஒரு அரசனுக்கு அவன் மனைவியே குருவாக இருந்து உபதேசித்து அருளிய பெருமையைக் கேட்பாய். சூடாலை கதை 49வது கவி "இந்த உலகம் உண்டானதில்லை. உண்மையில் அறிவு சொரூபத்தைத் தவிர வேறொன்றுமில்லை. அந்த அறிவே நீயாக இருக்கின்றாய்" என்றாள். அரசனான சிஷ்யனும் தன் அனுபவம் கூறத் தொடங்கினான். மேற்படி கதை 142வது கவியில், "குருதேவா! தாங்கள் உபதேசித்தபடி சிந்தித்துப் பார்த்தேன். சடமான தேகாதி உலகம் நானன்று; இந்த மல சரீரமும், இந்திரியங்களும், மனதும், சித்தமும், புத்தியும், அகங்காரமும் நானல்ல. பின் நான் யாரென்னில் எல்லாவற்றையும் விளக்கிக் கொண்டிருக்கின்ற அறிவு சொரூபமே நான்" என்றான் அரசன். சிஷ்யனே! மேலும் ஞானிகளின் நிச்சயத்தைக் கேட்பாய். ஞானவாசிட்டம் அருச்சுனன் கதை 10, 11 கவிகளின் சாரம்-விஷ்ணு என்கின்ற பேரறிவு சொரூபன் அருச்சுனனை நோக்கி "ஹே! அருச்சுனா! உற்பத்தி நாசமின்றி இருக்கின்ற உனது ஆத்ம சொரூபத்தைப் பார். அறிவு சொரூபனாகிய நீ ஜனன மரணமின்றிய நித்தியனாய், அழிவற்றதாய் இருக்கின்றாய். அழிவெய்தும் இந்த சரீரத்தில் நீ அழியாதவனாய் இருக்கின்றாய். இந்த நிச்சயத்துடன் சகல கருமங்களையும் செய்வாய்". சிஷ்யனே! நீ யார் தெரியுமா? ஞான வாசிட்டம் உபசாந்திப் பிரகரணம் 10, 11 கவிகளின் சாரம், "அறிபடு பொருளைப் பற்றியும் பற்றாத அறிவு சொரூபமான பரமாத்மாவே நீயாம். இந்த நிச்சயத்துடன் ஆயிரம் காரியங்களைச் செய்தாலும் நீ ஜீவன் முத்தனாயிருக்கின்றாய் என்பதை அறிந்து இன்பமயப் பொருளாய் இருக்கக் கடவாய்." சிஷ்யனே! நீ எந்த நிச்சயத்தோடு இருக்க வேண்டும் எனின், நான் சச்சிதானந்த பிரம சொரூபனாய் இருக்கின்றேன் என்னும் நிச்சயத்தோடு இருப்பாயாக. சிஷ்யனே! நீ

யார் தெரியுமா? நீ ஜனன, மரணமில்லாத சுத்தப் பிரமம். தீனத் தன்மையை அதாவது நான் துக்கி என்னும் தன்மையை விட்டு உன் சொரூபத்தைப் பார். நீ பார்க்கப் படுவனவற்றை எல்லாம் பிரகாசிப்பிக்கின்றாய். உன் அஞ்ஞானத்தால் ஜகத்தை எல்லாம் நீ சிருஷ்டிக்கின்றாய். மறுபடியும் எல்லாவற்றையும் நாசம் செய்தும், நீ நாசமற்றவனாய் இருக்கின்றாய். மித்தியாப் பிரபஞ்சத்தைப் பார்த்து கொஞ்சம் கூட மன வருத்தத்தை அடைய வேண்டியதில்லை.

நீ தேவர்களுக்கெல்லாம் தேவனாய் இருக்கின்றாய். நீ சுக சொரூபியாயிருக்கின்றாய். மாயையினால் உன்னிடத்தில் ஜீவன், ஈசுவரன், ஜகத்து ஆகிய மூன்றும் விளங்குகின்றது. அது பழுதையில் பாம்பும், கிளிஞ்சலில் வெள்ளியும் விளங்குவது போலாம். சிஷ்யனே அழியத் தக்க தேகத்தில் அழியாத பிரமமே நீ என்று அறிவாயாக. இந்த நிச்சயத்தை அறிய முடியாது போனால் சோபானமாக அதாவது படிக்கிரமமாக பல உபாயங்கள் வேதத்தில் கூறப்பட்டுள்ளது. நான் பிரமசொரூபன் என்ற திடபோதமில்லாதவர்களுக்குப் பலவுபாயங் களைக் கூறுவது நூல் வழக்காகும். இதை சுவாமி விவேகானந்தர் சிகாகோ பிரசங்கத்தில் ஒரு சுலோகத்தால் விளக்கிக் கூறியிருக்கின்றார். அதாவது திரிசிரபுரம் தேசீய கலாசாலைத் தமிழ் ஆசிரியர் உறையூர் S.V.வரதராஜ அய்யங்கார் அவர்கள் எழுதிய விவேகானந்தர் சரித்திரம் 2ம் பாகத்தின் 348வது பக்கத்தில் உள்ள சுலோகம்.

உத்தமோ பிரம்ம சத்பாவ :
தியான பாவஸ்து மத்திம :
ஸ்துதிர் ஜபோ அதமோபாவ :
பகிர் : பூஜா அதமாதமா

இதன் பொருள் : இந்நூலாசிரியர் அத்தியாரோப, அபவாத கிரமப்படி எடுத்துக் காட்டிய பிரகாரம் சித்து நான் நிறைந்தோன் அதாவது பிரமமே நான் என்று அறிவது உத்தம சித்தாந்தமாம். பிரமத்தைத் தியானிப்பது மத்திம சித்தாந்தமாம். ஸ்துதியும், ஜெபமும் செய்வது அதம சித்தாந்தமாம். வெளி முகத்தில் செய்யும் பூஜைகள் அதமத்திலும் அதம சித்தாந்தமாம் என்று கூறியிருப்பதால் இந்நூல் ஆசிரியர் எடுத்துக் காட்டிய நான் பிரமமென்னும் நிச்சயம் உத்தம சித்தாந்தமாம். இதுவே வேதத்தின் உண்மைப் பொருளாம். சிஷ்யனே! நீ அதுவாயிருந்து எக்காலமும் வாழக்கடவாய்.

கைவல்ய நவநீதசாரம்
முற்றுப்பெற்றது

பிரம்மமே ஸத்யம்

## முடிவுரை

அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றுள் இன்பத்தை தேடிச் செல்வதுதான் எல்லா ஜீவராசிகளின் இயல்பு. மாந்தர் இதில் தலை சிறந்து விளங்குகின்றனர். பகலுக்குப் பின் இரவு மாறி வருவது போல, இன்பம் உண்டு என்றால் துன்பம் உண்டு. ஆகவே மாந்தருள் ஞானி ஒருவரே நிலைத்த ஆனந்தம் அல்லது சோக மோகம் அற்ற வீடு பேற்றை நாடி தம்முள் நிலைபெற செய்தவர் ஆவார். மேற்கண்ட புருஷார்த்தம் அடைவதின் இலட்சியம் வீடுபேறு ஆகையால், இவ்வீடுபேற்றை அடைவதற்கு விரும்பும் ஒவ்வொருவரும் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் எனும் வாய்ப்பினை பெறவேண்டும். இம்மூன்றையும் முறையாகப் பெறுவதற்கு தக்க குருமார்கள் கிடைப்பதே அரிதாக இருக்கும் இக்காலத்தில் மெய்ஞ்ஞான நாட்டமுள்ள அன்பர்கள் பிரபல சுருதிகளின் சாராம்சமாக விளங்கும் இக்கைவல்ய நவநீதசாரம் சந்தேகம் தெளிதல் படலம் என்னும் நூலை சுவாமி வாசுதேவானந்தா அவர்கள் வெளியிட்டுள்ளார்கள்.

மகாஞானி தாண்டவராய சுவாமிகளே மறு அவதாரமாக ஸ்ரீவாசுதேவானந்தா சுவாமிகளாக வந்து நம்போன்றோர் உய்ய மிகுந்த காருண்யத்துடன் தெளிவான உரை செய்திருப்பது நமது பாக்கியமே. புறப்பொருட்களிலே சாந்தியும், சமாதானமும் அடையக் கருதி தேடிச்செல்வது, தன் நிழலை புதைக்கக் கருதி குழிதோண்டும் செயல் போன்று பயனற்றதே. அத்தகைய செயல்கள் நிறைந்தும், மனிதாபிமானம் அருகியும் வரும் இக்காலத்தில், இகத்திலே பேத புத்தியை மாற்றி சமத்துவம், சகோதரத்துவம், உள்ளத் தூய்மையுடன் அமைந்த சாந்தியுற்ற வாழ்வே வீடுபேறு எனக்காட்டும் இந்நூலை சுவாமி அபேதானந்தா அவர்கள் வெளியிட்டுள்ளார்கள்.

ஜடப்பொருளாகிய புறப்பொருட்களிலே சுகமிருப்பதாகக் கருதி, நாயானது பசையற்ற வெற்றெலும்பைக் கடிப்பதுபோல பலவித வீண் செயல்களில் ஈடுபட்டுவரும் மனிதகுலம் சோக மோகத்தால் துன்பமடைவதும், சீர்த்திருத்தம் வேண்டியோ, சுயநலத்தாலோ மனிதரை மனிதர் கொன்று குவிக்கும் இந்நாளில், புறச்சீர்த்திருத்தம் நாடுவதும், புறப்பொருட்களில் சுகத்தைக் காண விழைவதும், மலடி மைந்தன் முயற்கொம்பை தேடுவது ஒப்பதாகும் எனக்காட்டும் இந்நூல், ஒவ்வொரு மனிதனின் அகத்தையும் சீர் செய்து உருப்படுத்தி தன்னில் உலகத்தையும், உலகத்தில் தன்னையும் காண்பானின்றி காணும் அபேத நிலைக்கு உயர்த்தும் ஓர் அருமருந்தாக அமைத்து வெளியிட்டுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா அவர்கள்.

மனக்கலக்கமுற்ற ராமனுக்கு அன்று வசிட்டர் கூறியது "சிந்தனை விரிவு பந்தமாம்; அதனை தீர்த்திடில் முக்தியாம்" என்னும் தாரக மந்திரமாகும். அன்று அரசன் எவ்வழி, குடிகள் அவ்வழி என்றிருந்த முடிமன்னர் காலம். இன்று ஜனநாயக காலம். அன்று ராமனுக்கு செய்த உபதேசம் இன்று பாரதத்தில் எல்லோரும் புரிந்து கொண்டால் பாரில் ஒவ்வொருவருக்கும் தேவை தெளிதல் சந்தேக நிவர்த்தியை அடிப்படையாகக் கொண்டு வலுப்பெறும் ஆதலால், இந்நூல் மெய்யன்பர்களுக்கு ஒரு வேத நூலாக அமைத்துத் தந்துள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா அவர்கள்.

"திடஞானி தரிசனமே சிவத்தைக் காணல், அத்தேசிகன் வாசகமே தீர்த்தமாடல்" என்றும் சிவஞான வள்ளலார் வாக்கிற்கிணங்க சித்து-சட ஆராய்ச்சி செய்து ஆத்மா, அனாத்மா விசாரணை மூலம் இச்சரீரம் யாது? சரீரி யாது? என்ற கேள்வியால், அவைகளுக்கான விடைகளின் மனனத்தால், கிளர் சுருதியால் மறைப்பு நீங்கி, திடஞானம் பெற்று பெருங்கனவான இவ்வுலகமெனும் நாடக மேடையில் நின்றும் வீடுபேறு அடையச் செய்துள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா அவர்கள்.

"சித்தென அருமறைச் சிரத்தில் மேவிய தத்துவம் அவன் அது தம்மை தாம் உணர் வித்தகர் அறிகுவர்..." என்னும் கம்பர் பிரான் வாக்கிற்கொப்ப தன்னை சட தேகமாகப் பாராது, சித்சொரூபமாகக் காணும் குருவின் அருள் பெற்ற ஞானவிருப்பம் உடையோர் எவ்வித சந்தேகமும் இன்றி மனச்சிக்கற, சாக்ஷாத்கார நிலையிலிருந்து உலகினை வெருட்டாது, உலகால் வெருளாது இன்சொல் உடையோராய், சாந்தராய், சமநோக்குடையவராய், சகோதரத்துவம் உடையோராய் எவ்விதக் கவலையும் அற்ற வீடு பெற்றோராய், விசிராந்தியாய் நீந்தும் ஆற்றலுடன், சிந்தித்து அடங்கா மனமகிழ்வு உடையோராய் வாழ்ந்துய்ய சுவாமிகள் எழுதிய இந்நூல் யாவற்றிலும் தலைசிறந்து விளங்குகின்றது. "உடம்பினைப் பெற்ற பயனாகுவ தெல்லாம் உடம்பினுள் உத்தமனைக் காண்பதே" என்னும் ஔவைக் குறளுக்கு இணங்க யான் பெற்ற பேறு இவ்வையகமெல்லாம் பெறுக என்று, அன்பார்ந்த வாசகர்களை இந்நூலைப் படித்துப் பயனடையுமாறு வேண்டுகின்றேன்.

இங்ஙனம்
**சுவாமி சத்யானந்தா** என்கிற
**S.வேணுகோபாலன்** M.A., B.Com., B.T.,
தலைவர் - பிர்ம வித்யா பீடம், திருவாரூர்

## கைவல்ய நவநீத நூலாசிரியரது மாணாக்கருள் ஒருவர் அவரையும் அந்நூலையும் வியந்து துதித்தல்.

அண்ணல் தன் அருளினாலே அகம்புறம் இன்றி ஒன்றாய்
எண்ணமில் இலக்கியார்த்தத்தின் பொருள் அதுநான் என்ன
நண்ணின சரீரமாதி நாதத்தின் உபாதி என்றே
கண்ணதாய் அனைத்தும் காணக் காட்டினன் தாண்டவேசன் 1

ஆன்ற பதமாம் மூன்றற்கும் அது நீ ஆனாய் எனும் பொருளில்
சான்ற துரியாதீதம் எனும் தடையற்று இலங்கு ஒண் சைதன்னியம்
ஊன்றி உணர்ந்தோர் விகற்ப மயக்கு ஒழித்துத் தடையும் ஊடறுத்துத்
தோன்றித் தானே தானாவர் துலங்கும் தமக்கே சுவானுபவம் 2

என்னும் மாவாக்கியம் நான்கும் இசைக்கும் வித்தியானந்தம்
சொன்ன நாராயணன் பாதம் தொழுது துதித்தோர் துகளற்றோர்
இன்ன மாணாக்கன் குருவால் சந்தேகம் தீர்ந்திடு பதத்தே
துன்னி நிறைந்து நின்றோர்கள் தூயமுத்தர் ஆகுவரே 3

தத்துவ விளக்கத்தாலும் சந்தேகம் தெளிதலாலும்
ஒத்து இருள் விடாத மாயா உள்ளிருள் இரிய ஓங்கும்
சித்ததாம் ஒளி விளங்கச் செய்து பின் விருத்திபேதப்
புத்தியால் வரும் ஐயத்தைப் புரையறத் தெளிவித்து ஆண்டான் 4

ஆண்ட தேசிகனாம் ஐயன் நாரணன் அனந்தன் பாதம்
பூண்டு அ(வ்)வாரோபத்தால் பொய்ம்மயக்காய் வந்தத்தை
மாண்ட நல் அபவாதத்தால் மாய்த்து அருள் நோக்கத்து என்றும்
காண்டிட வைத்தளித்த காரணா போற்றி போற்றி 5



## கைவல்ய நவநீதச் செய்யுளின் முதற்குறிப்பு அகராதி

## கைவல்ய நவநீதச் செய்யுளின் முதற்குறிப்பு அகராதி

# கைவல்ய நவநீதச் செய்யுளின் முதற்குறிப்பு அகராதி

## கைவல்ய நவநீதச் செய்யுளின் முதற்குறிப்பு அகராதி

## கைவல்ய நவநீதச் செய்யுளின் முதற்குறிப்பு அகராதி



சமாதி ஆலய உட்புறத்தோற்றம்



குருபூஜை நிகழ்வின்போது

கணபதி பதிப்பகம்

1/349,திருப்பூர்க்குமரன் தெரு, பாடியநல்லூர்,சென்னை - 600 052.